புதியது

# பால் அடங்கிய
# ஃபாரெக்ஸ்
# திட உணவு

# அதிக சுவையானது
# அதிக முழுமையானது




**நீங்கள் பாசத்துடன்
ஊட்டும் ஒவ்வொரு கவளமும்
உங்கள் பாப்பாவின்
வளர்ச்சிக்குச் சிறந்ததாகும்.**

பால் அடங்கிய ஃபாரெக்ஸ் திட உணவு. இதைக் கலப்பது எளிது. பாப்பாவுக்கு ஊட்டுவதும் எளிது.

பால் அடங்கிய ஃபாரெக்ஸ் திட உணவு. பாப்பாவின் வளர்ச்சிக்கு இன்றியமையாத புரதம் நிரம்பியது. மிக ஆரோக்கியமான இரத்தத்திற்குக் கூடுதல் இரும்புச்சத்து கொண்டது. உறுதியான பற்களையும் எலும்புகளையும் பெற சரியான விகிதத்தில் கால்ஷியமும் ஃபாஸ்ஃபரஸும் அடங்கியது. பாப்பாவின் மென்மையான ஜீரணசக்திக்கென முன்கூட்டிப் பக்குவம் செய்தது.

பால் அடங்கிய ஃபாரெக்ஸ் திட உணவு. ஒவ்வொரு கவளத்திலும் அதிக முழுமையான திட உணவு.

CLARION/B/GX/3/203 Tml



# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி 1984



கஸ்தூரிரங்கன்



உமாசந்திரன்



சமுத்திரம்



கலாதாக்கர்

இந்த ஆண்டு அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டிக்கு நடுவர்களாக இருக்க முன் வந்தவர்கள்:

1. திரு. கஸ்தூரி ரங்கன் ஆசிரியர், தினமணி கதிர்.
2. திரு. உமாசந்திரன் —எழுத்தாளர், அ. இ. ரேடியோவில் உயர் பதவி வகித்து ஓய்வு பெற்றவர்.
3. திரு. சு. சமுத்திரம் — எழுத்தாளர், சென்னை தொலைக் காட்சி நிலையத்தில் பொறுப்பான பதவியில் இருப்பவர்.
4. டாக்டர் திருமதி கலா தாக்கர் — பன்மொழி இலக்கிய ஆய்வாளர், வைணவக் (பெண்கள்) கல்லூரி விரிவுரையாளர்.
5. ஆசிரியர், கல்கி

நடுவர்கள் ஜூலை 22-ந் தேதி கூடி விவாதித்துப் பின் வரும் சிறுகதைகளைப் பரிசுக்குரியன என்று தீர்மானித்தனர்:

**முதல் பரிசு ரூ. 1000**
**பிரளயம்**
எழுதியவர்: **ராதா வசுமித்திரன்**
(டி. பார்வதி),
3/10, இரண்டாவது மாடி, நேரு நகர் நாலாவது மெயின் ரோடு
அடையாறு, சென்னை-20.

**இரண்டாம் பரிசு ரூ. 500**
**நிமிடத்திற்கு ஒரு நிறம்**
எழுதியவர்: **ஜெரா** (ஸ்ரீ. ஜெயராமன்)
ஜூனியர் என்ஜினியர்,
ஆர். வி. பிளாண்ட்,
மேட்டூர் அணை-636 403.

**மூன்றும் பரிசு—தலா ரூ. 250**
(இரு கதைகளுக்கு)
**தீவுகளாகும் உறவுகள்**
எழுதியவர்: **ஜானகிமகன்**
(த. சௌந்தர்ராஜன்),
38, ஹவுஸிங் யூனிட்,
கல்லூரி சாலை, திருப்பூர்-2.

**தாயம்மா கிழவி**
எழுதியவர்: **ஸ்ரீவத்ஸன்**
(நா. சுப்பிரமணியம்),
38/1, மெயின் ரோடு,
புதுப்பாளையம், கடலூர்-1.

பரிசு பெற்ற சிறுகதைகள் தவிர பிரசுரத்துக்கு ஏற்கப்பட்டவை விவரம் அடுத்த வாரம் பிரசுரமாகும்.

நடுவர்களுக்குக் கல்கி நேயர்கள் சார்பிலும் கல்கி நிறுவனம் சார்பிலும் நன்றி. போட்டியில் வெற்றி பெற்றவர்களுக்கு இதய பூர்வமான நல் வாழ்த்து.

புகைப்படங்கள்: உத்ரா

குளோஸ் அப்

# ஈழத்தில் ஒரு நடிகர் திலகம்



சினிமாக்காரர்கள் அரசியலுக்கு வரலாம்; அரசியல்வாதிகள் சினிமா எடுக்கலாம்; ஆனால் — சினிமாத் துறையுடன் சம்பந்தப் படாத ஒருவர் நாட்டின் ஜனாதிபதியாய் இருப்பதும் — அவர் ரொம்ப நன்றாக நாடக மாடத் தெரிந்தவராய் இருப்பதும் ஸ்ரீலங்காவில் மட்டுமே நடக்கிறது. ஆமாம்! ஜெயவர்த்தனே போன்ற ஒரு சிறந்த நடிகர் வேறு யாராவது உண்டா என்பது சந்தேகமே! அவரது நடிப்புத் திறமைக்கு ஆஸ்கார் அவார்டே தரலாம்.

நம் ஊரில் எல்லா அரசாங்க அலுவலகங்களிலும் இந்திராகாந்தி படம் மாட்டி வைத்திருப்பது போல, அங்கே அதிபர் ஜெயவர்த்தனே படம் — கைகளைக்கூப்பியபடி அமைதியின் மொத்த உருவமாய் — தர்மத்தின் பாதுகாவலர் போல — மாட்டி வைத்திருக்கிறார்கள்.

நான் போயிருந்த சமயத்தில் ஜெயவர்த்தனேயின் உறவுக்காரப் பிள்ளை — பெயர் பிலிப் உபிலி - பிஸினஸ் விஷயமாய் கிழக்கத்திய நாடுகளுக்குப் போய் விட்டு, திரும்பும் போது, பாதி வழியில் விமானமே காணாமல் போய் விட்டது. ஜெயவர்த்தனே நிலைகுலைந்து போயிருந்தார். இலங்கையிலே ஒரே பரபரப்பு. காணாமற் போன விமானத்தைத் தேடும் முயற்சி தீவிரமாய் நடந்து கொண்டிருந்தது.

(உபிலியைப் பற்றி: இலங்கையின் மிகப் பெரிய பணக்காரர். தன் வாரிசாக உருவாக்கிக் கொண்டிருந்தார் ஜெயவர்த்தனே. நான் இந்தியா வந்த பிறகு, அந்த விமானத்தின் சில பகுதிகள் மலாக்கா பகுதியில் கண்டுபிடிக்கப்பட்டன என்று அறிந்து கொண்டேன்.)

ஜனாதிபதியின் பத்திரிகைச் செயலாளர் ரொம்பக் கஷ்டப்பட்டு, அப்பாயிண்ட்மெண்ட் வாங்கித் தந்தார். காலை பத்தே முக்காலுக்கு ஜனாதிபதியின் அறைக்குள் சென்றேன்.

சுத்தமான அறை. வரிசையாய் டெலிபோன்கள். அரசாங்க அலுவலக போட்டோக்களில் இருப்பது போல — ஆனால் கைகளை மேஜையில் ஊன்றியபடி — உட்கார்ந்திருந்தார். 77 வயது ஆனாலும், இளமையாகவே தோற்றமளித்தார். வெள்ளைச் சட்டை, வேட்டி, தீர்க்கமான பார்வை.

மலைத்தோட்டப் பிரதிநிதிகளும் அரசு அதிகாரிகளும், பேச்சு வார்த்தை நடத்தக் காத்திருப்பதாய்ச் சொல்லி, அவர்களை முதலில் சந்தித்து விடுகிறேனே என்றதும், நான் தலையசைத்தேன். பேச்சு வார்த்தை நடக்கவிருந்த ஹாலுக்கு வரச் சொன்னார்.

அந்தப் பேச்சு வார்த்தை நடவடிக்கை களைக் கவனித்ததிலிருந்து, ஜெயவர்த்தனே தன்னம்பிக்கையும், எந்தப்பிரச்சினையானாலும் முடிவு தமக்குச் சாதகமாய் அமையுமாறு பார்த்துக் கொள்கிற திறமையும் கொண்டவர் என்பதைத் தெரிந்து கொண்டேன்.

அதனால் தான் எனக்குப் பெருத்த சந்தேகம்! ஈழத் தமிழர் பிரச்சினையில் 'நான் ஒன்றும் செய்ய முடியாத நிலையில் இருக்கிறேன்' என ஜெயவர்த்தனே சொல்வதை என்னால் நம்ப முடியவில்லை. ஏதோ சில காரணங்களால் இப்படி நடிக்கிறாரோ என எண்ணத் தோன்றுகிறது.

ஜெயவர்த்தனேயிடம் என்னைக் கவர்ந்த இன்னும் இரு விஷயங்கள் அவரது ஆழ்ந்த மான நகைச்சுவை உணர்வும், எந்தக் கேள்வியானாலும் நிதானமாய்க் கேட்டுச் சரளமாய் அதே சமயம் அழுத்தம் திருத்தமாய்ப் பதில் சொல்கிற முறையும்.

ஜெயவர்த்தனேயைச் சுருக்கமாய் விமர்சிக்க வேண்டுமெனில் அவர் 'தந்திரத்தில் நரி; நழுவுவதில் விலாங்கு மீன்!'

அனிதா பிரதாப் கூற எழுதியவர்:
என் சந்திரமௌலி

(அடுத்த வாரம்: என். டி. ராமராவ்)

○ அனிதா பிரதாப்



# யோகாசன மகிமை

**முன்னுரையாகச் சில:**

முதலில் உலகம் மகிழ்ச்சி நிறைந்ததாக அமைய வேண்டும். அப்புறம் குடியிருக்கிற வீடு மகிழ்ச்சியானதாக இருக்க வேண்டும். மூன்றாவதாக நாம் ஆனந்தமாக வாழ வேண்டும். இந்த நிலைக்கு வழியமைப்பவை யமம், நியமம், ஆஸனம். பதஞ்சலி முனிவர் வரிசைப்படுத்திய எட்டு நிலைகளில் மூன்று இவை. மற்ற ஐந்து: பிராணாயாமம், பிரத்யஹாரம், தாரணம், த்யானம், ஸமாதி. எட்டுப் படிகளில் முதலில் சொன்ன யமம், நியமம், ஆஸனம் மூன்றையும் பகிரங்க சாதனை (External Practices) என்று பெரியவர்கள் வகைப் படுத்தியிருக்கிறார்கள்.

உலக சந்தோஷம் என்பது சத்யம், அஹிம்ஸை, பிறன் பொருள் கவராமை, பிரும்மச்சர்யம் என்கிற சுயக்கட்டுப்பாடு. அளவுக்கு மேல் பொருளைச் சேர்த்து வைக்



# பத்மாசனம்

காத மனப்பக்குவம்... இவற்றைப் பின்பற்ற முயல்வதால் அமையும்.

வீட்டில் எப்படி மகிழ்ச்சி நிலவுவது? குடும்ப வாழ்க்கையில் தூய்மையாக இருப்பது, ஆத்ம திருப்தியோடு செயல்படுவது, எடுத்துக் கொள்கிற காரியத்தில் அக்கறையும் உறுதியும் நிலவுவது... நம்மை நாமே புரிந்து கொண்டு எல்லாம் அவன் செயல் என்று நடந்து கொள்வது... இவற்றால் அழகான வாழ்க்கை அமையும்.

ஒழுங்கான முறையில் குடும்பம் நடத்தினாலே, அவன் யோகிதான். மேலைநாட்டுப் பிரசாரங்களினால் ஆஸனக் கலைக்கு யோகா என்று பெயர் வந்து விட்டது. ஆனால் யோக மார்க்கத்தின் ஆரம்பக் கட்டப் படிதான் ஆஸனம். ஆஸனம் நமது ஆனந்தத்துக்கும் அதன் உடன் விளைவாகக் குடும்ப ஆனந்தத்துக்கும் பின்விளைவாக உலக ஆனந்தத்துக்குமே உதவும்.

உடம்புக்கு வலுவும், தசைகளுக்கு உறுதியும், நரம்புகளுக்குப் புத்துணர்ச்சியும் கிடைக்கச் செய்வது இந்த ஆஸனப்பயிற்சி. டாக்டரை அண்ட விடாமல் செய்கிற சாதனையையும் முறையான ஆஸனப்பயிற்சி வழங்கிவிடும்.

சுவாசம் என்கிற உயிர் மூச்சைஇழுத்து அடக்கிக், கட்டுப்படுத்துவது ஒரு பயிற்சி... பிராணாயாமம் என்கிற இந்தப் பயிற்சியால் மூளையின் ஆற்றலை நன்கு பயன்படுத்த முடியும்... உறுதியான மனநிலை ஏற்பட்டு ஐம்புலன்களையும் அடக்கி வசப்படுத்த முடியும்.

நம்முடைய முன்னோர்கள் கண்டறிந்து, பின்பற்றிப் பெருமை சேர்த்த இந்த ஆஸனக் கலையை இன்றைய தலைமுறையினர் முறையாகப் பயில வேண்டும். சென்னையிலும், வெளியிலும் யோகாஸனப் பயிற்சி நிலையங்கள் உள்ளன. தனிப்பட்ட முறையிலும் பலர் இந்தக் கலையைக் கற்றுத் தருகிறார்கள். 'கல்கி'யும் தன் பங்காகச் சில அடிப்படையான எளிய யோகாசனப் பயிற்சிகளைப் பெற உதவுகிறது. சுருக்கமான முறையில் யோகாசனப் பயிற்சி விளக்கங்களைத் தருகிறோம். ஒவ்வொரு வாரமும், ஒவ்வொரு யோகாசன நிபுணர் ''எது எப்படி?'' என்று சொல்கிறார். இதைப் படித்து ஆஸனங்கள் பழகலாம். **குருவை நாடிப் பயில்வது இன்னும் சிறந்தது.** முக்கியமான விஷயம்:

பிடிவாதமாக உடலை வருத்திக்கொண்டு எடுத்த எடுப்பிலேயே ஆசன நிலையின் பூரண நிலையை அடைய முயலவே கூடாது. சிறிது சிறிதாக முன்னேறுங்கள். பத்மாசனத்தில் ஒரு காலை மட்டுமே இன்னொரு கால் மீது வைக்க முடிகிறது என்றால் அத்துடன் நிறுத்திக் கொள்ளுங்கள். வலிக்க வலிக்க அடுத்த நிலையை அடைய முயலாதீர்கள். விட்டுப் பிடித்து, கொஞ்சம் கொஞ்சமாக உடலை வழிக்குக் கொண்டு வந்து பூரணத்துவத்தை அடைய பிரயத்தனப் படுங்கள். இது எல்லா ஆசனங்களுக்கும் பொருந்தும் முக்கியமான விதி. **அசிரத்தையும் கூடாது; அளவுக்கு மீறிய ஆர்வமும் கெடுதல்.**

முதல் கட்டுரையில் ''பத்மாஸனம்'' விளக்கப்படுகிறது. விளக்கமளித்து விவ

ரங்கள் சொல்பவர் யோகாலயா சுப்பிரமணியம் அவர்கள்... தொழில் முறையில் வழக்கறிஞரான இந்த இளைஞர், நிறையப் பேருக்குப் பயிற்சியளித்து வருகிறார்.

**பத்மாசனம்: பயிற்சிமுறை**

ஜமுக்காளம் போன்ற மிருதுவான விரிப்பின் மீது கால்களை நன்றாக நீட்டி அமர்ந்து கொள்ள வேண்டும். முதுகு வளையாமல் நேராக நிமிர்ந்து இருக்க வேண்டும்.

வலப்புறப் பாதத்தின் கட்டைவிரலைப் பிடித்துப் பாதத்தை இடது துடையின்மீது வைக்கவும். பிறகு இடது பாதக் கட்டைவிரலைப் பிடித்து இழுத்துப் பாதத்தை வலது துடையின் மீது வைக்கவும். இரண்டு குதிகால்களும் அடிவயிற்றைத் தொட வேண்டும். இரண்டு பாதங்களும் ஒன்றாக மேல்நோக்கி இணைந்திருக்கும் போது, பத்து விரல்களுடன் தாமரை மலர்ந்த மாதிரி இருக்கும். இதனால் தான் இதற்குப் பத்ம (தாமரை) ஆசனம் என்று பெயர்.

இரண்டு கால்களின் முட்டியும் தரையோடு படிந்திருக்க வேண்டும். பின்னர் முதுகு எலும்பை நேராய் நிமிர்த்தி, நெஞ்சை நிமிர்த்தித் தோள்பட்டைகளைப் பின்னுக்கித் தள்ளி இரண்டு கைகளையும் முட்டியில் படும்படி தளர்ந்த நிலையில் வைக்கவேண்டும். தலையை முதுகெலும்புக்கு நேரே இருத்தி, கண்களை மூடிக் கொண்டு இயல்பாகச் சுவாசிக்க வேண்டும்.

விரும்புகிறவர்கள், மனத்தை ஒருமுகப் படுத்தித் தங்கள் இஷ்ட தெய்வத்தை நினைத்து ஜபம் செய்யலாம். பிறகு மெல்லக் கண்களைத் திறந்து, அமைதியாகச் சில விநாடிகள் இருந்த பிறகு சமநிலைக்கு வரலாம். மெல்லப் பாதங்களைத் துடையிலிருந்து எடுத்துக் கால்களை நன்கு நீட்டிப் படிப்படியாகப் பழைய நிலைக்கு வரவும். குறைந்த பட்சம் ஐந்து நிமிடங்கள்.. அதிகபட்சம் இருபது நிமிடங்கள்.

தினமும் குறிப்பிட்ட நேரத்தில், குளித்த பிறகுதான் காற்றோட்டமான இடத்தில் யோகாசனங்களைப் பயிலவேண்டும். ஆசனங்களைச் செய்யும்போது அவசரம் காட்டவோ பரபரப்பு அடையவோ கூடாது. மனமும், உடலும் அமைதியாகச் செயல்பட வேண்டும். போதிய அளவு நேரம் இதற்கு ஒதுக்கப்படவேண்டும். இடையில் வேறு எந்தக் காரியத்துக்கும் எழுந்து போகக் கூடாது. இவை முக்கியமான விதிகள்.

தியானத்தோடு கூடிய யோகப் பயிற்சியால் இரத்த அழுத்த நோய் குணமடைகிறது என்று அமெரிக்க டாக்டர்கள் குழு ஒன்று அண்மையில் ஆராய்ந்து கண்டறிந்துள்ளது.

'சோம்பலாக இருக்கிறதே' என்று யாராவது சொன்னால் அதற்கு மருந்து இந்தப் பத்மாசனம் தான். சோம்பேறித்தனம், மலச்சிக்கல், முதுகெலும்புக்குறைபாடுகள், இவற்றைப் போக்கி மனத்தைச் சமநிலைப்படுத்துவது இந்த ஆசனம் தான்.

முட்டிகளுக்கு நல்ல இரத்த ஓட்டம் வரும். கணுக்கால்களுக்கு உறுதியை ஏற்படுத்தி வளையும் தன்மையைச் செம்மையாக்கும். கால்களும் தொடைகளும் அழகான வடிவம் பெறும். உணவுச் செரிமானம் ஒழுங்காக அமையும். மார்பு முன்புறம் வந்து விரிவடைவதால் சுவாசக் கோளாறுகள் நீங்கும். அமைதியான நிலையில் மனத்தை வைத்திருக்கப் பழக்கமாவதால் அறிவு விருத்தியடையும்.

பேட்டி, கட்டுரை: சுப்ரபாலன்

புகைப்படம்: தாமோதரன்



# அன்பார்ந்த நேயர்களுக்கு...

"அன்பார்ந்த இளைஞர்களுக்கு...." என்று கூடத் தலைப்புத் தந்து இந்தக் கடிதத்தை எழுதலாம். கல்கி பத்திரிகைக்கு இளைஞர்கள் நலனில் என்றைக்குமே அக்கறை உண்டு. மாணவர் பக்கம், எதிர்காலம் உங்கள் கையில், கல்லூரி மாணவர்களுக்கு நாடகப் போட்டி; கல்லூரிகளிலேயே கல்கி நடத்திய 'குவிஸ்' போன்ற எத்தனையோ பல அம்சங்களை இளைஞர்களுக்காகவே தந்திருக்கிறது கல்கி என்பது மட்டுமல்ல, கல்கி இதழ் முழுவதுமே அவர்கள் நலனை மனத்தில் கொண்டு தயாரிக்கப்படுவதுதான். எனவேதான் வியாபார நோக்கில் ஆபாச அநாகரிகங்களைப் புகுத்தாமல் ஆரோக்கியமாக நடத்தப்படுகிறது. விருப்பு, வெறுப்பின்றியும் கட்சி சார்பின்றியும் தலைவர்களின் கருத்துக்களையும் செயல்களையும் விமர்சிப்பதும் எதிர்கால இந்தியாவின் உரிமையாளர்களான இளைஞர்களைக் கருதித்தான்.

இந்த ஆண்டு மலருடன் இடம்பெறும் இலவச இணைப்பு இளைஞர்களுக்கு ஊக்கமும் உற்சாகமும் அளிப்பதற்காகவே. 'படித்துப் பயன் என்ன? காலேஜில் ஸீட் காத்துக் கிடக்கிறதா?' என்றும் 'பட்டம் பெற்றுப் பயன் என்ன? உத்யோகம் கிடைத்துவிடப் போகிறதா?' என்றும் அங்கலாய்க்கிற இளைஞர்கள் நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே வருகிறார்கள். சிந்தனா சக்தியும் உழைப்பார்வமும் இருந்தால் இப்படி மனமொடிந்து போகத் தேவையில்லை. நம்மைச் சுற்றிக் கவனமாகப் பார்த்தால் சம்பாதிக்க எத்தனையோ வழிகள் உள்ளதைக் காண்போம். ரொம்ப வசதி உள்ளவர்கள்தான் தொழில், வியாபாரம் என்று ஆரம்பிக்க வேண்டுமென்பதில்லை. சிறிய முதலீட்டுடன் தொடங்கி நாளடைவில் பெருக வாழலாம். இலவச இணைப்பில் கூறப்பட்டுள்ள தொழில்களைத்தான் ஒருவர் மேற்கொள்ளவேண்டும் என்பதில்லை. இவை போல் இன்னும் எத்தனையோ! உன்னி நோக்கி நமக்கு ஏற்ற பாதையை வகுத்துக் கொள்ளலாம். அதைரியமடையத் தேவையில்லை. இதை உணர்த்துவதே "வாழ்க்கை வளம் பெற..." என்ற இலவச இணைப்புப் பகுதியின் நோக்கம்.

இந்த ஆண்டு மலரில் நேயர்களின் ரசனைக்குகந்த வேறு பல சிறப்பு அம்சங்களும் ஆரம்பமாகின்றன. இவையும் சரி, இனி இடம் பெறப் போகிறவையும் சரி, களிப்பூட்டும் போதே கருத்துச் செறிவுள்ளவையாகவும் பரவசத்தில் ஆழ்த்தும் போதே பயன் தருவனவாயும் இருக்கும். எல்லாமே இளைஞர்களைக் கவரக் கூடியன. எனினும் ஒரு சிறப்புப் பகுதியை முக்கியமாகக் குறிப்பிட வேண்டும். அது: "யோகாசன மகிமை."

ஒரு சொந்த அனுபவத்தை இங்கு விவரிப்பதில் தவறில்லை. 38 ஆண்டுகளுக்கு முன் யோகாசன நிபுணர் திரு. வி. என். குமாரசாமி என் தகப்பனார் அமரர் கல்கி அவர்களைக் காண வந்தார். பேச்சினிடையே கல்கி அவர்களுக்கிருந்த ஆஸ்துமா தொந்தரவைப் பற்றி அறிந்து அதைக் குணப்படுத்தவும் முன் வந்தார். "என் சமாச்சாரம் கிடக்கட்டும்; என் மகனுக்குப் பன்னிரண்டு வயதாகிறது; பிறந்ததிலிருந்து வியாதி கொண்டாடிக் கொண்டிருக்கிறான். சதா மருந்து, டானிக், ஊசி இத்யாதிதான். அவனை ஆரோக்கியமானவனாக்குங்கள்" என்றார் அமரர் கல்கி. அன்று தொடங்கி இன்று வரை தினம் 40 நிமிடங்கள் யோகாசனத்துக்காக ஒதுக்கி வருகிறேன். ஒரு தடவை கூட டாக்டரிடம் போக நேர்ந்ததில்லை. எப்போதாவது அபூர்வமாகத் தலைவலி, ஜுரம் என்று வந்தாலும் தானாகவே மூன்று நாளில் குணமாகி விடும்.

இளைஞர்களுக்கு யோகாசனத்தை நான் சிபாரிசு செய்வதற்குக் காரணம் அது உடல் ஆரோக்கியம் பேணுவது மட்டும் அல்ல, மன ஆரோக்கியத்தையும் காப்பாற்றுகிறது என்பதுதான். அஞ்சாத நெஞ்சம், கலங்காத உள்ளம், வாழ்க்கையின் மேடுபள்ளங்களைச் சம நிலையுடன் எதிர்கொள்ளும் துணிவு, கோபமற்ற நிதானப் போக்கு, மன அமைதி இவற்றைப் பெறலாம். இதை விட முக்கியமாகச் சராசரி மனிதர்களுக்குள்ள பலவீனங்களை வெற்றி கொள்ளலாம்! சிகரெட், மது, போதை மருந்துகளுக்கு அடிமையாதல், சிற்றின்பம் தேடல், லாட்டரி போன்ற சூதாட்ட மோகங்கள் இவற்றிலிருந்து நம்மைக் காத்துக் கொள்ளும் முயற்சிகளுக்கு தியானத்துடன் கூடிய யோகாசனப் பயிற்சி பெரிதும் துணை நிற்கும். மனோபலம் பெருகும்.

யோகாசனத்தின் மகிமையை எவ்வளவுதான் விவரித்தாலும் போதாது. அனுபவித்துப் பார்க்க வேண்டும் அது அளிக்கின்ற பரமானந்த நிலையை.

அன்புடன்,

(கி. ராஜேந்திரன்),
ஆசிரியர், கல்கி.

பார்லிமெண்ட் விவாதத்திற்கு முன்..











விவாதத்திற்குப் பின்!





# கல்கி



1984 ஆகஸ்டு 5
மலர் : 43 இதழ் : 1
ரக்தாக்ஷி ஆடி 21




## லதா

லதா — பெயரைக் கேட்டதுமே காஷ்மீரத்திலிருந்து கன்னியாகுமரி வரை லட்சோப லட்சம் உள்ளங்கள் உவகையால் துள்ளியபடி மதுர கீத மிசைக்கும். சுமார் 40 ஆண்டுகளுக்கு மேலாக இந்திய மக்களின் இதய சிம்மாசனத்தில் கொலு வீற்றிருந்து தமது குரலினிமையால் அனைவரையும் ஆகர்ஷித்து ஆண்டு கொண்டிருக்கிறார் அவர்.

''டப்பா சங்கீதம்'' என்று கல்கி அவர்களால் இடித்துரைக்கப்பட்ட இசையையும் அவர் அளித்ததுண்டு; மிக உயர்ந்ததான ஹிந்துஸ்தானி இசையையும் கொடுத்ததுண்டு. மக்கள் அவரவர் விருப்பம் போல் ஏற்றுக் கொண்டார்கள். சினிமா இசையின் வடிவம் மாறித் தரம் தாழ்ந்ததென்றால் அதற்கு லதாவைக் குற்றவாளியாக்க முடியாது. தயாரிப்பாளர், இசையமைப்பாளர்களையும் கால மாறுபாடுகளையும் மேற்கத்திய மோகத்தையும் தான் குறை கூற வேண்டும்.

1 9 4 2--ல் பாட ஆரம்பித்தார் லதா. எத்தனை பாடல்களை இசைத் தட்டுக்களில் பதிவு செய்தோம் என்பது அவருக்கே தெரியாது! இருப்பினும் 1948 முதல் 74 வரை உள்ள 26 ஆண்டுகளில் லதா தமது தேன் குரலால் 20 இந்திய மொழிகளில் 25,000 பாடல்களை இசைத்தட்டுக்களில் பதிவு செய்திருக்கிறார் என்பதாகக் கணக்கிட்டு, அதன்பொருட்டு அவர் கின்னஸ் சாதனைகள் புத்தகத்தில் இடம் பெற்றிருக்கிறார். புத்தக வெளியீட்டாளர்களே லதாவை லண்டனில் அழைத்துப் பாராட்டிக் கௌரவித்திருக்கிறார்கள்.

மிக அதிகமான அளவில் இட்டிலி சாப்பிட்டும் கின்னஸ் புத்தகத்தில் இடம் பெறலாம்! ஆனால் இதுபோன்ற சாதனைகளால் பெருமையில்லை. லதாவின் சாதனையோ நம் நாட்டுக்கு ஏராளமான அளவில் அயல் நாட்டவரின் நன்மதிப்பையும் நட்புறவையும் பெற்றுத் தந்துள்ளது; பெருமளவில் அந்நியச் செலாவணி சம்பாதித்துத் தந்து நமது தேசத்தின் பொருளாதாரத்துக்கு உதவியிருக்கிறது; உள்நாட்டில் ஒருமைப்பாட்டை வளர்த்திருக்கிறது. சீன ஆக்கிரமிப்பின் போது தேசிய உணர்வூட்டவென்றே அவர் பாடிய பாடல் நேருஜியின் கண்களைப் பனிக்கச் செய்தது. இவ்வளவு பேரும், புகழும், செல்வமும், செல்வாக்கும், சாதனைத் திறனும் பெற்றுள்ள லதா அடக்கமே உருவாக விளங்குவதால் பெருமைப்படுகிறோம்.

''கேவலம் சினிமாப் பாடல்களைத் தானே உதிர்த்துத் தள்ளுகிறார்? சாஸ்திரீய ஹிந்துஸ்தானி இசைக்கு ஒன்றுமே செய்யவில்லையே?'' என்று குறை கூறுவோர் உண்டு. ஆனால் சாஸ்திரீய ஹிந்துஸ்தானி இசை பயில்பவர்களைக் கேட்டுப் பாருங்கள்! ''நல்லவேளை லதா இந்தப் பக்கம் வரவில்லை; வந்தால் எங்கள் கதி என்ன ஆவது?'' என்று ரகசியமாகவேனும் ஒப்புக் கொள்வார்கள்! லதாவின் இசைஞானம் எத்தகையது என்பது அவர்களுக்குத் தெரியும்! ''வேறு யாருமே முன்னுக்கு வர முடியாமல் செய்துவிடுகிறார்'' என்பது இன்னொரு குற்றச்சாட்டு. மிகப் பிரபலமாக விளங்கும் எல்லோர் மீதும் பொதுவாகச் சுமத்தப்படும் பழிதான் இது. ''பிறர் முன்னுக்கு வருவதை நானா தடுக்கிறேன்?'' என்கிறார் லதா. மற்றவர்கள் புகழ் பெற வேண்டுமாயின் லதா ஒதுங்கிக் கொண்டால்தான் உண்டு. ஆனால் படாதிபதிகளும் ரசிகர்களும் அதற்கு அனுமதித்தால்தானே?

என்றாலும் ஒரு புதிய தலைமுறை இசைத்துறையில் பிரகாசிக்கவும் சாஸ்திரீய இசை ஆர்வம் மக்களிடையே பெருகவும் பக்திபூர்வமான இசை அவர்களை நல்வழிப்படுத்தவும் லதா முயற்சி மேற்கொண்டால், அது ''கின்னஸ் சாதனை''யைவிடப் பெரியதொரு சாதனையாக விளங்கும்.

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்

# கொலைக்கு ஒரு அழைப்பு

யாரோ வரும் சத்தம் கேட்கிறது. ஜன்னலைத் திறக்கிறேன்.

ஓடி வருகிறாள் ப்ரியா.

''எதற்கு அவசரமாய் ஓடி வருகிறாய்?''

''இந்த இன்லண்ட் லெட்டரைப்பாருங்க புரியும். எங்கப்பாவுக்கு வந்தது.''

அடித்தல் திருத்தலில்லாத எழுத்துக்கள்.

பிரபல டாக்டர் ராஜசேகரை வர்ற எட்டாந்தேதி கொல்லப் போவதாகச் சொல்கிறது இன்லண்ட் லெட்டர்.

இன்று தேதி ஏழு.

''அமெரிக்காவில் வெற்றிகரமாக ரிசர்ச் பண்ணினதுக்காக, நாளைக்கு ஒரு பார்ட்டி வேற நடக்குது.''

''கொஞ்சம் தீவிரமான விஷயந்தான். ஆனா, பயப்படாதே.''

''எழுதினவன் விளையாட்டுக்கு எழுதலை. எனக்கென்னவோ... உங்களைத்தான் நம்பியிருக்கேன்.''

''விடு. நான் பார்த்துக்கறேன்... சரி, இது உங்கப்பாவுக்குத் தெரியுமா?''

''இன்னும் சொல்லலை.''

இன்லண்ட் கடிதத்தை மறுபடி ஒருதரம் படித்தாள்:

''உன் ஆணவத்தை ஒழிக்கும் நேரம் வந்து விட்டது. ஆமாம், சரியாக எட்டாந் தேதி உன்னைக் கொல்லப் போகிறேன். போன மாதம், என் மனைவி தற்கொலை செய்து கொண்டதற்கு நீதான் காரணம். ஆகவே....

நிச்சயமாய் உன்னைக் கொல்லப் போகிறேன். நிச்சயமாய்.

உன் எமன்,
எஸ். ஜே.''

யாரிவன் எஸ். ஜே.

மின்னலடிக்கும் யோசனை.

சுறுசுறுப்பாகிறேன். ''ஹலோ, எஸ்.ஜே. ஐ'ம் கமிங் ''

சில விநாடிகளில் என் ப்ரீமியர் லேப்ரிக்குள் நுழைகிறது. விஷ் பண்ணிச் சிரிக்கும் அட்டெண்டர் சந்தானத்தைச்சந்திக்கிறேன்.

போன மாத தினசரி பேப்பர் பூராவும் புரட்டினால் அந்தச் செய்தி:

அன்று நகர் வங்கியில் வேலை பார்ப்பவர் எஸ். ஜான். இவரது மனைவி மேரி (24). பல நாட்கள் வயிற்றுவலியால் அவதிப்பட்டதாகத் தெரிகிறது. இதனால் மனமுடைந்த மேரி, ஜங்ஷனிலிருந்து புறப்பட்ட எக்ஸ்பிரஸ் முன் பாய்ந்து தற்கொலை செய்து கொண்டாள். ரயில்வே போலீஸ் ஏட்டு சுப்ரமணியம் உடனே ஸ்தலத்திற்குச்சென்று விசாரணை நடத்தினார்.

எஸ். ஜான் எஸ்.ஜே... விசிலடிக்கிறேன்! (எதிரிலிருப்பவர் முறைக்கிறார்.)

அப்புறம் ஏட்டு சுப்பிரமணியத்தைப் பார்த்து, அட்ரஸ் பெறுவதில் அதிக சிரமங்களில்லை. எஸ். ஜே. யின் வீட்டுக்கு ப்ரீமியரில் விரைகிறேன்.

வீட்டு மாடி சென்று பெல் அடிக்க, அழுக்குகிர்ர்ர்ர்ர்றேன். ஸ்மார்ட்டாக ஒரு இளைஞன் வருகிறான்.

''எஸ். ஜான்ங்கறது...?''

சந்தேகக் கருக்கங்களோடு மேலும்கீழும் பார்த்தபடி—

''நான்தான்.''

''உண்மையிலேயே டாக்டர் ராஜசேகரைக் கொல்லப் போறியா?''

மிரண்டு பின் சிரிக்கிறான்.

''நீங்க போலீசா?''

''இல்லை.''

''அப்பாடா...'' மூ தருகிறான்.

''சொல்றேன். அங்க பாருங்க.''

ஒரு அழகிய பெண் சிரித்துக்கொண்டிருக்கிறாள் சுவரில்.

''மேரி என் மேரி. ராஜசேகர் நினைச்சிருந்தா காப்பாத்தியிருக்கலாம். அமெரிக்காவில ரிசர்ச் உடனே போகணும்னுட்டார்... எவ்வளவோ கெஞ்சினேன்... சம்மதிக்கலே. ஏற்கெனவே துடிச்சிட்டிருந்த மேரி மனசொடிஞ்சுப் போய்த் துண்டு. துண்டா துண்டு துண்டாப்...''

குரல் விம்மி மௌனமாகிறான். திடீரென்று கோபமாய் ''இதுக்கெல்லாம் காரணமான அந்த ஆளைக் கொல்லாம விட மாட்டேன்.'' என்று இரைகிறான்.

''அதுவரை பேப்பர் படிச்சிட்டிருப்பேன்னு நினைக்கறியா?''

''அதுக்குதான் இப்ப உன்னைக் கட்டிப் போடப் போறேன்'' என்றபடி கயிறோடு வருகிறான். வேகமாய் எழுகிறேன். தலை சுற்றுகிறது.

'ஜாஸ்கல் டீயில் ஏதோ கலந்து...'

சூரியச் சூடு என்னை எழுப்புகிறது. போன நூற்றாண்டில் மயங்கிய மாதிரி நினைவு. நேரத்திற்...கக் கையைத் தூக்கிய போது அது தோளுடன் கட்டப்பட்டிருப்பதை உணர்கிறேன். சிரமப்பட்டுக் கடிகாரத்தைப் பார்க்கிறேன்.

தேதி எட்டு. மணி ஏழு சொச்சம். —பத்து மணிக்கு விருந்து.

சிகரெட் வாசனையுடன் கதவைத் திறந்து வருகிறான். ''எந்திரிச்சிட்டியா? நல்ல தூக்கம் போலிருக்கு.''

# மாணவர் பக்கம்

''தேங்க்ஸ்'' என்றபடி ஒரு விரலைக் காட்டுகிறேன்.

''சாரி கோபால் வருகிற வரை ஒரு இன்ச் கூட நகர முடியாது.''

''டாக்டரைக் கொல்லப் போறது வேலைக்காரன் கோபால் தான். விருந்திலே பரிமாறப் போறான்... டாக்டர் கிளாசில தெளிக்கத் தேவையான சயனைட் கொடுத்திருக்கேன்.''

அவனிடம், :''ஒரு சிகரெட்'' என்றேன்.

வாயில் செருகிப் பற்ற வைத்து நகர்கிறான். தப்பிக்க வழிகளை யோசிக்கிறேன். ஒரே ஒரு வழிதான் இருக்கிறது.

ஜன்னல் வழியே சிகரெட்டைப் பலமாகத் தூ....ப்புகிறேன்.

திடீரென்று, வெளியே புகைப் பந்துகள் தெரிகின்றன. கீழே ஒரே கூச்சல், படாரென்று கதவைத் திறந்து வருகிறான் அவன்!

''டேய் நீ செஞ்ச வேலையா இது?''

''ஏண்டாக்... நீ என்ன தைரியமிருந்தா சிகரெட்டை அணைக்காம எங்க குடிசை மேல போடுவே'' என்று ஒரு மீசைக்காரன் அலறியபடி நுழைகிறான்.

ஜான் அவசரமாய்ச் சிகரெட்டைத் துப்பி விட்டு: ''நான்... நான்... நானில்லே''.

''பொய் சொல்றான். அந்த ஜன்னல் வழியா எறிஞ்சதை நானே பார்த்தேன்'' என்கிறான் ஒருவன்.

பதில் சொல்வதற்குள், ஜானை அடிக்கிறார்கள். மீசை காட்டுத்தனமாய் அடிக்கிறான் — மறுபடி நடமாட எப்படியும் ஒரு கோடி விநாடிகளாவது தேவை.

ரெண்டு பேர் என்னை உடன் பார்த்து:

''உன்னை ஏன்யா, கட்டிப் போட்டிருக்கான்?''

''சொல்றேன். முதலில அவுத்துவிடுங்க.''

என் பதிலை ஆ...வலுடன் எதிர்பார்த்தபடி அவிழ்க்கின்றனர்.

''முதல்ல போன் பண்ணீங்களா?''

''ஆமாம்'' என்கிறது வெளியே தீ வண்டி சத்தம். வாட்சைப் பார்க்கிறேன். ஒன்பது—



ஐம்பது. "ஓ மைகாட்" அவர்களது கத்தலை அலட்சியம் செய்து படிகளில் பாய்கிறேன்.

வளைவுகளில் கிரீச்சிட்டு முழுவேகத்தைத் தொடுகிறது ப்ரீமியர். அந்த கோபால் ராஸ்கல், சயனைடைத் தெளிப்பதற்குள் போக வேண்டும். இல்லாவிட்டால்...

எனக்கு வியர்க்கிறது.

ப்ரியாவின் வீட்டை அடைகிறேன். பல கார்களின் மத்தியில் நிறுத்திவிட்டு, உள்ளே ஓடுகிறேன்.

மெலிதாக லைட் மியூசிக். பல பெரிய மனிதர்கள் அங்கங்கே சிரித்து — சிரிக்க முயன்று கொண்டிருக்கிறார்கள்.

சுறுசுறுப்பாய்ச் சுற்றிக் கொண்டிருக்கும் சர்வர்களில் ஒருத்தனைக் கூப்பிட்டு,

"யார் சர்வர் கோபால்?"

"அவர் தான்..."

அவனைத் தனியே இழுத்துச் சென்று கேட்கிறேன். "எங்கே அந்த சயனைடு?"

"என்ன சொல்றீங்க...?" என்கிற அவன் வாயை என் கைகள் உண்மை பேச வைக்கின்றன.

"அவர் சொன்னபடி, டாக்டர் கிளாசுல அப்பவே பொடியைப் போட்டுட்டேங்க."

அவனைச் சுவரில் தள்ளி விட்டு, மெயின் ஹாலுக்கு ஓடுகிறேன். கொஞ்ச தூரத்தில், பெரிதாகச் சிரித்தபடி ஏதோ பேசிக் கொண்டிருக்கிறார் டாக்டர். கையில் மஞ்சள் திரவம் நிரம்பிய கிளாஸ்...

அதைக் குடிப்பதற்குள் தடுக்க வேண்டும். சூழ்நிலையைக் கலவரப்படுத்தாமல் செய்ய வேண்டும். செய்... செய்... செய்...

விரைகிறேன். கூட்டத்தைக் கடந்து ரொம்ப வேகமாய்ப் போக முடியவில்லை. அதற்குள்...

ஓ! சியர்ஸ் அடித்துவிட்டுக் குடிக்கத் தொடங்குகிறார்.

பக்கத்தில் போவதற்குள் பாதியைக் குடித்துத் தொலைத்து விட்டார்.

அசந்து போய் நிற்கிறேன்.

டாக்டர் என்னைப் பார்த்துவிட்டு,

"ஏய் வா, வா. நீ எப்ப வந்தே?"

பக்கத்திலிருக்கும் நண்பர் வழுக்கை —

"டே, டேய்... பார்த்துப் பிடடா. அந்தக் கிளாசை விட்ட மாதிரி இதையும் விட்டுடாதே."

பத்து நிமிடங்கள் பேசிக் கொண்டே காத்திருக்கிறேன். டாக்டருக்கு ஒன்றும் ஆகவில்லை. ஆரோக்கியமாய்ச் சிரிக்கிறார்.

வழுக்கை சொன்ன மாதிரி, சயனைடு கிளாசைத்தான் சற்றுமுன் அவர் நழுவவிட்டிருக்க வேண்டும். பெருமூச்சு விடுகிறேன்.

இப்போது தான் என்னைக் கவனிக்கும் ப்ரியா ஓடிவந்து—

"வாங்க, வாங்க. ஏன் இவ்வளவு லேட்?"

அமைதியாய் ஷர்ட்டிலிருக்கும் இன்லண்ட் லெட்டரை எடுத்துக் காட்டுகிறேன்.

ஜீ. சி கண்ணன்,

பி.காம் (இறுதி) அஞ்சல் வழி கல்வி
மதுரை காமராஜ் சர்வ கலாசாலை
மதுரை—2

# "முகமூடிகள்" வந்தால்

போட்டி: 14



முகமூடிக் கொள்ளைக்காரர்கள் உங்கள் வீட்டுக்கு விஜயம் செய்தால் என்னசெய்வீர்கள்? ரசமாகவும், சுருக்கமாகவும் கீழே எழுதி இந்த அரைப் பக்கத்தைக் கத்தரித்து அனுப்பவும். உறை மீது "முகமூடிகள் வந்தால்..." எனக் குறிப்பிடவும். பிரசுரமானால் பரிசு. தவிர குலுக்கல் முறையில் ஒருவருக்குப் பட்டுப் புடவை.

முடிவு தேதி: 20.8.84.

**39 பட்டுப்புடவைகள் காத்திருக்கின்றன. ஆண்கள் பரிசு பெற்றால் பிரியமானவருக்கு வழங்கலாமே! வாரம் தவறாமல் போட்டிகளில் பங்கு பெறுங்கள்.**

என்பெயர் : ..............................

விலாசம் : ..............................

..............................

# பட்டுப் புடவை பரிசுத் திட்டம்

# சொல்லுங்களேன்!
# குடும்பத்தின் மிகவிருப்பமான ஆரோக்கிய பானமாக ஹார்லிக்ஸ் இருப்பது ஏன்?

## ரூ.5 லட்சத்திற்கும் அதிகமான பரிசுகளைப் பெறுங்கள் தமிழ் நாட்டில் மட்டுமே!



### முதல் பரிசு

ரூ. 75,000க்கும் அதிகமான பெறுமானமுள்ள ஒரு சொகுசு அம்பாசடர் மார்க் IV கார்.



### 5 இரண்டாவது பரிசுகள்

மின்னும் தங்கநகை செட்டுகள், ஒவ்வொன்றும் ரூ. 25,000 மதிப்புடையது.



### 200 மூன்றாவது பரிசுகள்

அருமையான ஃபிலிஃப்ஸ் 'டு-இன்-ஒன்', ஒவ்வொன்றும் ரூ. 1,500-க்கும் அதிகமான மதிப்புடையது.

**மேலும்**

**800 முந்திக் கொண்டோர் பரிசுகள்!**

மாதத்தில் இரண்டுமுறை, முதல் 200 பூர்த்தியான நுழைவுத்தாள்கள் ஒவ்வொன்றுக்கும் ரூ. 50 பெறுமான பரிசு.

8320

## குடும்பம் முழுவதற்குமான ஒரு போட்டி

அனைவரும் பங்குக்கொள்ளக் கூடிய ஒரு எளிய போட்டியில் 1000-க்கும் அதிகமான கவர்ச்சிகர- மான பரிசுகளை ஹார்லிக்ஸ் வழங்குகிறது. கீழே 4 படங்கள் கொடுக்கப் பட்டிருக்கின்றன—ஒரு டாக்டர், ஒரு குடும்பத்தலைவி, ஒரு பாட்டனுர், ஒரு குழந்தை. பக்கத்தில், அவர்கள் ஹார்லிக்ஸை ஏன் விரும்புகிறார்கள் என்று 4 கருத்துகள் கொடுக்கப்- பட்டிருக்கின்றன.

நீங்கள் செய்யவேண்டியது இவ்வளவே—இந்த கருத்துக்களை யார் யார் சொல்லியிருப்பார்கள் என்று இணைக்கவேண்டும். உதாரணமாக, டாக்டர் (A) கூறியது (2) கருத்து. இப்பொழுது, நீங்கள் எந்த படத்திற்கு எந்தக் கருத்து சிறப்பாக பொருந்- துகிறது என்பதைப் படங்களுடன் பொருத்திக் காட்டுங்கள்.

நுழைவுத்தாளில் உள்ள கோடிட்ட இடத்தில் நாங்கள் உதாரணத்தில் காட்டியுள்ளது போல பதில்களை எழுதி நிரப்புங்கள்.

## பிறகு...

பின்வரும் வாக்கியத்தை பூர்த்தி செய்யுங்கள்—'ஹார்லிக்ஸ் குடும்பத்தின் மிகவிருப்பமான ஆரோக்- கிய பானம், ஏனெனில்....'

## நீங்கள் எத்தனை நுழைவுத்தாள்களை வேண்டுமானாலும் அனுப்பலாம்

கீழே கொடுக்கப்பட்டிருக்கும் நுழைவுத்தாளை நீங்கள் பயன்படுத்தலாம். அல்லது உங்கள் அரு- கிலுள்ள ஹார்லிக்ஸ் கடையிலிருந்து உங்கள் நுழைவுத்தாளை வாங்கிக் கொள்ளலாம். ஒவ்வொரு நுழைவுத்தாளுடனும் 450 g. அல்லது 800 g. அல்லது 1000 g. ஜாடியின் உட்புற அலுமினிய தகடு 'சீல்' ஒன்றை இணைத்து அனுப்பவேண்டும். நினைவிருக்கட்டும்: ஒவ்வொரு மாதம் முதல் தேதி- யும் மற்றும் 16-ம் தேதியும் வந்து சேரும் பூர்த்தி- யான முதல் 200 நுழைவுத் தாள்களுக்கு பிரத்யேகப் பரிசுகள் கிடைக்கும். ஆகையால், நீங்கள் முந்திஞல், இப்பரிசைப் பெறுவதுடன் மற்ற பரிசுகளுக்கும் தகுதியுடையவர்களாக இருப்பீர்கள். நுழைவுத்தாளை முகவரிக்கு தபாலில் அனுப்புங்கள்: ஹார்லிக்ஸ் ஃபாமிலி கான்டெஸ்ட் எச் எம் எம் லிட்., போஸ்ட் பேக் நம்பர்: 5637 சென்னை-600 006.

## விதிகள் மற்றும் வரைமுறைகள்

1. நுழைவுத்தாள்களை தமிழிலோ, அல்லது ஆங்கிலத்திலோ எழுதி அனுப்பலாம்.
2. எச்எம்எம் லிட், எச்டிஏ மற்றும் பாரி அண்ட் கோ லிட். ஊழியரோ, மற்றும் அவர்களது குடும்பத்தினரோ இதில் கலந்துகொள்ள முடியாது.
3. நுழைவுத்தாள்கள் சாதாரணத் தபாலில்தான் அனுப்பவேண்டும். பதிவுத்தபாலிலோ, நேரிலோ, அல்லது குறைவான தபால்தலை ஒட்டி அனுப்பினுலோ ஏற்றுக்கொள்ளப்பட மாட்டாது.
4. நுழைவுத்தாள்களை சுதந்திரமான ஒரு நடுவர் குழு மதிப்பிடும். முற்றிலும் திருத்தமான நுழைவுத்தாள்களும், அவைகளில் எழுதிய வாக்கியங்களில் எல்லாவற்றையும்விட சிறந்ததாக கருதப்படுவதே தேர்ந்தெடுக்கப்படும்.

விதிகள் மற்றும் வரைமுறைகளின் விவரங்களிற்கு நுழைவுத்தாளுடன் உங்கள் விற்பனையாளர்களிடம் விசாரிக்கவும்.

A. டாக்டர்



B. குடும்பத்தலைவி

1. குழந்தைப் பருவத்திலிருந்து 60 வருடங்களுக்கும் மேலாக நான் நம்பிக்கை வைத்துள்ள பழக்கம் இது. இந்த நாட்களில் நீங்கள் எவ்வளவு விஷயங்- களைதான் நம்பமுடிகிறது.

2. ஆம், நான் அதை அருந்து- கிறேன்! எனது நோயாளிகளை- யும் ஒரு நாளைக்கு இருமுறை ஹார்லிக்ஸ் குடிக்கும்படி சிபாரிசு செய்கிறேன்.

C. பாட்டனுர்



D. குழந்தை.

3. ஹார்லிக்ஸ் எவ்வளவோ சுவையாக இருக்கிறது! அம்மா எனக்கு அதைப் பாலு- டன் கலந்துத் தருகிறுள். ஆனுல் நான் அதை அப்படியே சாப்பிடுவேன்!

4. என் குடும்பத்தின் ஆரோக்- கியத்துடன் நான் விளையாட முடியாது. இப்பொழுது பால் இருக்கிற நிலையைப் பார்க்கும் போது, ஹார்லிக்ஸில் எனக்கு முழுபலனும் கிடைக்கிறது.





| A. | B. | C. | D. |
| --- | --- | --- | --- |
| 2 | | | |

'ஹார்லிக்ஸ் குடும்பத்தின் மிகவிருப்பமான ஆரோக்கிய பானம், ஏனெனில்________

பெயர்: ________

முகவரி: ________

இங்கே கத்தரித்து அனுப்பவும்

முந்துங்கள்! போட்டி முடிவடையும் தேதி: 15 செப்டம்பர், 1984.

## தெய்வ தரிசனம்

# ஆதவனை விழுங்கிய ஆழி

**ஸ்ரீ**வைஷ்ணவ பக்தர்கள் மிகவும் பக்தி சிரத்தையோடு ஸ்ரீமந் நிகமாந்த மகாதேசிகர் அருளிச் செய்த ஸ்ரீசுதர்சனஷ்டகத்தைப் பாராயணம் செய்கிறார்கள். ''ஜெய ஜெய ஸ்ரீ ஸுதர்சன'' என்று சொல்வதனாலேயே மனோவியாகூலங்களும், உடல் பிணிகளும் தீரும் என்றும் எடுத்த காரியம் யாவினும் வெற்றி உண்டாகும் என்றும் கூறுகிறார்கள்.

சூரிய மண்டலத்தின் மத்தியில் உள்ள ''காயத்ரி சக்தி'' திருவாழியின் சக்தியில் ஒரு பகுதியே என்றும் பெரியோர்கள் கூறியிருக்கிறார்கள். நன்றாக இருக்கும் காலத்தில் சுதர்சன மந்திரம் ஒரு ரக்ஷையாக விளங்குகிறது. உடல்நிலை சரியில்லாத காலத்தில் அதுவே பரிகாரமாகவும் இருக்கிறது.

பகவானுடைய கரத்தில் வீற்றிருந்து பக்தர்களைக் காத்து அருள் புரியும் சக்ராயுதத்தையே பகவானாகப் பார்க்கிறோம்.

கும்பகோணம் ஸ்ரீ சக்கரபாணி கோயிலில் ஸ்ரீமந் நாராயணனே சுதர்சனராகப் பேதமின்றிக் காட்சிதருகிறார்.

ஜலந்தராசுரன் என்று ஒரு ராக்ஷஸன். அளவற்ற பலமும் அதிகாரமும் உடையவனும் பொறுக்க முடியாத அட்டூழியங்கள் செய்தான். திருமால் தன் கைச்சக்கரத்தை அழைத்து ஜலந்தரனைக் கொன்று வரும்படி அனுப்பினார்.

பிரும்மதேவர் எம்பெருமான் கட்டளைப்படி காவேரிக் கரையில் யாகம் செய்து கொண்டிருந்தார். யாக முடிவில் அவபிருத ஸ்நானம் செய்யும் போது தேவர்கள் எல்லோரும்,



''ஸுதர்சன மஹாஜ்வால கோடி ஸூர்ய ஸமப்ரப'' என்று கூறி சூழ்கினார்கள். அப்போது ஜலந்தரனை ஸம்ஹாரம் செய்து விட்டுத் திரும்பிய சக்கரம் காவேரிநதியிலிருந்து தேஜோமயமாய் எழும்பியது. அந்தச் சக்கரத்தை பிரும்மதேவர் நதிக் கரையிலேயே பிரதிஷ்டை செய்து ஆராதித்தார்.

தனக்குப் போட்டியாகத் தன்னைவிடப் பல மடங்கு ஒளிக்கதிர் வீசிக் கொண்டு ஜொலித்த ஸுதர்சனத்தைக் கண்டு சூரியனுக்குப் பொறுக்கவில்லை. அவர் தம் ஒளியைப் பெருக்கிக் கொண்டே போனார். இந்தப் போட்டியை யாரால் தாங்க முடியும்? அண்டப் பெருவெளியிலுள்ள அத்தனை மண்டலங்களும் 'கலகலத்துப் போயின. தேவர்கள் சுதர்சனரைப்பிரார்த்தனை செய்தார்கள். ஸ்ரீ சுதர்சனர் தமது ஒளியைச் சுருக்கிக் கொண்டார். சூரியனும் அவ்வாறு செய்திருக்கலாம். செய்யவில்லை! சுதர்சனரே சூரியனுடைய காந்தியைத் தன்னுள் இழுத்துக் கொண்டு விட்டார். திருப்பாற்கடலில் பள்ளி கொண்டிருந்த பரந்தாமனின் கண்களில் ஒன்று இடீரென்று இருண்டது. திடுக்கிட்டு எழுந்த பகவானிடம் இந்திராதி தேவர்கள், ''சூரியனை மன்னித்து லோக க்ஷேமத்துக்காக மறுபடியும் ஒளியோடு பொற்கதிர் வீசித் திகழும் வண்ணம் அருள் புரிய வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டார்கள்.

''காவேரிக் கரையில் போய்த் தவம் செய்'' என்று அருளினார் திருமால். பிரும்மதேவர் பூஜித்த சக்கரத்தாழ்வாரிடம் சரணமடைந்து தவம் செய்த சூரியனுக்கு ஷட்கோண சக்கரத்தின் மத்தியிலிருந்து தோன்றிக் காட்சியளித்தார் ஸ்ரீமந் நாராயணன். சிவந்த ஆடையுடுத்தி எண் தோள்களும், எட்டு ஆயுதங்களுமாய் மூன்று கண்களையுடையவராகப் பெருமானைத் தரிசித்ததும் ''சக்ராம்புஜே ஸமாஸீனம் சக்ராத்யாயுத பூஷணம் சக்ர மந்த்ராதி தேவேசம் சக்ரராஜம் அஹம் பஜே'' என்ற சுலோகங்களைக் கூறித் துதித்தார் சூரியன். தன்னுடைய சுயம் பிரகாசத்தையும் அடைந்தார். வைகாசி மாதப் பௌர்ணமியில் ஸ்ரீ சக்ரபாணிக்குத் தாமே தேர்த் திருவிழாவை நடத்தி வைத்தார். இதனால் இந்தத் தலத்துக்கு பாஸ்கர க்ஷேத்திரம் என்று பெயர் வந்தது. இன்றும் கோவில் அருகில் உள்ள படித்துறைக்குச் சக்கரப் படித் துறை என்றும் சக்கர தீர்த்தம் என்றும் பெயர்.

இந்த விவரங்களையெல்லாம் எடுத்துக் கூறிய ஸ்ரீசெல்லப்பா பட்டாச்சாரி அவர்கள் ''ஸ்ரீ சக்கரபாணியைப் பக்தியோடு தியானம்

செய்து கொண்டு ஒரு மண்டலம் சர உடையோடு 'ஜெய ஜெய ஸ்ரீ ஸுதர்சன' என்று ஜபித்துக் கொண்டே வலம் வருபவர்கள் நினைத்த காரியமெல்லாம் கைகூடி வரும். குமரிகளுக்குக் கல்யாணம் நிச்சயமாகும். இளைஞர்களுக்கு உத்தியோக வாய்ப்பு உண்டாகும். சத்துரு பயம் நீங்கும். கவலைகள் ஒழியும்'' என்று ஸர்வ நிச்சயமாகக் கூறுகிறார்.

கட்டுக் கோவிலின் படிகளில் ஏறி முன் மண்டபத்தை அடையும் போது சரபோஜி மன்னரின் வெண்கலச் சிலை கூப்பிய கரங்களுடன் காணப்படுகிறது! அருகில் ஒரு சிறுமியின் சிலையும் இருக்கிறது. சரபோஜி மன்னருக்குக் கடுமையான வயிற்று வலி வந்ததாகவும் ஸ்ரீ சக்கரபாணியை வழிபட்டதால் நோய் நீங்கியதாகவும் அந்த நன்றிக் கடனை எப்போதும் செலுத்திக்கொண்டே இருப்பதற்காகத் தன் உருவத்தைச் செய்து வைத்ததாகவும் கூறுகிறார்கள்.

வட்ட வடிவமான திருவாசி. அதில் கிளம்பும் தீப்பிழம்புகள். அதனுள்ளே ஷட்கோண சக்கரம். அதன் மத்தியில் எட்டுக் கரங்களுடன் சங்க சக்ர தாரியாய் பல ஆயுதங்களுடன் பகவான் காட்சியளிக்கிறார். இவரே சுதர்சனராகவும் நாராயண மூர்த்தியாகவும் விளங்குவதோடு முக்கண்ணனாக இருப்பதால் ஈச்வரனின் அம்சத்தையும் கொண்டிருப்பதாகக் கூறலாம். இப்படி மும்மூர்த்திகளின் தொடர்புடையவராக இருக்கிறார் சக்கரபாணி. திருத்துழாயால் அர்ச்சனை செய்வதோடு முக்கண்ணனை இவருக்கு வில்வதள அர்ச்சனையும் செய்கிறார்கள். மோகினியாக அவதாரம் செய்து உலகையெல்லாம் மயக்கிய இந்த அழகனுக்கு மங்களகரமான குங்குமார்ச்சனையும் உண்டு. சிவந்த குங்குமமும் பசிய துளசியும் திருப்பாதங்களை மூடியிருக்கின்றன. தங்கமயமான பீதாம்பரம் அணிந்து கிரீடம் பளபளவென்று மின்ன நெற்றியில் மரகதமும், வைரமும் வைத்து இழைத்த மூன்றாவது கண் ஜொலிக்க, நீண்ட தங்கப் பூணூல் தவழ, மகாலக்ஷ்மி மார்பில் இலங்க, இடுப்பில் ஒட்டியாணமும் தோள்களில் ரோஜாப்பூ மாலையுமாக ஜொலிக்கிறார். தீர்க்கமான நாசி, விசாலமான நயனங்கள், கண்ணாடிக் கன்னங்கள், கல்லிழைத்த திருச்செவிகள், திருமுகத் தாமரையைக் கண்ணிமைத்துக் காண்பார் தம் கண்ணென்ன கண்ணே! சிவபெருமானை அபிஷேகப் பிரியர் என்றும் திருமாலை அலங்காரப் பிரியர் என்றும் சொல்லுகிறோம். — பொருத்தமாகத் தான் இருக்கிறது!



"தூய்மையோக மாயினும் துழாய்அலங்கல் மாலையாய்
ஆமையாகி ஆழ்கடல் துயின்ற ஆதிதேவ! நின்
நாமதேயம் இன்னதென்ன வல்லமல்ல வாகிலும்
சாமவேத நீதனாய சக்ரபாணி யல்லயே.''

என்ற திருமங்கையாழ்வாரின் திருச்சந்த விருத்தம் சக்கரபாணி என்று அழைக்கும் பெருமான் இவர்தானே! (உன் நாமங்கள் இத்தனை என்று கணக்கிட்டுச் சொல்ல முடியாதவர்களானாலும் சாமவேத கீதத்தில் மகிழும் சக்கரபாணி நீதான் என்று தெரிந்து கொண்டோம்.)

அருகிலேயே ஸ்ரீ ஸுதர்சன வல்லித் தாயார் வீற்றிருக்கிறார். பெயரே காட்சிக்கு இனியவள் என்பதைக் காட்டிக் கொடுக்கிறது. மென்மையான பட்டாடை அணிந்து மென்மையான மலர் தாங்கி வீற்றிருக்கும் திருமகளைக் கண்ட உடனேயே நமது மனம் நிறைந்து விடுகிறது. பிறகு என்ன? மங்கலம்தான்.

வலம் வரும்போது பிராகாரத்தில் ஸ்ரீலக்ஷ்மி நரசிம்மர், விநாயகர், லக்ஷ்மீ நாராயணர், பஞ்சமுக ஹனுமான், வைகுண்ட நாதர் எல்லோரையும் தரிசனம் செய்கிறோம்.

படியிறங்கி விஜயவல்லித் தாயாரின் கோவிலுக்குப் போக வேண்டும். தாயார் கோவிலில் கூட்டம் இல்லை. பச்சைக்கரை போட்ட சிவப்புப் பட்டுப் பாவாடை

உடுத்தி ஸஹஸ்ரதள தாமரை மீது வீற்றிருக்கிறார் தாயார். கமலக் கம்மல் டாலடிக்கிறது! கண்குளிரத் தரிசனம் செய்கிறோம்.

எதிரேயுள்ள மண்டபத்தின் தூண் ஒன்றில் மாடபூஷி நரஸிம்ம ஐயங்கார் அவருடைய துணைவியார் செல்லத்தம்மாள் இருவரும் விஜயவல்லித் தாயாருக்குநித்திய பூஜைகள் செய்வதற்காக நிலங்கள் எழுதி வைத்த செய்தியைப் படிக்கிறோம். பற்பல கல்வெட்டுக்கள் உள்ள இந்தக் கோவிலில் இது ஒன்றையாவது படிக்க முடிந்ததே என்று ஒரு சந்தோஷம்.

கல்வெட்டு ஆராய்ச்சியாளரான குடந்தை ஸ்ரீ சேதுராமன் அவர்கள் இந்தக் கோவிலைப் பற்றிச் சில சுவாரஸ்யமான வரலாற்றுச் செய்திகளைக் கூறினார்.

மாலிக்காபூர் தென்னாட்டின் மீது படையெடுத்ததைத் தொடர்ந்து மதுரை சுல்தான்கள் கோவில்களை இடித்துத் தள்ளுவதையே வாழ்க்கையின் பயனாகக் கொண்டிருந்தார்கள். விஜய நகர சாம்ராஜ்யம் தோன்றிய பிறகு இந்த அட்டூழியங்கள் நின்றன. இடிந்து போன கோவில்களைக் கட்டத் தொடங்கினார்கள். இந்தப் புண்ணியத்தைக் கட்டிக் கொண்டவர் புக்கன் என்பவரின் மகனான கம்பண்ண உடையார். விஜய நகர இளவரசர். 1371—லிருந்து 1600 வரை இந்தத் திருப்பணிகள் தென்னாட்டில் நடந்தன. பதினாறும் நூற்றாண்டின் தொடக்கத்தில் கட்டப்பட்டது இந்த சக்கரபாணி கோவில். கல்வெட்டுக்கள் பலவற்றில் சிவன் கோவில் செய்திகள் இருக்கின்றன என்பதால் இடிந்து போன சிவன் கோவில் தூண்கள் கற்கள் முதலியவற்றைக் கொண்டு கட்டப்பட்டிருக்கலாம் என்று கூறினார் ஆய்வாளர் சேதுராமன்.

யந்திர ஸ்தாபனம் செய்த கோவில்களுக்கு ஒரு தனிப் பெருமையும், ஆகர்ஷண சக்தியும் உண்டு. மக்களை ஈர்த்துக் கோரிய வரங்களைத் தரும் வழிபாட்டுத் தலங்களாக விளங்குவதோடு, இந்த போகங்களில் நாட்டம் அற்றுப் போன பின் நிலையான சுகத்தை நல்கும் தலங்களாகவும் விளங்குகின்றன.

ஜய ஜய ஸ்ரீ ஸுதர்சன
ஜய ஜய ஸ்ரீ ஸுதர்சன.

---

## அடுத்த வாரம்

# கல்கி

வங்கத்தில்—

சத்யஜித்ரே, மிருணாள்சென்

ஹிந்தியில்—

ஷியாம் பெனகல், சயீத் மிஸ்ரா

கன்னடத்தில்—

ஜி. வி. ஐயர், கிரிஷ் கர்னாட்

மலையாளத்தில்—

அடூர் கோபால கிருஷ்ணன், எம். டி. வாசுதேவன்

தமிழில்? **ஒரு ஆழத் தேடலும் ஒருவராவது கிடைப்பாரா?**

பதில் கூறுகிறவர்கள்:

விசு; ஏ.வி.எம். சரவணன்; ஒளிப்பதிவாளர் பாபு; பாடலாசிரியர் முத்துலிங்கம்; டி. எம். சௌந்தரராஜன்; கங்கை அமரன்.

## 1

**கீ**ழே அம்மாவின் அறையில் அடித்த அலாரம் மாடியிலிருந்த கிருத்திகாவைத் தூக்கத்திலிருந்து எழுப்பிற்று. சடா ரென்று விழித்துக் கொண்ட அவள் கட்டி லின் பக்கத்திலிருந்த மேஜை விளக்கைப் போட்டு மணி பார்த்தாள். நான்கு அடிக் கவே சில நிமிடங்கள் இருந்தன. அம்மா ஏன் இவ்வளவு சீக்கிரம் எழுந்திருக்க வேண் டும் என்று நினைத்துக் கொண்டாள். தான் எழுந்திருப்பதோடு அல்லாமல் தடதட வென்று வீட்டில் இருக்கிற அத்தனை பேரையும் எழுப்பி விட்டுவிடுகிற சுபாவம் அவளுடையது. அதற்குப் பயந்தே நேற்று மாலே சென்ட்ரல் ஸ்டேஷனுக்குப் போன் பண்ணிக் கேட்டுச் சொன்னுள் கிருத்திகா.

''தமிழ்நாடு எக்ஸ்பிரஸ் காலே ஏழு ஐந்திற்குத்தான் புறப்படுகிறதாம். நாம் ஆறேகாலுக்கு வீட்டை விட்டுக் கிளம்பினல் போதும்மா. காலே நேரத்தில் டிராஃபிக் இருக்காது. பதினைந்தே நிமிடங்களில் ஸ்டேஷனுக்குப் போய் விடலாம். அதனுல் என்னை ஐந்து மணிக்கு எழுப்பினல் போதும். நீயும் அப்போதே எழுந்திரு. வழக்கம் போலப் பரபர என்று மூன்று மணிக்கும், நாலு மணிக்கும் எழுப்பி அமர்க்களப் படுத்தாதேம்மா. போவது நான் ஒருத்திதான். தமிழ்நாடு எக்ஸ்பிரஸ் ஆனதால் சாப்பிடக் கையில் எடுத்துக் கொண்டு போக வேண்டிய அவசியமில்லே. கிளம்புகிற போது ஒரு கப் காப்பி மட்டும் தந்தால் போதும்... என்ன?''

அப்போது தலையாட்டிய புவனேஸ்வரி இருப்புக் கொள்ளாதவளாகத் தன் வழக்க மான பரபரப்பிலும், அவசரத்திலும் நான்கு மணிக்கே எழுந்து விட்டாள். விளக்கைப் போட்டு ''நாகம், எழுந்திரு. மணியாகி விட்டது பார்...'' என்று சமை யற்கார அம்மாளை எழுப்பி, காப்பிக்கு டிகாக்ஷன் இறக்கச் சொன்னுள். பின் வாசல் வராந்தாவிற்குப் போய்ப் பால் வந்து விட்டதா என்று பார்த்தாள். வழக்கமாகப் பால் புட்டிகள் வைக்கப்பட்டிருக்கும் மூலே காலியாக இருக்க உள்ளே வந்து விசாரித் தாள்.

''ஏன் நாகம், இன்னுமா முனியம்மா பால் வாங்கிண்டு வரலே. நம்ம பூத்திற்குத் தான் மூன்று மணிக்கே பால் வந்து விடு கிறதே... நேற்று சாயந்திரம் அவள் வேலையை முடித்து விட்டுப் போகிற போதே நூறுதரம் சொன்னேன். காலே குழந்தை ஊருக்குப் போரு... அதனுல் நாலு மணிக்கெல்லாம் வந்து கொஞ்சம் பாலே யட்டும் வாங்கிக் கொடுத்துட்டுப் போயிடுன்னு...''

முகத்தைக் கழுவிப் புடைவைத் தலேப் பால் துடைத்துக் கொண்டே சமையலறைக் கதவைத் திறந்த நாகம்மாள் சொன்னுள்:

''நீ சொல்லியனுப்பியிருக்கே இல்லேயா புவனு...? அப்படியானுல் வந்துடுவா...''

நாகம்மாள் ஏதோ தூரத்து உறவு. புவனேஸ்வரி மாதிரி யாருமற்ற நிலேமை. அதனுல் வந்து அவளிடமே ஒட்டிக்கொண்டு விட்டாள். வயது வித்தியாசமும், புவனேஸ் வரி கொடுத்திருந்த இடமும் ஒருமையில் அழைக்கிற துணிவைத் தந்திருந்தன.

''வந்தால் சரி, இல்லே என்றுல் ஃப்ரிஜ்ஜில் ராத்திரி பால் இருக்கு. எடுத்து சூடு பண்ணி முதலில் இரண்டு டம்ளர் காபி கலந்துடு...''

''கிருத்திகா எழுந்தாச்சா...?''

''இன்னும் இல்லே. இப்போதே எழுப் பினுல் கத்துவாள். கெய்சர் போட்டிருக் கேன். தண்ணீர் சுட்டதும் குளித்து விட்டு வந்து எழுப்பறேன்...''

கீழிருந்து வந்த கணீர்க் குரல் ஏற் கெனவே தன்னை எழுப்பி விட்டிருப்பது தெரியாமல் அம்மா பேசினது அவளைப்

# இந்துமதி



புன்சிரிப்பாகச் சிரிக்க வைத்தது. அம்மா எழுந்தபின் அந்த வீட்டில் வேறு யார் தூங்க முடியும்...? யாரைத் தூங்க விட்டிருக்கிறாள் என்று நினைத்துக் கொண்டாள் கிருத்திகா. அதுவும் மறுநாள் வெளியூர் பிரயாணம் என்றால் முதல் நாள் ராத்திரி முழுவதும் தூங்காமல், அவ்வப்போது எழுந்து, விளக்கைப் போட்டு, மணி பார்த்து...

''ஏம்மா அலாரம் எதுக்காக வச்சிருக்கே?. இப்படி மணிக்கு ஒருதரம் எழுந்து நேரம் பார்க்கவா?...''

''இல்லே கீர்த்தி.. எனக்குத் தூக்கம் வரலே...''

எதற்காக அம்மா இப்படி அமைதியற்று அலைகிறாள் என்று தோன்றும் கிருத்திகா

விற்கு. இப்போது மட்டுமில்லை. எப்போதும் அம்மாவிடம் இந்தப் பரபரப்பு இருக்கிறது. சின்ன விஷயங்களுக்குக் கூடப் படபடக்கிற சுபாவம் இருக்கிறது. சாயந்திரக் கச்சேரிக்குக் காலையிலிருந்தே வீட்டை அமர்க்களப் படுத்திக் கொண்டிருப்பாள். ஐந்து நிமிடங்களுக்கு ஒருமுறை நாகம்மாவைக் கூப்பிட்டுக் கொண்டிருப்பாள். வேலைக்காரியை மாடிக்கும் கீழிற்கும் விரட்டுவாள். ஸ்ருதிப் பெட்டியையும், ஹார்மோனியத்தையும், மாற்றி மாற்றிச் சரி பண்ணுவாள். அவளின் நிலை கொள்ளாத இயக்கத்தைப் பார்த்துக் கொண்டிருக்கிற கிருத்திகாவிற்குச் சிரிப்பு வரும். தராசுத் தவளை என்று தோன்றும். தன் சிரிப்பை அடக்கிக் கொண்டு மெதுவாகக் கேட்பாள்.

''ஏம்மா, நீ சௌதாமினியோட நாட்டியத்திற்குப் பின்னணி பாடப் போறியா, இல்லை நீயே நாட்டியமாடப் போறியான்னு சந்தேகமாக இருக்கு...''

ஸ்ருதிப் பெட்டியை விட்டுவிட்டுச் சடாரென்று நிமிர்ந்து மந்தஹாஸமான அந்த முகத்தைப் பார்ப்பாள் புவனேஸ்வரி.

''ஏன் அப்படிக் கேட்கறே கிர்த்தி...?''

அம்மாவின் முகம் வாடுவதைப் பார்க்கிறபோது கிருத்திகாவிற்குக் கஷ்டமாக இருக்கும். கண்களில் மினுமினுக்கிற சிரிப்பை அடக்கிக் கொண்டு சொல்வாள்.

''இல்லேம்மா. காலையிலிருந்து நீ படற அவஸ்தையைப் பார்த்தால் சங்கடமாக இருக்கு. பரதநாட்டிய சிகாமணி சௌதாமினி கூடத் தன்னை இப்படி அலட்டிக்கமாட்டான்னு தோணித்து...''

''என்ன அப்படிச் சொல்லிட்டே கிர்த்தி? இதுக்குப் பெயர் அலட்டல் இல்லை. கவலை. ஒவ்வொரு பாட்டும் நன்றாக அமையணுமே என்கிற பயம். சௌதாமினியின் நாட்டியம் எடுபடணும் என்றால் நான் பாவத்தோடு பாடணும் இல்லையா?... டான்ஸ் எவ்வளவு முக்கியமோ அதே அளவிற்குப் பாட்டும் முக்கியம்தானே...?''

தன் கேள்வியின் மூலம் அம்மாவைச் சங்கடப்படுத்தி விட்டதை உணர்ந்து அவளைமென்மையாகப்பார்ப்பாள்கிருத்திகா. இந்த அம்மாவிற்குத் தான் எதுவும் செய்ய

---

என்ன இது, இத்தனை சிறிய சென்ட் பாட்டில் விலை பத்து ரூபா சொல்றீங்க?

— அது சென்ட் இல்லே தேங்காய் எண்ணெய்!

—லட்சுமி மோகன்.



லாம் என்று தோன்றும். அவளை நிற்க வைத்து நமஸ்கரிக்க வேண்டுமென்கிற வேகம் வரும். ஒவ்வொரு நிலையிலும் அம்மாவை நிறுத்திப் பார்த்து மனசு சிலிர்ப்படையும். தன்னை வளர்க்க எவ்வளவு பாடுபட்டிருக்கிறாள் அவள். அலுக்காமல் சலிக்காமல் எவ்வளவு உழைத்திருக்கிறாள்? எத்தனை கச்சேரிகள் பண்ணியிருக்கிறாள்? டில்லி, பம்பாய், கல்கத்தா, ஹைதராபாத், என்று எத்தனை ஊர்கள்? ஒரு இடத்திற்கு மறுத்திருப்பாளா...? ஒருநாள் உடம்பு என்று படுத்திருப்பாளா?... மழை, காற்று எதையாவது லட்சியம் பண்ணியிருப்பாளா...? அத்தனையும் யாருக்காக?... தனக்காக. இந்த வீடு, கார், டெலிபோன் வசதிகள் யாருக்காக...? தனக்காக. தன் படிப்பிற்காக. தன் மேன்மைக்காக.

மனத்திற்குள் நெருப்பு பற்றிக்கொண்ட மாதிரி அன்பு பிரவகித்துப் பரவ — அதை வெளிப்படுத்துகிற வழி தெரியாமல் வார்த்தைகளை அதில் தோய்த்தெடுத்து மெதுவாகப் பேசினாள் அவள்.

''இல்லேன்னு சொல்லலேம்மா நான். இன்ஃபாக்ட் பாட்டு இல்லை என்றால் நாட்டியத்திற்கே மதிப்பில்லை. ஆனால் சாயந்திரம் நடக்கப் போகிற நிகழ்ச்சிக்கு இப்போதிலிருந்து சிரமப்படுகிறாயே என்றுதான் சொன்னேன்...''

ஆனால் இந்தப் படபடப்பும், பரபரப்பும் அம்மாவின் சுபாவமாகிப் போயிருந்தன. முன்பெல்லாம் அம்மா இப்படி இல்லை. அந்த அம்மாவை இவளுக்கு நன்றாக நினைவிருந்தது. அதாவது அப்பா செத்துப் போவதற்கு முன்னால், பத்து வருடங்களுக்கு முன்பிருந்த அம்மா... முதன் முதலாக சௌதாமினிக்குப் பின் பாட்டுப் பாட ஆரம்பித்திருந்த சமயம். அப்போதெல்லாம் இன்னும் அழகாய் இருப்பாள். இப்போதிருக்கிற இந்தத் தென்னம்பூ நிறம் இன்னமும் பளபளக்கும். முகத்தில் அசாதாரண அமைதி தெரியும். உடம்பிலும் செய்கிற ஒவ்வொரு செயலிலும் அந்த அமைதி விரவி நிற்கிறாற்போலிருக்கும். கண்கள் சாந்தமாகப் பார்க்கும். பேச்சு தழைந்து நிதானமாக வரும். அத்தனை அமைதியும் அம்மாவை விட்டு விலகி எங்கே போய் ஒளிந்து கொண்டு விட்டது என்றுதான் கிருத்திகா ஆச்சரியப்படுவாள். அந்த நிதானம், அமரிக்கை எல்லாம் போய் இப்போதெல்லாம் சதா கண்களில் ஒரு துறுதுறுப்பு, எல்லை மீறின ஆவல், செய்கைகளில் பொறுமையின்மை, பேச்சில் தெறிக்கிற படபடப்பு....

அப்பாவின் மறைவிற்குப் பின்னர்தான் அம்மா இவ்வாறு மாறிப் போய் விட்டாள் என்று நினைத்துக் கொண்டாள். இருபத்தெட்டு வயதில் ஒன்பது வயதுப் பெண்ணோடு தனியாக நின்ற ஆதரவற்ற நிலைமை, யாரை நம்புவது, நம்பக் கூடாது என்பது தெரியாத சங்கடம், இனி வாழ்க்கை எப்படிப் போகுமோ என்கிற பயம் இவை அத்தனையும் ஒன்றாகச் சேர்ந்து அவளை முற்றிலும் மாற்றியிருக்க வேண்டும். அல்லது பாடப் போன இடத்தில் சுற்றி இருந்தவர்


Vin-Fun

களின் பேச்சுக்களாலும், செய்கைகளாலும் தானாக மாறியிருப்பாள்.

'நான் சொல்றேன்னு தப்பாக நினைக்காதே புவனா. பாலும் நெற்றியுடன் மேடையில் ஏறிப் பாடக் கூடாது. அப்படிப் பாடுவது நன்றாகவும் இருக்காது. கலையை மதிக்கிற காரணத்தினால் சின்னப் பொட்டாக ஒன்று வைத்துக் கொள்...'

அம்மா சிவப்புச் சாந்தில் கடுகளவு பொட்டு வைத்துக் கொள்ள ஆரம்பித்தாள்...

'என்ன புவனேஸ்வரி இது...? இன்னிக்குப் போய் இப்படி நூல் புடவையில் வந்திருக்கே...? மினிஸ்டர் தலைமை தாங்கற நிகழ்ச்சி இது...பளிச்சுன்னு பட்டு கட்டிண்டு வரக் கூடாது...? ஸ்டேஜின் ஒரு ஓரமாக உட்கார்ந்திருக்கப் போகிறாய் என்றாலும், வருகிற பெரிய மனிதர்கள் கண்ணில்படாமலா போய் விடுவாய்?... நமக்காக இல்லை என்றாலும் மேடைக்காகவாவது பளிச்சுனு இருக்க வேண்டாமா...? அதுல என்ன தப்பு வந்துடுத்து...?'

அன்றிலிருந்து பட்டு கட்டிக் கொள்ளத் தொடங்கினாள். அதே போல் காதில் பெரிதாய் வைரத் தோடுகள், மூக்கில் முத்துத் திருகு. தலையில் அடக்கமாகக் கொண்டை... சட்டென்று அம்மாவைப் பார்க்கிற யாருக்கும் அவள் விதவை என்றே தோன்றாது. சொல்லித் தெரிந்து கொண்டாலும், 'நிஜமா... நிஜமாகவா...?' என்று மாய்ந்து போவார்கள். 'இவ்வளவு நன்றாக இருக்கிறாளே...?' என்று அங்கலாய்ப்பார்கள்.

''ஏம்மா, மேடையில் உட்கார்ந்து பின்னணி பாடறது யாரு. உனக்கு அக்காவா?''

''எதுக்குக் கேட்கறீங்க...?''

''இல்லை, உன் முகச் சாயலாகவே இருக்கே என்று கேட்டேன்...''

''எங்களுக்குள் என்ன உறவு என்பது தெரிந்தால் தான் மேலே பாட்டை ரசிப்பீர்களோ...?''

—முகத்தில் அறைகிற பேச்சுத் தான். ஆனாலும் அடுத்த கேள்வியைத் தவிர்க்க இதைத் தவிர வேறு வழி தெரியவில்லை

'பயமின்மை' என்பது என்ஜினைப் போன்றது. அது நமது வாழ்க்கையை மேடு பள்ளங்களிலும் கூட சரியான பாதையில் தடையின்றி இழுத்துச் செல்கிறது. இதில் 'பரிவு' கார்டு வண்டியாகும். அது விபத்திலிருந்து நம்மைக் காக்கும். இரண்டும் ஒருவரிடம் இருப்பது லட்சணம். —வினோபாபாவே

—ஆர். எஸ். சுப்ரமணியன்



கிருத்திகாவிற்கு. கேட்டவளின் முறைப்பை லட்சியம் பண்ணாமல் நிலவானவை ஓர் அலாதி ஆர்வத்துடன் கவனிக்கிற பாவனையில் இருப்பாள்...

அதை நினைத்து மெல்லிதாய்ப் புன்னகைத்துக் கொண்ட போது அம்மா உள்ளே வந்து விளக்கைப் போட்டு அவளைப் பார்த்தாள்.

''நீ முழிச்சுண்டுதான் இருக்கியா? கிர்த்தி...?''

''ஏம்மா, நீ எழுந்து கொண்டதற்கு அப்புறம் இந்த வீட்டில் யாராவது தூங்க முடியுமா...? தூங்கத்தான் உன் வெண்கலக் குரல் விடுமா...?''

''நான் மெதுவாகத்தானே பேசினேன். சரி, ரயிலுக்கு நேரமாகிறது. எழுந்து குளிச்சிட்டுக் கிளம்பு...''

அவள் போர்வையை விலக்கிக் கொண்டே எழுந்து உட்கார்ந்து சொன்னாள்.

''பேசாமல் நாம் ஒன்னு பண்ணியிருக்கலாம்மா...''

''என்ன...?''

''ராத்திரியே போய் சென்ட்ரல் ஸ்டேஷனில் படுத்துக் கொண்டிருக்கலாம். இந்த நேரம் கூட ஆகியிருக்காது...''

''அடேடே...'' என்று முகத்தை வருத்தமாய் வைத்துக் கொண்டாள் புவனேஸ்வரி.

''அதை ராத்திரியே சொல்லியிருந்தால் செய்திருக்கலாம் இல்லை? சரி. இந்தத்தரம் போகட்டும். நவராத்திரி லீவிற்கு நீ காலேஜ் விட்டு டில்லியிலிருந்து வருவாய் இல்லை...? திரும்பிப் போகிற பொழுது அப்படியே செய்யலாம். இப்போ எழுந்து கிளம்புகிற வழியைப் பாரு...''

சென்னையில் இத்தனை கல்லூரிகள் இருக்கிற போது, +2வில் நல்ல வாய்ந்த மதிப்பெண்கள் பெற்றிருந்தும் மேற்படிப்பிற்காக அம்மா தன்னைத் தனியாக ஏன் டில்லிக்கு அனுப்புகிறாள் என்பது அவளுக்குப் புரியவில்லை. இங்கே இத்தனை வசதிகளுடன் வீடு இருக்க எதற்காகக் கல்லூரி ஹாஸ்டலில் சேர்த்துப் படிக்க வைக்க நினைக்கிறாள்? இதன் காரணம் என்ன...? முன்பின் தெரியாத, பாஷை புரியாத ஊருக்கு ஏன் போக வேண்டும்...?

''ஏம்மா, என் மார்க்கிற்கு இங்கே இருக்கிற அத்தனை காலேஜிலும் கூப்பிட்டு இடம் கொடுக்கிற போது எதுக்காக என்னை டில்லிக்கு அனுப்பறே...?''

அம்மாவிடமிருந்து அதற்குச் சரியான பதிலாக வரவில்லை. 'நீ தனியாக இருந்து பழகணும்' என்றாள். 'உனக்கு இன்னும் தைரியம் வரணும்' என்றாள். 'அங்கே மெட்ராஸை விட படிப்பின் தரம் அதிகம்' என்றாள். இப்படி எது எதையோ சொல்லிச் சமாளிக்கப் பார்க்கவே அதற்கு மேல் கிருத்திகா கேள்வி கேட்பதை நிறுத்திக் கொண்டாள்.

எத்தனை கேட்டாலும் அம்மாவிடமிருந்து நிஜமான காரணம் வரப் போவதில்லை. டில்லி போவதில் தனக்கும் ஆட்சேபனை ஒன்றும் இல்லாத காரணத்தினால் கல்லூரியில் இடம் கிடைத்தவுடன் பணம்



சதா வாயை மூடிக் கொண்டிருப்பது மௌனமாகாது. நாவைத் துண்டித்து விடலாம். அதுவும் மௌனமாகாது. பேசச் சக்தியிருந்தும் அனாவசியமான சொல் ஒன்றுகூட உரையாதவனே உண்மையான மௌனி. என்னைப் போல் உண்மையைத் தேடுவோர்க்கு மௌனம் பெருந்துணை. மௌனமாயிருக்கும் பொழுது தான் ஆன்மா தன் பாதையைத் தெளிவாகக் கண்டு கொள்கிறது. அதுவரை மயக்கம் தந்தது அப்பொழுது பளிங்கு போல் விளங்கிவிடுகிறது.

—மகாத்மாகாந்தி
தகவல்: சக்தி. த. ரமணன்

---

கட்டி: இப்போது கிளம்பிக் கொண்டிருந்தாள். அதற்குமேல் படுக்க நேரமின்றிச் சுறுசுறுப்பாக எழுந்து குளித்து, வழக்கமான தன் உடையான ஸல்வார் கம்மீஸிற்கு மாறினாள். அடர்த்தியான தலைமுடியை ரப்பர் வளையத்தினுள் அடக்கி ஒரு போதும் பவுடர் கண்டறியாத முகத்தில் புருவங்களுக்கிடையில் சின்னதாய்ப் பொட்டு வைத்துக் கொண்டு கீழே இறங்கி வந்த போது கார் டிக்கியில் சாமான்களை ஏற்றிவிட்டு டிரைவர் ஸீட்டில் உட்கார்ந்து காரைக் கிளப்பத் தயாராகக் காத்துக் கொண்டிருந்தாள் அம்மா...

முதல் பிளாட்பாரத்தில் நின்றிருந்த தமிழ்நாடு எக்ஸ்பிரஸில் அவளுக்காக ஒதுக்கப்பட்டிருந்த ஜன்னலோர ஸீட்டின் கீழ் பெட்டியையும், ஹோல்டாலையும் அடைத்து, ரயிலை விட்டு இறங்கி பிளாட்பாரத்தில் நின்றிருந்த அம்மாவிடம்வந்தாள் கிருத்திகா. சிறிது நேரம் மௌனமாகத் தூரத்தில் எங்கோ வெறித்துப் பின் —

''சொல்லும்மா...'' என்று பார்வையைத் திருப்பினாள்.

''உனக்கு என்மேல் கோபமா கீர்த்தி...?'' தனக்குள் குற்ற உணர்வுடனும், உறுத்தலாகவும் நின்ற கேள்வியைக் கேட்டுவிட்டாள் புவனேஸ்வரி.

''எதுக்கு...?''

''உன்னை டில்லிக்கு அனுப்பறதுக்குத் தான்...''

''அதற்கு எதற்காகக் கோபப்படணும்...?''

''இங்கே இருக்கிற கல்லூரிகளை விட்டு விட்டு அங்கே அனுப்பற துக்கு...''

ஒரு விநாடி பேசாமல் இருந்த கிருத்திகா பின் நிதானமாகச் சொன்னாள்: ''கோபமில்லேம்மா... ஆனால் இதன் காரணம்தான் புரியலே...''

''அப்புறம் பின்னால் தானாகப் புரியும். அப்போது நான் செய்தது தான் சரி என்று நீயே உணர்ந்து கொள்வாய்...''

அதற்கு அவளிடமிருந்து பதிலில்லை. சுற்றி நின்ற மனிதர்களைப் பார்த்தாள். சின்ன இடைவெளியில் தெரிந்த வானத்தின் நீலத்தை நோக்கினாள். வண்டி புறப்பட வேண்டிய நேரம் நெருங்கிய போது புவனேஸ்வரி மிக அவசரமாகப் பேசினாள்:

''ஜாக்கிரதையாக இரு கீர்த்தி. போனதும் ஒரு கால் புக் பண்ணிப் பேசிவிடு. தனியாக எங்கும் வெளியில் போகாதே. அதுவும் இருட்டியதற்கப்புறம் போகவே போகாதே.. என்ன...?''

'சரி' என்று தலையசைத்த கிருத்திகா, ''நேரமாயிடுத்து நான் வரட்டுமாம்மா...?'' என்று கேட்டு விட்டுச் சடாரென்று குனிந்து புவனேஸ்வரியின் பாதங்களைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக் கொண்ட போது இருவர் கண்களும் கலங்கின.

''சரி, நீ போய் ஏறி உட்கார்ந்துக்கோ...''

ஜன்னலருகில் அவள் உட்கார்ந்த பின் கம்பியைப் பிடித்துக் கீழே நின்று கொண்டிருந்த புவனேஸ்வரி தன் கைப்பையைத் திறந்து சின்னதான வெள்ளை அட்டையைக் கையில் எடுத்தபடி சொன்னாள். ''நான் ஒருவர் பெயரையும், விலாசத்தையும் தரேன். டில்லி போன உடனே அவரைப் போய்ப்பார்... என்ன...?''

''சரி...''

''எந்த உதவியானாலும் தயங்காமல் அவரிடம் கேட்கலாம். மறுக்காமல் செய்வார். அதனால் உடனே அவரைப் போய்ப் பார்த்து விடு...''

சிவப்பு விளக்கு பச்சைக்கு மாறி ரயில் மெல்ல நகரத் துவங்கியதும் கூடவே நடந்து வந்த புவனேஸ்வரி தன் கையில் இருந்த விலாச அட்டையை அவள் கையில் திணித்தாள். ''அவர் பெயர் விஷ்ணு பிரசாத். மறக்காமல் போய்ப் பார். அடிக்கடி கடிதம் எழுது. அவரைப் பார்த்த விவரத்தையும் எனக்குத் தெரியப்படுத்து..''

அம்மா அத்தனை தரம் அழுத்தி அழுத்திச் சொல்கிற அந்த விஷ்ணுபிரஸாத் யாராக இருக்கும் என்ற யோசனையுடன் மெதுவாகக் கையசைத்து விடைபெற, அம்மாவின் உருவம் ரயிலின் வேகத்திற்கு ஈடு கொடுக்க முடியாமல் சீக்கிரமே மறைய, கையிலிருந்த விலாச அட்டையை ஒருமுறை பார்த்துப் பையில் போட்டுக் கொண்டு நிமிர்ந்த போது எதிர் ஸீட்டில் உட்கார்ந்திருந்த அந்தக் கம்பீரமான இளைஞன் தன்னையே பார்த்துக் கொண்டிருப்பதைக் கவனித்தாள்...

'யார் இவன்...?'

(தொடரும்)

மேலட்டை: இந்துமதி
வண்ணப்படம்: உத்ரா

# பொன்னியிடம் வாங்கிய பூ

திருச்சி.

ஆரவாரமான அந்த ஜங்ஷனில் எவரையும் பொருட்படுத்தாது வந்து நின்றது அந்தத் திருவெறும்பூர் பாசஞ்சர் ரயில்.

மாலை மணி 5.40.

இரயிலை விட்டுக் கீழே இறங்கிய அரவிந்தன், சைக்கிள் ஷெட்டுக்குச் சென்று சைக்கிளை எடுத்துக் கொண்டு ஏறி மிதித்தான்.

எதிரே கூப்பிடு தொலைவில் வழிபடும் முருகன் கோவில்.

கோவிலின் எதிரே வந்து, நின்று, சைக்கிளை நிறுத்திவிட்டு, உள்ளே சென்று, தரிசனத்தை முடித்துக் கொண்டு, பக்கத்தில் கிழக்குப்புறம் கோவிலை ஒட்டி வரிசையாக அமர்ந்திருந்த பூக்காரர்களின் அருகே வந்து நின்றான்.

அதோ பொன்னி!

அவளிடம் செல்வதற்கும் அவள் ஒரு பூ பொட்டலத்தை எடுத்து அவனிடம் நீட்டுவதற்கும் சரியாக இருந்தது.

''ஐயா, அம்மா நல்லா இருக்காங்களா?'' என்று கேட்டாள் பொன்னி.

''உம்... உன் புண்ணியத்திலே நல்லா இருக்கா'' என்று சிரித்துக் கொண்டே சொல்லிவிட்டுக் காசை அவளிடம்கொடுத்து விட்டு, பூவை வாங்கிக் கொண்டு சைக்கிளை நோக்கி நடந்தான் அரவிந்தன்.

இன்று நேற்றல்ல, கடந்த பத்து வருடங்களாகப் பொன்னியிடம் பூ வாங்குகிறான் அரவிந்தன்.

அம்சாவுக்கு அவன் மாலையிட்ட நாள் முதல், தினம் திருவெறும்பூருக்கு வேலைக்குச் சென்றுவிட்டுத் திரும்பும் போது பொன்னியிடம் பூ வாங்கிக் கொண்டுதான் வீட்டுக்குச் செல்வான்.

அவனுக்குக் கல்யாணமான புதிதில் அவனிடம் தினசரி பூ வாங்குவதைக் கண்ட பொன்னி ஒருநாள் அவனிடம் கேட்டாள்.

''ஐயாவுக்கு இப்பத்தான் கல்யாணம் ஆச்சா?''

''இல்லே... இப்ப நான் ரயிலிலிருந்து வர்றேன்.''

அவனது பதிலைக் கேட்டுவிட்டு அவள் 'கலகல'வெனச் சிரித்தாள்.

''ஏன் கேட்கிறே?''

''தினம் நிறையப் பூ வாங்குறீங்களே, அதனால் தான் கேட்டேன்.''

''ஆ... மா...ம்... போன மாசந்தான் ஆச்சு.''

''அப்படிங்களா?'' என்றவள் ஒரு பந்து பூவைச் சுருட்டி அவனிடம் நீட்டினாள்.

''இது எதுக்கு?''

''இந்தப் பொன்னி கொடுத்தா வாங்கக் கூடாதா? எடுத்துக்கிட்டுப் போயி அம்மா கிட்டே கொடுங்க.''

அவன் பணத்தைக் கொடுக்க அவள் மறுக்க—

''ஐயா அம்மாவை ஒரு தடவை பார்க்கணும்னு தோணுது. ஒருநாள் வீட்டுக்கு வரட்டுங்களா?''

''வாயேன்.''

வரவேண்டிய வழியைச் சொல்லிவிட்டு நடந்தான் அரவிந்தன்.

மறுநாள் காலையில் கைநிறையப் பூவோடு வீட்டுக் கதவைத் தட்டினாள் பொன்னி.

அம்சாவுக்கு அவளை அறிமுகப்படுத்தினான் அரவிந்தன்.

''அட மகமாயி அப்படியே மகாலட்சுமி போல இருக்கீங்களே...'' என்று அம்சாவைப் பார்த்து வியந்த பொன்னி, ''அம்மா, நீங்களும் ஐயாவும் அந்த மகமாயி தயவுலே நிறைய அமோகமா வாழணும்'' என்றாள்.

அம்சாவுக்குப் பொன்னியை ரொம்பவும் பிடித்துப் போய் விட்டது.

அவள் மறுத்த போதும் அவளுக்குக் காபியும் டிபனும் கொடுத்து அனுப்பி வைத்தாள் அம்சா.

''அடிக்கடி வா பொன்னி.''

''வர்றேன் அம்மா.'' என்ற பொன்னி ''சும்மாதானே கிடக்கிறேன். பொழுது சாஞ்சா என் மச்சான் நல்லாக் குடிச்சிட்டு வரும். ராத்திரியிலே அதுகிட்ட அடியும் உதையும் வாங்கவே நேரம் சரியா இருக்கும். பகல் நேரத்துல நேரம் கிடைக்கும். முடிஞ்சப்போ நிச்சயம் வர்றேன்ம்மா...''

பொன்னி புறப்பட்டாள்.

அதற்குப் பிறகு பொன்னி அவர்கள் வீட்டுக்கு அடிக்கடி வருவாள். அவர்கள் வீட்டில் நடக்கும் எந்தக் காரியத்துக்கும் பொன்னிக்கு நிச்சயம் அழைப்பு உண்டு.

அந்தக் குடும்பத்தில் தானும் ஒருத்தி என்ற உரிமையோடு அவர்களுடன் பழகி வந்தாள் பொன்னி.

அன்று மாலை.

பொன்னியின் எதிரே வந்து நின்றான் அரவிந்தன்.

ஜெயவண்ணன்

காசைக் கொடுத்தான்.

பொட்டலம் கைமாறியது.

''என்ன பொன்னி இன்னைக்குப் பொட்டலம் பெரிசா இருக்கு.''

''சந்தனமல்லி வந்தது. அம்மாவுக்குப் பிடிக்குமென்னு வச்சிருக்கேன். நீங்க ஒண்ணும் அதுக்காகக் காசு தனியே தர வேண்டாம். காலையிலே வீட்டுக்குப் போயிருந்தேன். அம்மா உண்டாயிருக்காங்கன்னு சொன்னாங்க. பத்து வருஷத்துக்குப் பிறகாவது ஆண்டவன் கண் திறந்தானே! ஐயா. அம்மாவைக் கவனமாப் பார்த்துக்குங்க. நல்லா ஓய்வு எடுத்துக்கச் சொல்லுங்க. சாயந்திரத்திலே நான் வந்து பத்து பாத்திரத்தை எல்லாம் விளக்கி வச்சுடறேன்னு சொல்லுங்க. எப்படியோ அம்மா உங்களைப் போல ஒரு குட்டி ராஜாவைப் பெற்றெடுத்தா அதுவே எனக்குப் பெரிய சந்தோஷம்...''

அவள் பேசியதைக் கேட்டு அரவிந்தன் அப்படியே அசந்து நின்றுவிட்டான் —

இவள் யாரோ? அம்சா யாரோ?

அவளிடம் தான் இவளுக்கு எவ்வளவு அன்பு பாசம்?

அவள் தாய்மை அடையப் போவது இவளுக்கு ஏன் இவ்வளவு மகிழ்வைத் தருகிறது?

அவளது நலனில் இவளுக்கு ஏன் இவ்வளவு அக்கறை? எங்கேயோ பிறந்த அம்சாவின் மேல் எங்கேயோ வளர்ந்த இந்தப் பொன்னி இவ்வளவு பாசத்தைக் கொட்டுகிறாளே?

இது ஏன்?

அவனுக்குப் புரியவில்லை.



ஏழு மாதங்கள் எந்தவிதக் கவனமும் இன்றி ஓடிவிட்டன.

இடையே, அரவிந்தன் பூ வாங்கும் தினசரி சாயங்கால நேரங்களில் பொன்னி தவறாது அம்சாவைப் பற்றிக் கேட்பாள்.

அன்று மட்டும் ஏனோ பொன்னியின் முகத்தில் அசாத்தியச் சோர்வு...

''பொன்னி, ஏன் 'டல்'லா இருக்கே?'' கேட்டான்.

''ஒண்ணுமில்லே ஐயா, இன்னும் ஒரு மாசத்துக்கு உங்களையும் அம்மாவையும் பார்க்க முடியாது...''

''ஏன் பொன்னி, ஊருக்குப் போறியா?'' புரியாது கேட்டான் அரவிந்தன்.

''ஆமாம், என் புருஷன் நிறைய குடிச்சிட்டு இப்போ ஆஸ்பத்திரியிலே இருக்கு. டி. பி. வியாதி வேறு முற்றிவிட்டதாம். செங்கிப்பட்டிக்குப் போய் ஒரு மாசம் பெட்டிலே வச்சிருந்தாத்தான் சரியாகும்னு டாக்டர் சொல்லிட்டாரு. காலையிலே போறேன் ஐயா...

''அம்மாகிட்டே சொல்லிடுங்க... திரும்பி வந்து பார்க்கறேன்...''

சொல்லும்போது அவள் குரல் கரகரத்தது.

''போயிட்டு வா பொன்னி. உன் புருஷன் நிச்சயம் குணமாயிடுவார்...''

''உங்க ஆசீர்வாதம் போல நடந்தாச் சரிங்க ஐயா...'' என்றவள் பூப்பொட்டலத்தை எடுத்து அவனிடம் கொடுத்துவிட்டுக் கண்களில் வழிந்த கண்ணீரை மெல்லத் துடைத்து விட்டுக் கொண்டாள்.

அரவிந்தனுக்கு அவளது கோலம் மனத்தை நெருடத் தொடங்கியது.

பாவம், இவளுக்கா இப்படிப்பட்ட துன்பம் வரவேண்டும்?

---

''நேரம் நல்ல நேரம்'' நிகழ்ச்சியில் வைரமுத்துவிடம் குமாரி சாந்தி கேட்டார்: ''கண்ணதாசன் 'சிம்பிள்' கவிஞர், என்றும், தங்களை 'காஸ்ட்லி' கவிஞர் என்றும் சொல்கிறார்களே, ஏன்?''

வைரமுத்துவின் பதில்: ''கண்ணதாசன் ஒரு வேஷ்டி கட்டிக்கொண்டு வந்ததால் 'சிம்பில்' கவிஞர் என்றும் நான் 'பேண்ட்' போட்டுக்கொண்டு வருவதால் என்னை 'காஸ்ட்லி' கவிஞர் என்றும் கூறுகிறார்களோ என்னவோ! என்னை காஸ்ட்லி கவிஞர் என்று கூறுபவர்கள் சிம்பிள் கவிஞர் கண்ணதாசனுக்கு கொடுத்த பணத்தை விடக் குறைவாகத்தானே கொடுக்கிறார்கள்? இதைக் கொஞ்சம் தயாரிப்பாளர்களிடம் சொல்லி வையுங்களேன்!''

கேட்டு ரசித்தவர்: மோகனூர் வி.பாலு



---

எவருடைய இன்ப துன்பங்களையும் சிறிது கூட லட்சியம் செய்யாது நாட்கள் ஓடத் தொடங்கி விட்டன.

ஒரு மாத இடைவெளிக்குப் பின்—அன்று—

அரவிந்தன் வழக்கம் போல் ரயிலைவிட்டு இறங்கி, முருகனைத் தரிசித்து விட்டுத் திரும்பியபோது பொன்னி அவன் பார்வையின் 'ப்ரேமில்' நுழைந்தாள்.

அவளும் இவனைப் பார்த்து விட்டாள்.

''ஐயா.''

அவளருகே நடந்து சென்றான் அரவிந்தன்.

''பொன்னி, இப்ப உன் புருஷனுக்கு எப்படி இருக்கு?''

''அதுக்கு என்னங்க ஐயா குறைச்சல்? நேற்றுதான் உடல்தேறி திரும்பி வந்தாம். ஆனா டாக்டர் குடிக்கவே கூடாதுன்னு கண்டிஷனா எச்சரித்தார். இந்தப்பாவி மனுஷன் கேட்டாதானே. ராத்திரியே போய்க் குடிச்சுட்டு வந்துட்டுது...'' என்ற பொன்னி, ''அத விடுங்க ஐயா. அம்மா எப்படி இருக்காங்க? குழந்தை பிறந்துட்டுதா? ஆணா, பெண்ணா? வியாபாரம் முடிச்சுட்டு வீட்டுக்கு வர்றேன்னு அம்மாகிட்டே சொல்லுங்க ஐயா...'' என்று படபடவென்று பேசிய பொன்னி, அவனிடமிருந்து எந்த பதிலையும் எதிர்பாராமல் பூவைப் பொட்டலமாகக் கட்டி அவனிடம் நீட்டினாள்.

பூவை வாங்கிக் கொண்டான் அரவிந்தன்.

அவன் கொடுத்த காசை இயந்திர ரீதியாக வாங்கிக் கொண்டு, ''ஐயா, என் கையாலே அம்மாவுக்காக நான் தினம் பூ கொடுக்கணும்... அப்படி ஒரு வாய்ப்பு எனக்குக் கடைசி வரை கிடைச்சா அதுவே எனக்குப் பெரிய சந்தோஷம்...'' என்று நெகிழ்ச்சியோடு கூறிய பொன்னியை நிமிர்ந்து பார்த்தான் அரவிந்தன்.

''இனிமே முன்போலவே தினம் பூவைக் கட்டி வை. நானும் தினம் வாங்கிட்டுப் போறேன். உன் விருப்பம் போலவே நீ கடைசி வரை அம்சாவுக்காகப் பூ கொடுக்கலாம், ஆனா...''

அவள் சட்டென்று அவனை நிமிர்ந்து பார்த்தாள்.

அரவிந்தன் அமைதியாகப் பேசினான்: ''ஆமாம் பொன்னி. இனிமே நீ தரப்போற பூ அம்சாவோட கூந்தலுக்கு இல்லே... இறந்து போன அவளோட படத்துக்குத்தான்...''

சொல்லிவிட்டு, திரும்பிச் சாலையில் அமைதியாக நடக்கத் தொடங்கினான் அரவிந்தன்.

# மூலக் கனல்

### முன்கதைச் சுருக்கம்

எழிலிருப்பு ஜமீன் உள்பட்டணத்தில் ராஜ சம்பந்தத்தில் பிறந்தவன் தான் திருமலை என்றாலும் உரிமைகள் ஏதும் நிலை நாட்டிக் கொள்ள முடியாத நிலையில் அநீதியான முறையில் அநாதையாக வெளியேற்றப்பட்டதுடன் அடித்து நொறுக்கவும் படுகிறான். அவனுக்கு அடைக்கலம் தருகின்றனர், நந்தவனத்துப் பண்டாரமும் அவர் மகள் சண்பகமும். பழிவாங்கும் உணர்ச்சி உள்ளத்தில் கொந்தளிக்க அதற்கு முதல்படியாக வாழ்க்கையில் உயர வேண்டும் என்று தீர்மானித்து சேர்ந்திருந்த இயக்கத்தின் உள்ளூர் தலைவர் பொன்னுசாமியுடன் தொடர்பு கொண்டு அரசியல் துறையில் படிப்படியாக முன்னேறுகிறான் திருமலை. காதலித்து மணந்து கொண்ட செண்பகத்தையோ அவளிடம் தனக்குப் பிறந்த மகனையோ போய்ப் பார்த்துப் பேசவோ கவனிக்கவோ கூட நேரமில்லாத அளவில் அவன் வேகமாக அரசியலில் வளர வளரக் கூடவே அதர்மப் போக்குகளும் அவனிடத்தில் வளர்கின்றன. குடிப்பழக்கமும் நெறிகெட்ட பெண்களுடன் சகவாசமும் ஏற்படுகின்றன. நாடகம், திரைப்படத் துறைகளிலும் நுழைந்து கதை, வசன கர்த்தா பாடலாசிரியன் தயாரிப்பாளன் என்று பலவிதமாகப் பெரும் புகழ்பெற்று இயக்கத்துக்கும் புகழ் சேர்க்கிறான்.

இயக்கம் தேர்தல் களத்தில் முதன் முதலாக இறங்கிய போது உள்பட்டணத்தில் இவன் எதிரியாக இருந்து இப்போது அமைச்சராகவும் மாறி விட்ட சின்ன உடையாரை எதிர்த்து நின்று தோல்வி காண்கிறான். என்றாலும் இயக்கம் சேர்ந்திருந்த நோக்கோடு நில்லாது அரசியலிலும் சாதனைகள் நிகழ்த்தி எதிர்காலத்தில் ஆட்சியைக் கைப்பற்றவும் முடியும் என்பது நிரூபணமாகிறது.

மனைவி செண்பகத்தின் மரணமும் தன் மகனைத் தன்னுடன் அனுப்பித் தராத அவளுடைய உறவினர் போக்கும் திருமலையை ஓரளவு பாதித்தாலும் அரசியலில் முன்னேறுகிற வேகமும் ஆர்வமும் சீக்கிரமே துயரை மறக்கச் செய்கின்றன.

அவன் தொடர்பு கொண்டிருந்த ஒரு வாளிப்பான இளம் நடிகையின் வீட்டுக்கு ஒருநாள் இரவு அவன் சென்றபோது அவளுடன் ஒரு தயாரிப்பாளர் – டைரக்டர் இருக்கக் கண்டு ஆவேசம் கொண்டு அவனைக் கொன்று விடுகிறான் திருமலை. எக்காரணத்தினாலோ அவனுக்கு அப்போது எழிலிருப்பு உள்பட்டணம் ஜமீன் வகையறு ஆட்கள் நினைவுக்கு வந்தனர். போலீஸ் திருமலையைச் சந்தேகிக்கவில்லை. அந்த நடிகையும் பயந்து அவனுக்கு அடங்கி நடக்கிறாள்.

இந்தி எதிர்ப்புக் கலவரத்தின்போது எதிர்பாராத விதமாக நடந்த ஒரு சிறுவனின் மரணத்தை இயக்கத்துக்கும் தனக்கும் ஆதரவாகப் பிரசாரம் செய்யக் கருதி அச்சிறுவனின் பெற்றோரைக் காணச் சேரிக்குச் சென்று தாக்குதலுக்கு உள்ளாகித் திரும்புகிறான் திருமலை...

## அத்தியாயம் 17

அவன் வெட்டுக் காயத்தோடு தனியார் மருத்துவமனையில் சிகிச்சை பெற்று வந்தபோது யாரும் எதிர்பாராத விதமாக ஒரு மாலைவேளையில் உள்பட்டணம் மாஜி ஜமீன்தாரும் அப்போதைய காங்கிரஸ் அமைச்சருமான சின்னஉடையாரும், அவர் மனைவியும் அவனைப் பார்த்து ஆறுதல் கூறி விட்டுப் போக வந்திருந்தார்கள். ''ஒரே ஊர்க்காரங்க. அதுனலே பார்த்து ஆறுதல் சொல்லிட்டுப் போக வந்திருக்காரு. பெரிய மனுஷன் என்ன இருந்தாலும் பெரிய மனுஷன்தான்' — என்று திருமலையைச் சேர்ந்தவர்களே அதை வியந்தார்கள். திருமலைக்கோ இதில் வழக்கம் போல் தன் எதிரியைப் பழி வாங்கி முடித்து விட்டாற் போன்ற திருப்திதான் நிலவியது. எங்கோ உச்சாணிக் கொம்பில் இருப்பதாகப் பாவித்துக் கொண்டிருந்த கிருஷ்ணராஜ உடையார் தன்னைத் தேடி வந்தது தன் இயக்கத்து ஆட்களிடம் தன் மரியாதையை உயர்த்தியிருப்பதாக உணர்ந்தான் அவன். தன்னைப் பற்றி அவனுக்குள்ளே நிரம்பியிருக்கும் குரோதத்தையும், துவேஷத்தையும் அகற்றிவிட வேண்டுமென்று முயன்றார் உடையார். அவனோ அவர் தன்னிடம் பெருந்தன்மையாக நடந்து கொள்வது, தன்னைத் தேடி வருவது இவற்றையெல்லாம் தனக்கு மற்றவர்களிடம் அந்தஸ்து உயருவதை அங்கீகரித்துக் கொண்டு அவர் மேல் தழும்பேறியிருந்த குரோதத்தை அப்படியே வைத்துக் கொண்டிருந்தான். ஆஸ்பத்திரியில் வெட்டுக்காயத்துடன் படுத்திருந்ததையும், புது மனைவியான அந்த இளம் நடிகை அருகே அமர்ந்து கண்ணீர் உகுப்பதையும் கச்சிதமாகப் பல கோணங்களில் தேர்ந்த சினிமாக் கேமரா நிபுணர்களை வைத்துப் புகைப்படமாக எடுத்து வைத்துக்கொண்டான். எல்லோரும் இதைப் போய்ப் புகைப்படம் எடுப்பானேன் என்று யோசித்தார்கள். அவனோ எதைச் செய்தாலும் ஒரு திட்டமிட்ட மனத்தோடு தீர்மானமாகச் செய்தான். இந்தி எதிர்ப்புப் போர் என்கிற பிரளயம் நடந்து முடிந்தபின் அடுத்த பொதுத் தேர்தலை எதிர்நோக்கியிருந்த மாதங்களில் திருமலைக்குத் தீவிர

நா. பார்த்தசாரதி

மான அரசியற்பணிகள் இருந்தன. அவன் திறையச் சுற்றுப் பயணங்கள் செய்ய வேண்டியிருந்தது.

அப்படித் திருமலை சுற்றுப்பயணத்தில் இருந்தபோது ஒரு சினிமா மஞ்சள் பத்திரிகையில் படித்த கிசுகிசு ஒன்று அவனை நிம்மதியிழக்கச் செய்தது. அவன் மனைவியும் பிரபல நடிகையுமான அந்த இளம் வயது அழகி வேறு ஒரு நடிகனுடன் நெருக்கமாகிக் கொண்டிருப்பதாக எழுதித் திரையில், அந்த நடிகனும் அவளும் நெருக்கமாக நடித்த ஒரு காட்சியை வேறு அந்த ஏடு பிரசுரித்திருந்தது. ஏற்கெனவே நிரந்தரமாக அவள்மேல் திருவுக்கு ஒரு சந்தேகம் உண்டு. முன்னதாகவே ஒரு முறை துரோகம் செய்தவள். மறுபடியும்துரோகம் செய்ய மாட்டாள் என்பது என்ன உறுதி? பெண்தானே? அதுவும் சினிமா உலகைச் சேர்ந்தவள். தவிர்க்க முடியாத ஓர் இரகசியக் காரணத்துக்காகத் தன்னிடம் கட்டுப்பட்டுக் கிடக்கிறவள் உண்மையில் விசுவாசமாகத் தான் இருந்தாக வேண்டுமென்று எப்படி எதிர்பார்க்க முடியும்? ஏதோ அம்மி மிதித்து அருந்ததி பார்த்துத் தாலி கட்டிய மனைவி பாழ் போகிற மாதிரி இந்த 'ஸெலுலாய்ட்' பத்தினியை அவன் எதிர்பார்த்திருக்கக் கூடாது. இவளது இணையிலாக் கவர்ச்சியும், மாபெரும் சொத்தும் ரொக்கமும் இனி வேறு கைக்கு இவள் போய் விடக் கூடாது என்பதில் திருவை அதிக அக்கறை கொள்ளச் செய்திருந்தன.



நெருப்பில்லாமல் புகையாதென்று தோன்றியது. உடனே இரண்டு நாள் சுற்றுப் பயண நிகழ்ச்சிகளை ரத்துச் செய்துவிட்டு முன்னறிவிப்பின்றி மதுரையிலிருந்து விமானத்தில் புறப்பட்டுச் சென்னை சென்றான் திரு. பங்களாவுக்குள் அவன் நுழையும் போதே வாசலில் கூர்க்கா பயபக்தியோடு அருகே வந்து, ''அம்மா ஹைதராபாத் போயிருக்காங்க... அங்கே ஒரு வாரம் தெலுங்குப்பட அவுட் டோர் கால்ஷீட்''— என்றான். உள்ளே வேலைக்காரி சமையல்காரன், மற்ற எடுபிடிகள் எல்லாம் இருந்தார்கள். சரி வந்தது தான் வந்தோம், உடனே திரும்பினால் சரியிராது என்று ஒரு நாள் அங்கே தங்கினான். மனத்துக்குள் ஒரே சந்தேகம் குடைந்தது. இரவு படுக்கையறையில் அவனுடைய தனி உபயோகத்திலிருந்த ஸ்டீல் பீரோ, வார்ட்ரோப், சூட்கேஸ்கள் எல்லாவற்றையும் போலீஸ் ரெய்டு போலச் சோதனை போட்டதில் தெலுங்கில் எழுதப்பட்ட சில கடிதங்கள் கிடைத்தன. அவனுக்குத் தெலுங்கு தெரியாது. உடனே தெரிந்து கொள்ளவேண்டும் போல் துடிப்பாகவும், தவிப்பாகவும் இருந்தது. அப்போது இரவு மணி பதினொன்றரை. வீட்டுக்குள் இருக்கிற வேலைக்காரி ஒருத்திக்கே தெலுங்கு நன்றாகத் தெரியும். அவளைப் படிக்கச் சொல்லிக் கடிதங்களின் சுருக்கத்தை அவனுக்குத் தெரிந்த அரை குறையான உடைசல் தமிழில் சொல்லச் செய்தால் கூடக் கடிதங்களின் சாராம்சம் புரிந்து விடும். ஆனால் அந்த வேலைக்காரி இன்றில்லாவிட்டாலும் என்றாவது ஒருநாள் இப்படி அவனுக்கு வந்த கடிதங்களைக் கொடுத்துப் படிக்கச் சொல்லிக் கேட்ட விவரத்தைத் தன் எஜமானியிடம் சொல்லாமல் இருக்க மாட்டாள். அதனால் இந்த வீட்டோடு தொடர்பில்லாத யாராவது ஒரு மூன்றாவது ஆளைக் கொண்டு கடிதங்களைத் துப்பறிய வேண்டுமென்று திட்டமிட்டான். பரபரப்பை அடக்கிக் கொண்டு அவனால் நிம்மதியாக உறங்க முடியவில்லை. எப்படியாவது உடனே அந்தக் கடிதங்களைப்பற்றித் தெரிந்து கொண்டாக வேண்டும் என்கிற ஆவலை அவனால் அடக்கவும் முடியவில்லை. தடுக்கவும் முடியவில்லை. தியாகராய நகரில் தெலுங்குப் பள்ளிக்கூடத்தில் வேலை பார்க்கும் ஆசிரியரை அவனுக்கு நன்றாகத் தெரியும். ஏற்கெனவே ஒரு தெலுங்குப் படத்தைத் தமிழில் 'டப்' செய்து கொடுக்கிற . பணியில் அவர் அவனுக்கு உதவியாயிருந்திருக்கிறார். இன்று இந்த நள்ளிரவில் போய் அவரை எப்படி எழுப்புவது? ஆனால் அவனைப் பொறுத்தவரை இன்னும் பல சான்ஸ்களை அவனிடமிருந்து எதிர்பார்த்துக் கொண்டிருக்கிற அவர் எப்போது எழுப்பினாலும் வருத்தப்பட மாட்டார். அவன் கடிதங்களை எடுத்துக் கொண்டு காரில் தியாகராயநகர் வைத்தியராமய்யர் தெருவை நோக்கிப் புறப்பட்டுப் போனான். அவனுடைய துர்அதிர்ஷ்டம் அவர் ஊரில் இல்லை. ஏதோ வேலையாக நெல்லூர்போயிருக்கிறார் என்று தூக்கக் கிறக்கத்தோடு கதவைத் திறந்த அவர் மனைவி சொன்னாள். அவளையே கடிதங்களைப் படிக்குமாறு கெஞ்சினான். அகாலத்தில் காரில் வந்து இறங்கி அவுட்ஹவுசுக்குள் நுழைந்து பேசும் ஒரு சினிமா ஆளை நாலுதரம் அப்படி ஒரு வீட்டுக்குத் தேடிவந்து விட்டால் எத்தகைய அபவாதமும் கலபமாக எழுந்து விடும் என்று பயந்தாள் அந்தப் பெண். மாட்டேனென்று மறுத்துச் சொல்லி அவனைத்திருப்பியனுப்பினால் கணவன் வந்து அதற்காகக் கோபித்துக் கொள்ளக் கூடும் என்றும் பயமாக இருந்தது. வாயிற்புறத்து விளக்கைப் போட்டு அந்த விளக்கு வெளிச்சத்தில் நின்றபடியே அவன் கொடுத்த கடிதங்களைப் படித்து விவரம் சொன்னாள் ஆசிரியரின் மனைவி. 'இதை வச்சுக்குங்கம்மா நான் அப்புறமா வந்து பார்க்கிறேன்னு அவரு வந்ததும் சொல்லுங்க'— என்று ஒரு நூறு ரூபாய் நோட்டை எடுத்து நீட்டினான் திரு. முதலில் அந்தப் பெண் அதை வாங்கத் தயங்கினாள். மீண்டும் வற்புறுத்தவே அக்கம்பக்கம் பார்த்து விட்டு மிரட்சியோடு அதை வாங்கிக் கொண்டாள். திருமலை குழம்பிய மனத்தோடு திரும்பினான். கடிதங்களிலிருந்து கிடைத்த சில வாக்கியங்கள் அவனை எச்சரித்தன. ''நீ எவ்வளவு நாளைக்குத் தான் இப்படிப் பயந்து உன் வாழ்க்கையையும், அளவற்ற வருமானத்தையும் ஓர் அரவ வாடுவுக்காக வீணடித்துக் கொண்டிருக்கப் போகிறாய்? ஒரு நல்ல கிரிமினல் வக்கீலை எனக்குத் தெரியும். கோர்ட், கேஸ் என்று வந்தால் கூட உன் முன்னிலையில் அவன் தான் கொலையைச் செய்தான் என்று நிரூபித்து விட முடியும்' — என்பதாக ஒரு கடிதத்திலும், வக்கீலைச் சந்தித்துக் கேஸ் விஷயமாகப் பேசியதாக மற்றொரு கடிதத்திலும், விரைவில் அதே வக்கீலுடன் சென்னை புறப்பட்டு வரப் போவதாக இன்னொரு கடிதத்திலும் குறிப்பிடப்பட்டிருந்தது. மூன்று கடிதங்

---



கொச்சியில் கப்பல் கட்டும் தளம் ஆரம்பிக்கப்பட்ட போது, உற்பத்தி துவங்கியதும் வருடத்திற்கு இரண்டு கப்பல்கள் கட்டி விற்பனை செய்ய வேண்டும் என தீர்மானிக்கப்பட்டது. இன்று அந்த தளம் ஆரம்பித்து 13 வருடங்கள் ஆகியும் இரண்டே இரண்டு கப்பல்கள் தான் வெளியே சென்றுள்ளன. ஒன்று ராணி பத்மினி. அதை முடிக்க 4 வருடங்கள் ஆயிற்று. இரண்டாவது ரத்னதீப். இந்தக் கப்பலைக் கட்ட 44 மாதங்கள் ஆயிற்று. மூன்றாவது; நான்காவது கப்பல்கள்; பாதி நிலைகளிலேயே உள்ளன.

ஆதாரம்: இ வீக். தகவல்: ராஜேஸ்வரி.

களிலுமே எழுதியவர் விலாசம் ஒன்றாகவே இருந்தது. குப்பைய செட்டி, யான் மெர்ச் சண்ட், சாயிநகர் எக்ஸ்டென்ஷன் —ஹைத ராபாத் — இப்போது அவள் ஹைதராபாத் தான் போயிருக்கிறாள் என்பதும் நினைவுக்கு வந்தது. தங்கமுட்டையிடும் விலைமதிப்பற்ற பறவை தன் கைவசமிருந்து பறந்து போய் விடுமோ என்று அவனுள் கவலை பிறந்து அரிக்க ஆரம்பித்தது. அவள் முன்னிலையி லேயே தான் கொலை செய்தது போன்ற பரம இரகசியங்களை, பிறன் ஒருவனிடம் அவள் கலந்து பேசியிருக்கிறாள் என்பதே பொறுத்துக் கொள்ள முடியாத குற்றமா யிருந்தது.

இதை எல்லாம் வெளிப்படையாகவே எடுத்துப் பேசி அவள் திரும்பியதும் சண்டை போடலாமா அல்லது கமுக்கமாக வைத்திருந்து மற்ற ஏற்பாடுகளையும் பாது காப்புகளையும் பக்காவாகச் செய்து கொள்ளலாமா என்று சிந்தித்தான். கமுக்க மாக இருப்பதே நல்லதென்று தோன்றியது. பங்களாவில் இப்போதிருக்கும் சகல வேலை யாட்களையும் கணக்குத் தீர்த்து அனுப்பி விட்டு அந்த இடங்களில் தன் ஆட்களை நிய மிப்பது என்ற முடிவுக்கு வந்தான் அவன். இது அவளை மற்ற வெளித் தொடர்புகளி லிருந்து பாதுகாக்கவும், ஒற்றறியவும் பயன் படும் என்பது அவன் நம்பிக்கையாயிருந்தது. கொலை நடந்த அன்று கேட்டில் காவலாளி யாயிருந்த கூர்க்கா அவனாகவே வேலையை விட்டுவிட்டு நேபாளத்துக்குப் போய் விடப் போவதாகத் தெரிவித்தான். கூடவே கொஞ்சம் பணத்தைக் கொடுத்து அவனை அனுப்பி வைத்தான் திருமலை. மற்ற வேலைக் காரர்களுக்கும் கணக்குத் தீர்த்து ஒவ்வொரு நிமிஷமும் உள்ளே என்ன நடக்கிறது, யார் வருகிறார்கள், போகிறார்களென்று தனக்குச் சொல்லக் கூடிய நம்பிக்கையான ஆட்களை நியமித்தும் முடித்தாயிற்று. இனி அவனறி யாமல் எந்தத் தகவலும் வெளியே போக முடியாது. உள்ளே வர முடியாது என்று ஆகியிருந்தது. சுற்றுப்பயணத்தைப் பாதியில் நிறுத்திவிட்டு இரண்டு நாளில் திரும்பலாம் என்று வந்தவள் பத்துநாள் வரை திரும்ப முடியாமல் ஆகிவிட்டது.

ஒரு வாரம் கழித்து அவள் ஹைதரா பாத்திலிருந்து திரும்பிச் சென்னை வந்த போது பங்களாவில் இருந்த வாயிற்காவலன் முதல் சமையற்காரிவரை புதிதாயிருந் தார்கள். 'இவள்தான் எஜமானி' — என்று அவளையே அவர்களுக்கு அவன் அறிமுகம் செய்து வைக்க வேண்டிய நிலையிலிருந்தான் அவன். ஏற்கெனவே ஒரு விசுவாசமான தெலுங்கு வேலைக்காரி ஹைதராபாத் வந்து நடந்தவற்றை எல்லாம் அவளிடம் சொல்லிவிட்டுத்தான் போயிருந்தாள். தன் வீட்டிலேயே சகல வசதிகளுடனும் தான் சிறை வைக்கப்பட்டிருப்பது அவளுக்கு மெல்ல மெல்லப் புரிந்தது. தன் தனியறை யில் சூட்கேஸில் தான் வைத்திருந்த கடிதங் களைக் காணவில்லை என்பதை வைத்து அவ ளால் நடந்தவற்றை அனுமானம் செய்து கொள்ள முடிந்தது. அவள் அவனிடம் அதிகம்



கணவன்: உன்னை நான் மனைவியாக அடையக் கொடுத்து வச்சிருக்கணும்.
மனைவி: அட்டாடா, இப்பவாவது என் அருமை தெரிஞ்சுதா உங்களுக்கு.
கணவன்: சும்மா இரு. இது நான் ஆபீஸ் நாடகமொன்றில் பேச வேண்டிய வசனம்!

—சரஸ்வதி பஞ்சு.

பேசவேயில்லை. ''மறுபடி ஊர் போகிறேன். வர ஒரு வாரம் ஆகும்'' — என்று திருமலை சொல்லிக் கொண்டு புறப்பட்டபோது, ''ஒரு நிமிஷம் நில்லுங்க... உங்ககிட்டே ஒரு கேள்வி கேட்கணும்...'' என்றாள் அவள். ''என்ன? கேளேன்?'' — என்று ஒன்றுமே நடக்காதது போல் சிரித்துக் கொண்டு அவளெதிரே நின்றான் திரு. அவளுக்கோ, உள்ளூற ஒரே எரிச்சல்.

''இது வீடா? இல்லே ஜெயிலான்னே புரியலே...?''

''நாம எப்படி எடுத்துக்கிறோமோ அப்படித்தான்.''—

சிரித்துக் கொண்டேதான் பதில் சொல்லிவிட்டுப் போனான் அவன். பொதுத் தேர்தலுக்கு நாள் நெருங்கியது. அவன் எழிலிருப்பில் வழக்கமாக நிற்கிற தொகுதியி லேயே நிற்க வேண்டுமென்று ஏற்பா டாயிற்று. 'மொழிப்போரில் விழுப்புண் பட்ட வீரர் — அழிப்போரை எதிர்த்தழிக்கும் ஆற்றல் மறவர்'' — என்று இந்தி எதிர்ப்புப் போராட்டத்தின் போது வெட்டுக்காயத் தோடு அவன் மருத்துவமனையில் படுத் திருந்த காட்சியைக்காட்டும் சுவரொட்டிகள் விளம்பரத்துக்காகத் தயாராயின. இந்த முறை சின்ன உடையாரை எப்படியும் டிபாசிட் இழக்கச் செய்து விட வேண்டும் என்று முனைப்பாக வேலைகளைச் செய்தான் அவன். மாணவர்கள் எல்லா இடங்களிலும் வீடு வீடாகச் சென்று ஒவ்வொரு குடும்பத் தையும் விழுந்து கும்பிட்டு வணங்கி ஆளும் கட்சிக்கு ஓட்டளிக்கக் கூடாதென்று வேண்டினார்கள். விலைவாசிகள் ஏறியிருந்தன. அரிசி, கோதுமை கடைகளில்கிடைக்கவில்லை. திருமலை வகையறா இயக்கத்தினர் தாங்கள் ஆட்சிக்கு வந்தால் ஒரு ரூபாய்க்கு ஒரு படி அரிசி போடுவதாக வாக்களித்தார்கள். பிரசாரங்கள் மக்களை வசியப்படுத்திக் கவரக் கூடிய வகையில் இருந்தன. மக்கள் மயங்கி னார்கள்.

(தொடரும்)







## வாசகர் பங்கு

**கு. ராமமூர்த்தி, வேலூர்**

என் தங்கை குழந்தை மீனுவுக்குப் பள்ளியில் சேர நேர்முகத் தேர்வு. 'உன் பெயர் என்ன?' என்று ஆசிரியர் கேட்டதும் அழகாய்ப் பதில் சொன்னவள், 'உங்கப்பா பெயர் என்ன?' என்றதற்கு 'நீங்க என்னை ஸ்கூலில் சேர்த்துக்கிட்டாதான் சொல்லுவேன்' என்றாளே பார்க்கலாம்!

**ஆர். நடராஜன், கும்பகோணம்**

மாமாவின் ஆறு வயது மகனை பள்ளியில் சேர்க்க முயன்றபோது, தலைமை ஆசிரியை ரொம்ப 'லேட்டாக' வந்ததால் இடமில்லை என்றார். உடனே குட்டி மருமான் பள்ளியின் இடிந்து போன கட்டிடத்தின் ஒரு பகுதியைக் காட்டி, ''டீச்சர் என்னைச் சேர்த்துக்கிட்டா நான் இன்ஜினியராகி புது ஸ்கூல் கட்டித் தருவேன்'' என்றான். அட்மிஷன் கிடைத்து விட்டது.

**பி. எஸ். வசந்தா நாகராஜ், சென்னை-4**

"What is your name?." 'How old are you?''

என்ற கேள்விகளுக்குப் பதில் சொல்லப் பழக்கியிருந்தேன் என் பெண்ணுக்கு. பள்ளியில் சேர்க்க அழைத்துப் போன போது இந்தக் கேள்விகளையே ஆசிரியரிடம் கேட்டு விட்டாள்! அவரும் சிரித்துக் கொண்டே பள்ளியில் சேர்த்துக் கொண்டார்.

**பி. இளவரசி, தர்மபுரி**

நுழைவுத் தேர்வில் பெரிய A B C D எழுதச் சொன்னார்கள் என் பிள்ளையை. முடித்ததும் சின்ன ABCD (a b c d) எழுது என்று சொல்ல, அவன் முதலில் எழுதிய எழுத்துக்களையே குட்டிக் குட்டியாக எழுத, அவர்கள் பயங்கரமாகச் சிரிக்க ;நாங்கள் பட்டபாடு....

**இந்திரா, பம்பாய்-22**

அட்மிஷனுக்காகப் போன போது என் மூன்று வயது மகளை இந்த ஸ்கூல் பிடித்திருக்கா என்று கேட்டார் பிரின்ஸ்பால். அவளோ 'எனக்குப் பிடிக்கவே இல்லே என் அம்மாவுக்குத்தான் பிடிச்சிருக்கு' என்று அப்பட்டமாகச் சொன்ன போது என் நிலைமை எப்படி இருந்திருக்கும் யோசியுங்கள்.

**பிரேமா எல். ராவ், மைசூர்-2**

எம். எல். ஏ. கொடுத்த சிபாரிசு கடிதத்தை அவசரத்தில் மறந்து விட்டுச் சென்றேன், பையனை ஸ்கூலில் சேர்க்கப் போன போது. நல்ல காலமாய்ப் போயிற்று. 'நீங்கள் மட்டும் தான் தன்னம்பிக்கையுடன் சிபாரிசு இல்லாமல் வந்திருக்கிறீர்கள்' என்று என்னை வாழ்த்தி மகனைச் சேர்த்துக் கொண்டார்கள்.

**எஸ். சுப்பிரமணியன், சென்னை-10**

நான் பட்டதாரி இல்லை என்ற காரணத்தால் என் பெண்ணை ஒரு பிரபல கான்

தொடர்ச்சி 53-ம் பக்கம்





ஊட்டம்
அளியுங்கள் உங்கள்
தோற்ற நிறத்திற்கு,
மின்னிடும் உங்கள் மேனி

# ரெயின்ட்ராப்

ஊட்டமளிக்கும் சோப்




ஆயில் ஆஃப் ஜஸ்மைன்




ஆயில் ஆஃப் ஆல்மண்ட்ஸ்

டாடா தயாரிப்பு

Creative Unit-5976 Tam.

**இலவச இணைப்பு**

# வாழ்க்கை வளம் பெற...

**வா**ழ்க்கை வளம்பெற உதவாத கல்விமுறை நம்முடையது. பிரிட்டிஷ் ஆட்சியின் போது நம்மை அடிமைப் படுத்திய மெக்காலே கல்வித் திட்டத்தி லிருந்து சுதந்திரம் பெற்று 37 ஆண்டுகள் ஆகியும் நாம் முழுவதும் விடுபடவில்லை. விளைவாக வேலையில்லாப் பட்டதாரிகளை ஏராளமாக உரு வாக்கி வருகிறோம்.

ஃபேனுக்கு அடியில் மேஜை முன்பு நாற்காலியில் அமர்ந்து சட்டைகசங் காமல் வேலை செய்ய வேண்டும் என்ற மனப்பான்மையைத்துறந்துஉடலுழைப் பையும் அறிவாற்றலையும் இணைக்கத் துணிந்தால் மிகக் குறைந்த மூலதனத் தில் கூட வளமான வாழ்க்கையை அமைத்துக் கொள்ள முடியும் என் பதை அனுபவ பூர்வமாக வெற்றி கண்டவர்கள் இங்கே சொல்கிறார்கள்.






கட்டுரைகள்:

எஸ். சந்திரமௌலி,
பிரியன்,
யெஸ்பால்,
சாருகேசி.

புகைப்படங்கள்:

சேகர்,
தாமு,
சுபா,

மேலட்டை வண்ணப்படம்:

யோகா

சம்கி வேலைகள் நடப்பதை உன்னி நோக்கி மகிழ்பவர்:

குமாரி ராணி நியாழ்



திரு அந்தோனி: "எதற்கும் ஆக்கமும் ஊக்கமும் தேவை"

பைண்டிங் வேலை செய்யும் 35 வயதான அந்தோனியுடன் ஒரு பேட்டி —

கே: மிஸ்டர் அந்தோனி நீங்கள் எத்தனை வருடங்களாக இந்தத் தொழில் செய்து வருகிறீர்கள்?

பதில்: இருபது வருடங்களாக.

கே: தொழிலை எங்கு கற்றுக் கொண்டீர்கள்?

ப: ஒரு அச்சகத்தில் நான் ஆபீஸ் பையனாக வேலை செய்து கொண்டிருந்தேன். அப்போது அங்கு பைண்டிங் வேலை செய்வதையும் சேர்த்துக் கற்றுக் கொண்டேன். திடீரென்று ஒருநாள் என்னை வேலையிலிருந்து நிறுத்தி விட்டார்கள். அப்போது பைண்டிங் தொழிலில் இறங்கினேன்.

கே: இந்த தொழிலைத் தொடங்குவதற்கு எவ்வளவு பணம் தேவை?

ப: பெரிய அளவில் பணம் தேவையில்லை. சிறிய மேசையொன், ஊசி, இவைகள் அவசியம் தேவையானவை. கட்டிங் மிஷின் இருந்தால் மிகவும் நல்லது. இல்லையேல் இன்னொரு இடத்திற்குச் சென்று பைண்ட் செய்ததை 'கட்' பண்ண வேண்டியிருக்கும். நமக்கு வரும் லாபத்தில் சற்று குறையும். கட்டிங் மெஷின் வாங்குவதற்கு வங்கியில் கடன் கொடுக்கிறார்கள்.

கே: தினமும் எவ்வளவு சம்பாதிக்கிறீர்கள்?

ப: வரும் வேலையைப் பொறுத்து இருக்கிறது. ஆனால் சராசரியாக 20 ரூபாய் தினம் சம்பாதிப்பேன்.

கே: பைண்டிங்கில் எத்தனை முறைகள் இருக்கின்றன?

ப: ஜாப் ஒர்க், புக் ஒர்க் என்று இரண்டு முறைகள் இருக்கின்றன. பில்புக், வவுச்சர் ரசீது, டெலிவரி சலான் போன்றவற்றை பைண்ட் செய்வது ஜாப் ஒர்க்கில் சேர்க்கலாம். பாடப் புத்தகங்கள், பத்திரிகைகள், கதைப் புத்தகங்கள் போன்றவற்றை பைண்ட் செய்வதை 'புக் ஒர்க்' என்கிறார்கள். இந்த புக் ஒர்க்கிலேயே மூன்று குத்து தையல், ஆறு குத்து தையல் போன்றவை இருக்கின்றன. நான் பெரும்பாலும் ஜாப்ஒர்க் தான் செய்து வருகிறேன். எப்போதாவது புக் ஒர்க் வரும்.

கே: எப்படி ஆர்டர் பிடிக்கிறீர்கள்?

ப: பல சிறிய அச்சகங்களோடு தொடர்பு வைத்துள்ளேன். அவர்களைத் தினமும் சந்திப்பேன். வேலையிருந்தால் தருவார்கள். சில அரசு அலுவலகங்களில் லெட்ஜர் போன்றவற்றை பைண்ட் செய்யக் கொடுப்பார்கள்.

கே: இந்த வேலையைக் கற்றுக் கொள்ள எவ்வளவு நாட்கள் ஆகும்?

ப: ஒரு வாரத்தில் கற்றுக் கொண்டுவிடலாம். எதற்கும் ஆக்கமும், ஊக்கமும் தேவை. முதலில் பசை தடவுவதைக் கற்றுக் தருவார்கள். பிறகு தைப்பது காலிகோ, மார்பில் ஆகியவைகளை ஒட்டுவது போன்றவைகளைக் கற்றுக் கொள்ள வேண்டும்.

"நன்றி மிஸ்டர் அந்தோனி"

# சுண்டல்

இருபது வருடங்களுக்கு முன்னர் கன்னியாகுமரி மாவட்டம் களியக்காவிளை கிராமத்திலிருந்து சென்னைக்கு வந்த பஷீருக்குப் பலவிதமான வேலைகள் தெரிந்திருந்தும், சுண்டல், பஜ்ஜி தொழில் செய்வதில் இறங்கினார். தி. நகர் மங்கேஷ் தெரு முனையில் கடந்த பதினான்கு வருடங்களாக நான்கு சக்கர வண்டியில் சுண்டல்–பஜ்ஜி விற்பனையைச் செய்து வரும் பஷீரிடம் இந்தத் தொழிலைப் பற்றிக் கேட்டதற்குச் சற்று விளக்கமாகவே சொன்னார்.

''நான்கு சக்கர வண்டி, இரும்புகடாய், சுண்டல் பேஸின், தண்ணீர்க் குடம், இரண்டு மூன்று சிறிய பாத்திரங்கள் போன்றவைகள் இந்தத் தொழிலுக்குத் தேவையானவை. இப்போதைய நிலையில் இவை களை வாங்க 2000 ரூபாய் தேவைப்படும். இது ஒரு பகுதி நேர வேலையல்ல. காலையில் எழுந்தவுடன் கடலைப் பருப்பு ஊற வைக்க வேண்டும். பிறகு கடைக்குச் சென்று வெங்காயம், உருளைக்கிழங்கு, காரட், கொத்து மல்லி ஆகியவைகளை வாங்கிவர வேண்டும். ஊற வைத்த கடலையை வடைக்குத் தகுந்த மாதிரி அரைத்துக் கொள்ள வேண்டும். பிறகு பட்டாணி சுண்டலைச் செய்து கொள்ள வேண்டும். போண்டாவிற்கு உருளைக்கிழங்கு மசாலா செய்ய வேண்டும். இதையெல்லாம் செய்து முடிப்பதற்கு ஒரு மணி ஆகிவிடும். பிறகு மூன்று மணி அளவில் வண்டியை எடுத்துச் சென்று வியாபாரத்தைத் துவக்கினால் முடிவதற்கு இரவு 11 மணி கூட ஆகலாம். அதுவரை நின்று கொண்டே வியாபாரம் செய்ய வேண்டும். சாதாரணமாக மழைக்காலத்தில் பிஸினஸ் நன்றாக இருக்காது. ஆனால் தூறிக்கொண்டே இருந்தாலோ, அல்லது மேகமூட்டமாகவோ சற்று குளிராகவோ இருந்தாலோ, சுடச்சுட பஜ்ஜி, வடை, சுண்டல் வியாபாரம் நன்றாக நடக்கும். ஆரம்பத்தில் தினமும் பதினைந்து ரூபாய்க்கு தான் விற்கும். இப்போது சுமார் 300 ரூபாய்க்கு விற்பனை ஆகிறது. இதில் குறைந்தபட்சம் எனக்கு 30 ரூபாய் லாபம் கிடைக்கும். கடை வைத்தால் மட்டும் போதாது. நல்ல ஏரியாவாகப் பார்த்து வண்டியை நிறுத்த வேண்டும். தினமும் போலீஸ்காரர்களுக்குக் கொஞ்சம் தள்ள வேண்டியிருக்கும். இது தவிர்க்கமுடியாதது. மற்றபடி இந்தத் தொழிலில் வேறெந்தப் பிரச்னையும் கிடையாது. முன்பு இருந்ததற்கு இப்போது விலைவாசி எக்கச்சக்கமாக ஏறி இருக்கிறது. அந்த அளவுக்கு நாங்கள் விற்பனை செய்யும் பண்டங்களின் விலையை ஏற்றவில்லை. எனவே நிறைய விற்பனையானால் தான் கொஞ்சமாவது லாபத்தைப் பார்க்க முடியும்.

# பஜ்ஜி

✖ சுடச்சுட கேட்பவர்களுக்கு....



# டெய்லரிங்

''அவசரம்... காலம்பற ஊருக்குப் போயாகணும்... அம்மா உடனே இதைத் தைச்சு வாங்கிண்டு வரச் சொன்னா...'' இப்படி வந்து நிற்கிறவர்கள் நிறையப்பேர்.

இவர்களுக்கெல்லாம் தைத்துக் கொடுப்பதே ஒரு வேலை, பொழுதுபோக்கு என்பதை விட ஒரு யோகமாகவும் பயின்று வருகிறவர் திருமதி ஞானம்பாள்.

பலருக்கு இவருடைய பெயரே தெரியாது... 'டைலர் மாமி' என்றால் தான் தெரியும்.

''இருநூற்று அறுபத்தைஞ்சு ரூபாய்க்கு இந்த மிஷினை வாங்கினேன். பதினெட்டு வருஷம் ஆச்சு. தவணை முறையில் வாங்கியது. நன்றாகத் தைக்கத் தெரியுமா என்று பார்த்து அப்புறம் தான் மிஷினைக்கொடுத்தார்கள்...'' என்று தையல் மிஷின் வாங்கிய நாட்களை நினைவுகூர்கிறார்.

சாதாரணமாகப் பெண்களுக்கு வேண்டிய ஜாக்கெட், ப்ராக், பாவாடை போன்றவற்றை மட்டும் எப்படித் தைப்பது என்று மாம்பலத்தில் உள்ள ஒரு பயிற்சி நிலையத்தில் கையில் குழந்தையுடன் போய்க்கற்றுக் கொண்டது மூன்றே மாதங்கள்தான்.

அதற்கப்புறம் எட்டு வருஷம் கழித்து மறுபடியும் போய்ச் சிறுவர்களுக்குரிய யூனிஃபார்ம், டிராயர், சட்டை, போன்றவற்றைத் தைக்கக் கற்றுக் கொண்டார். இவைதான் இவருடைய தையல் பயிற்சி, மற்றபடி அனுபவப் பயிற்சிதான்.

இனமும் காலை ஐந்தரைக்கு எழுந்தால், இரவு பதினொரு மணி வரை ஓய்வில்லை. ''போதுமே, உடம்பைக் கெடுத்துக்காதே'' என்று கண்டித்தாலும், கணவர் திரு. ஜானகிராமன், இவருடைய தையல் ஆர்வத்துக்கு ஊக்கமும் தருகிறார்.

''பெண்களுக்குப் பெண்கள் என்று தைத்துத் தருகிற போது அளவு மற்ற விஷயங்களில் பிரச்சினை இல்லை. சகஜமாகப் பேச முடிகிறது. இதனாலேயே பல குடும்பப் பெண்கள் என்னிடம் வருகிறார்கள்'' என்கிறார் இவர்.

புது ஜாக்கெட் அணிந்தால் பெண்கள், ''எங்கே தைத்தது? யார் தைத்தது?'' என்றெல்லாம் குடைந்தெடுத்து விடுவார்கள். இதன் காரணமாக, சென்னையில் அக்கம்பக்கத்து வீடுகளுக்குத் தைத்துத்தரத் தொடங்கி, அவர்களுக்கு வேண்டியவர்கள் உறவுக்காரர்கள் என்று வெளியூர்களிலும் வாடிக்கையாளர்கள் சேர்ந்து விட்டார்கள்.



○ இருநூற்று அறுபத்தஞ்சு ரூபாய் மிஷினுடன் திருமதி மங்களம்

பட்டன் கட்டுவது, ஹெம் பண்ணுவது போன்ற சிறு வேலைகளை மட்டும் மற்றவர்களிடம் ஒப்படைக்கிறார். இது ஓர் உப தொழில். ஒரு ஜாக்கெட்டுக்கு ஐம்பது காசு வீதம் இந்த வேலைக்குப் பணமும் தருகிறாராம்.

ஒரு ஜாக்கெட் வெட்டக் கால்மணி நேரம், தையலுக்கு முக்கால் மணி நேரம் என்று ஆகிவிடும்.

தையல் வேலையில் 'பங்க்சுவாலிடி தான்' முக்கியம். இந்த நேரத்திற்குத் தருகிறேன் என்று ஒப்புக் கொண்டால், அதை மீறுவதில்லை. அதனால், வாடிக்கையாளர்களின் நம்பிக்கை நிறைய இருக்கிறது.

காலால் மிதிக்கிற ஸ்ட்ரெயின் இல்லாதிருப்பதற்காகச் சின்னதாக மோட்டார் ஒன்று வாங்கிப் பொருத்தலாமா என்று எண்ணம். இதற்கு முந்நூறு ரூபாய் செலவாகலாமாம்.

இவரிடம் உள்ள வித்தியாசமான பழக்கம் ஒன்று. ''யாராவது வசதிக் குறைவான வாடிக்கையாளர் வீட்டுக் கல்யாணம், விழா என்றால் என்னுடைய உதவியாக, இலவசமாகச் சில உருப்படிகளைத் தைத்துத் தருகிறேன்'' என்கிறார்.

செயின்ட் மேரீஸ் மெழுகுவர்த்தி நிறுவனத்தின் உரிமையாளர் திரு. பிரான்ஸிஸ். இவர் தம்பி திரு. டேவிட் உதவியாகத் தொழிலைக் கவனித்துக் கொள்ளுகிறார். பதினைந்து வருடங்களாக இந்தத் தொழிலில் ஈடுபட்டு முன்னேறியவர்கள் இவர்கள்.

மெழுகுவர்த்தி தயாரிப்புத் தொழில் மற்ற குடிசைத் தொழில் மாதிரி அவ்வளவு எளிதில் துவங்கி விட முடியாதுதான். முதலில் சிறுதொழில் அமைப்பாகப் பதிவு செய்து கொள்ள வேண்டும். இது தொழில் – வணிகத் துறையின் கீழ் வருகிறது.

இந்தத் தொழிலுக்கு மூலப் பொருளான பாரஃபின் மெழுகு 77 கிலோ கொண்ட மூட்டையாக வருகிறது. இதை, கோட்டா முறையில் தான் SIDCO–விலிருந்து வாங்க வேண்டும். (வெளியே சற்று அதிக விலைக்குக் கிடைக்கும்.) ஒரு கிலோ பாரஃபின் மெழுகு பத்து ரூபாய் ஆகிறது. சரி, ஒரு கிலோவுக்கு எத்தனை மெழுகு வர்த்திகள் செய்யலாம்? சுமார் ஆறு அங்குலம் உயரத்துக்கு, இரண்டு டஜன் மெழுகுவர்த்திகள் வரும். ஒன்றின் விற்பனை விலை 75 பைசா ஆகும். நூல்திரி, பாக்கிங் காகிதம், லேபில் எல்லாம் செலவு உண்டு. இது தவிர டைகளில் அலுமினிய பேஸின். பாரஃபின் மெழுகை ஊற்றி உருக்க, மண்ணெண்ணெய் தேவை.

உருகு நிலை 56 டிகிரி சென்டிகிரேட். இதற்கு மேல் போனால் எல்லா மெழுகும் தீப்பிடித்துக் கொள்ளும்.

உருகிய மெழுகை அப்படியே 'டை'யில் ஊற்ற வேண்டும். 'டை'க்கு இருபுறமும் பொருத்தியுள்ள குழாய்களில், ஒன்றில் தண்ணீர் ஊற்ற வேண்டும். அது மெழுகு குளிர்ந்து கெட்டிப்பட உதவும். பிறகு மற்றொரு குழாய் வழியே அந்த நீரை வெளியேற்றி விடலாம். பத்து நிமிடங்களில் மெழுகுவர்த்திகள் தயாராகிவிடும். பிறகு இவற்றை 'டை'யின் துளைகளிலிருந்து தனியே எடுத்து விடலாம்.

இதற்கு முகிபொலிடி அல்லது கார்ப்பரேஷன் ஃபைசெக்ஸ் வாங்க வேண்டும். இதற்கு எட்டரை ரூபாய் ஆகும்.

மிகக் குறைந்தபட்சமாக நூறு, இருநூறு தயார் செய்து விற்பனை செய்தால் அதில் லாபம் எதிர்பார்க்க முடியாது என்கிறார் டேவிட்.

கார்த்திகை தீபத்தின் போது கலர் மெழுகுவர்த்தி செய்து விற்றால் நல்ல லாபம் கிடைக்கும்.

※ மெழுகுவர்த்தி தயாரிக்கும் டேவிட்

# மெழுகுவர்த்தி செய்தல்



லிஸ் முனையை அடுத்து, ராமகிருஷ்ண மடம் சாலைத் துவக்கத்திலேயே தம்முடைய கடையை வைத்திருக்கிறார் தியோமணி திவாரி. திவாரி உத்தரப்பிரதேசத்தைச் சேர்ந்தவர்; குறிப்பாக பனாரஸ்காரர். தம்முடைய விஸிட்டிங்கார்டில் 'ஸ்பெஷலிஸ்ட் இன் பனாரஸி அண்ட் கல்கத்தா பான்' என்று அச்சிட்டுக் கொள்ளக்கூடிய அளவுக்கு வந்திருக்கிறார். கல்யாண பார்ட்டிகளுக்கு விசேஷமாக பீடா தயார்த்துக் கொடுப்பதில் சமர்த்தர். 1500 முதல் 2000 பீடா செய்து கொடுக்கலாம் கல்யாணங்களுக்கு. ஒரு பீடா 80 காசு ஆகிறது. சில சமயங்களில் ஒரு ரூபாய் கூட சார்ஜ் செய்வாராம்.

இவர் தெற்கே கிடைக்கும் வெற்றிலையை உபயோகிப்பதில்லை. கல்கத்தா வெற்றிலை 100க்கு 35 ரூபாய்; பனாரஸ் வெற்றிலை 20 ரூபாய் இரண்டு வெற்றிலைகளுடன் இவர் சேர்க்கும் தனிப் பொருட்கள்:

1. பான் பராக், பாபா, அல்லது ரத்னு என்ற பலவகை ரெடிமேட் வாசனை பாக்குத்தூள்.
2. குல்கந்து.
3. ஜம் ஜம்.
4. ஸ்வீட் பவுடர்,
5. சட்னி (பாட்டில்களில் இதற்கென்றே தயாராகக் கிடைக்கிறது.)
6. ஏலக்காய்,
7. மென்தால்,
8. லவங்கம்.

இவை எல்லாம் ஒரு பீடாவுக்குத் தேவையான அளவுக்கு வைத்தால்போதும். இவை எல்லாவற்றிலும் சிறிது சிறிது வைத்தாலே சரியான சுவை வந்துவிடும். கைப்பழக்கத்தில் பிறகு அளவு பழகிப்போய்விடும்.

கல்யாண விருந்துகளுக்கு 1500 முதல் 2000 பீடாக்கள் தேவைப்படுகின்றன. இதைச் செய்து கொடுப்பதில் நல்ல லாபம் இருக்கிறது. தனிப்பட்ட முறையில் விற்றாலே 100 பீடாவுக்கு 20 ரூபாய்க்கு மேல் கிடைக்கும் என்கிறார் திவாரி.

✕ பனாரஸி பான்வாலா

# பீடா செய்தல்



# சர்பத் தயாரிப்பு



✕ பொன்விழாவை நெருங்கிக் கொண்டிருக்கும் சர்பத் நாராயணன்

**பொ**ன் விழாவை நெருங்கிக் கொண்டிருக்கும் தனி நபர் முயற்சி என்று சுருக்கமாகச் சொல்லிவிடலாம் திரு. கே. நாராயணன் அவர்களின் வியாபாரத்தை.

கேரளாவிலுள்ள தலச்சேரியைச் சேர்ந்தவர் திரு. நாராயணன். தம் பெயரிலேயே 'லேபில்' போட்டு சர்பத்துக்கள் தயாரித்து விற்பனை செய்கிறார், இட்டத்தட்ட 42 வருடங்களாக.

சாதாரணமாக மக்கள் விரும்பி வாங்கும் சர்பத் வகைகள்:

1. அன்னாசி,
2. ஆரஞ்சு,
3. நன்னாரி,
4. இராட்சை,
5. ரோஸ்,

"சரி, இத்தனை பழ வகைகளையும் வாங்கி வைத்துக் கொள்ள வேண்டுமா என்ன? வேண்டவே வேண்டாம். அத்தனையும் எஸென்ஸ் வடிவத்தில் கடைகளில் கிடைக்கிறது.

காலி பாட்டில்கள் 750 ml. கொள்ளளவு கொண்டவை 75 பைசாவுக்குக் கிடைக்கின்றன.

750 ml. உள்ள 12 முதல் 16 பாட்டில் வரை தயாரிப்பதற்கான வழிமுறை இதோ:

ஒரு அவுன்ஸ் திராட்சை எஸென்ஸ், அல்லது ஒரு அவுன்ஸ் அன்னாசி எஸென்ஸ், ரோஸ் அல்லது நன்னாரியானால் முக்கால் அவுன்ஸ் போதும்.

பதினொரு கிலோ சர்க்கரையை, நீரை விட்டு அடுப்பில் வைத்து, கொதிக்க வைத்துக் காய வேண்டும். சர்க்கரை 75 சதம் என்றால் தண்ணீர் 25 சதம் இருக்க வேண்டும்.

நன்றாகக் கொதித்த பிறகு, அது திரவ வடிவில் இருக்கும்போது, ஆறிய பின் அதில் உள்ள அழுக்கு எல்லாவற்றையும் வடிகட்டி எடுத்து விட வேண்டும். இரண்டு மூன்று முறை செய்தால் தான் அழுக்கு முழுவதும் போகும். பிறகு சிட்ரிக் ஆசிட் 25 முதல் 30 கிராம் வரை சேர்க்க வேண்டும். (இதை, நீர்கொதித்துக் கொண்டிருக்கும்போதே கூடச் சேர்ப்பது உண்டு.)

அடுத்தபடியாக, அந்தந்த எஸென்ஸுக்குத் தேவையான பவுடரைச் சேர்க்க வேண்டும். ஆரஞ்சு என்றால் ஆரஞ்சுப் பவுடர்; அன்னாசிக்குப் பவுடர் இல்லை. இதற்கு லெமன், ஆரஞ்சுப் பவுடர் இரண்டும் சேர்க்கவேண்டும். இராட்சைக்கு 'கோலா' பவுடர் சேர்க்க வேண்டும்.

பாட்டிலின் விலையைச் சேர்க்காமல், ஒரு 750 ml. பாட்டில் சர்பத்துக்கு நாலு ரூபாய் விலை வைத்தாலே லாபகரமாகச் செயல்பட முடியும்.

# சைக்கிள் ரிப்பேர் செய்தல்

'சாமானியனின் வாகனம்' என்று செல்லமாக அழைக்கப்படுவது சைக்கிள். சைகிள்களில் எத்தனையோ விதங்கள் மாடல்கள் ஆனால்–

அத்தனைக்கும் பொதுவான சமாச்சாரம் ஒன்று உண்டு. அது?
ரிப்பேர் ஆவது.

சைக்கிள் கடையில் இரண்டு வகை உண்டு. ஒன்று, சைக்கிள் ரிப்பேர்களை மட்டும் கவனிப்பது. இரண்டாவது, இத னுடன் சேர்த்து வாடகைக்கு சைக்கிள் விடுவது.

முதலாவது அவ்வளவு பண முதலீடு அவசியமில்லாதது.

சென்னை நகரின், பிளாட்பாரங்களில், மரத்தடியில் இத்தகைய ஏராளமான கடைகள் இருக்கின்றன. இவர்களுக்கெல் லாம் தினமும் ஓரளவு வருமானம் வந்து கொண்டிருக்கிறது.

'ஒன்றுமில்லை, தினமும் இருபது, இருபத் தைந்து பேர் சைக்கிளுக்குக் காற்றடிக்க வருவார்கள். இப்போது, மற்ற எல்லாம் போலவே, காற்றடிக்கக் கூட, கட்டணம் அதிகமாகி விட்டது. இரண்டு சக்கரங் களுக்குக் காற்றடிக்க இருபத்தைந்துபைசா வரை வாங்குகிறார்கள். இதுவே ஆறு ஏழு ரூபாய் வரை கிடைத்து விடும். இதுதவிர ரிப்பேர் பார்த்துக் கிடைக்கிற பணம்.

இரண்டாவது வகையான வாடகை சைக்கிள் கடை வைக்க, ஆரம்பத்தில் நான்கு அல்லது ஐந்து சைக்கிள்களாவது வேண்டும். இதற்கு இரண்டாயிரத்து ஐநூறு, மூவாயிரம் ரூபாய் வரை முதலீடு தேவைப்படும். பாங்க் லோன் கிடைக்கும்.

''ஒரு சைக்கிள் கடையில் இரண்டு மூன்று வாரம் வேலை செய்தால் போதும். வேலை கற்றுக் கொண்டு சொந்தமாய் ஒரு கடை ஆரம்பித்து விடலாம்'' என்று தம் அனுபவத்தைச் சொல்பவர் ஜாபர்கான் பேட்டையில் சைக்கிள் கடை வைத்திருக் கும் முத்துசாமி.

''என்னுடைய பிளஸ் பாயிண்ட் என் கடையைச் சுற்றியுள்ள பகுதிகளில் வசிப் பவர்களுடன் எனக்கு இருக்கிற நல்லவித மான நட்புறவு. இந்தப் பேட்டைக்காரர்கள் என்ன ஆனாலும் தம் சைக்கிள் ரிப்பேர் களுக்கு என்னிடம் தான் வருவார்கள். இன்னொரு முக்கியமான விஷயம், வருகிற வர்களைக் காத்திருக்க வைக்காமல், உடனுக் குடன் கவனித்து அனுப்புவது தான். வருகிறவர்களுக்கு எத்தனையோ அவசரமான வேலைகள் இருக்கும். சமயத்தில் அவர்கள் சைக்கிள் தகராறு பண்ணியிருக்கும். உட னடியாய்க் கவனித்துக் கொடுத்து விட்டால் வருமானம் கிடைப்பது மட்டுமில்லாமல் நல்ல உறவையும் பெறலாம்.''

பஸ் சார்ஜ் அதிகரித்துக் கொண்டே போகிற இந்த நாளில் வாடகைக்கு சைக்கிள் எடுத்துக் கொண்டு போய் வருவது ரொம்ப சிக்கனம். எனவே வியாபாரம் நன்றாகவே இருக்கும்.

ஒரு விஷயத்தில் மட்டும் எச்சரிக்கை தேவை. வாடகை சைக்கிள் எடுத்துப் போக வரும் ஆள் இல்லாடியாக இருந்தால் சைக்கிள் அரோகரா ஆகிவிடும். இதற்கு ஆளை 'எடை' போடுகிற திறன் தேவை.

✖ சைக்கிள் ரிப்பேர் கடைக்காரர் டில்லி பர்கட் ரோடில் ரொம்ப பாபுலர்



# சோப்பு தயாரிப்பு

''சோப்புக்காரர் வந்தாச்சா?'' என்று வெள்ளி, புதன் என்று குறிப்பிட்ட சிலநாட்களில் சில அலுவலகங்களில் குரல்கள் கேட்கும். மாதச் சம்பளக்காரர்களை மட்டும் நம்பி எத்தனையோ சிறு தொழில்கள். கலைச் செல்வன் மூன்று ஆண்டுகளுக்கு முன்னால் திருநெல்வேலியிலிருந்து வெற்று ஆளாகச் சென்னைக்கு வந்தார். எஸ். எஸ். எல். சி. வரை படித்த இவரை ''எங்காவது போய்ப் பிழைத்துக் கொள்'' என்று வீட்டில் அனுப்பி விட்டார்கள்.

சோப் கம்பெனி ஒன்றில் கமிஷன் அடிப்படையில் சோப்புக் கட்டிகளை விற்பனை செய்யத் தொடங்கினார். சராசரியாகத் தினமும் முப்பது முதல் ஐம்பது ரூபாய் வரை கிடைக்கும். மாத ஆரம்பத்தில் சிலநாட்களில் நூறு ரூபாய் கூடக் கமிஷன் கிடைத்தது... இந்த வருமானத்திலிருந்து சிறுகச் சிறுக மூவாயிரம் ரூபாய் வரை இவரால் சேமிக்கவும் முடிந்தது.

சோப் வியாபாரம் செய்த போதே என்னென்ன பொருட்கள், எங்கெங்கு கிடைக்கின்றன, எப்படிச் செய்கிறார்கள் எல்லாவற்றையும் கவனித்தது இவருடைய தொழில் ஆர்வத்துக்குக் கைகொடுத்தது. கமிஷன் விற்பனை செய்த போது கணிசமான வாடிக்கையாளர்களும் கிடைத்துவிட்டார்கள்.

சென்ற மே மாதம் சொந்தமாகவே சோப் தயாரிக்கத் தொடங்கி விட்டார். ஆயிரத்து ஐநூறு ரூபாய் விலையில் ஒரு கை மிஷினைப் பழைய விலைக்கு வாங்கிக் கொண்டார். தளவாடக் கருவிகள் வாங்க ஐநூறு ரூபாய் செலவாயிற்று. மூலப் பொருள்களுக்கு ஆயிரம் ரூபாய் ஒதுக்கினார். இவர் தயாரிப்பது டிடர்ஜெண்ட் சலவைக் கட்டிகள் மட்டும்தான். தினமும் அறுபது டஜன் கட்டிகளைச் செய்ய முடிகிறது. இன்னும் தீவிரமாக முயன்றால் நூறு டஜன் செய்ய முடியுமாம்.

ராஜஸ்தானிலிருந்தும் ஆந்திராவிலிருந்தும், உவர் மண் மாதிரி ஒருவகை மாவு வருகிறது. மூட்டை நாற்பத்து மூன்று ரூபாயாம். நுரைப்பதற்காக ஸ்லரி என்று ஒரு எண்ணெய். காஸ்டிக் சோடா. கொழுப்புப் பொருளாக 'ஸில்லிக்கட்' என்று ஒரு பொருள் — பார்த்தால் நெய் மாதிரி இருக்கும். இவைதவிர எஸ். டி. பி. பி. என்று ஒரு ரசாயனப் பொருள். எல்லாமே கடைகளில் கிடைக்கின்றன.

ஈசல்லினில் கட்டிய தகரப்பெட்டியில் கட்டிகளை அடுக்கிக் கொண்டு இவரே ஒவ்வொரு அலுவலகமாகப் போய் விற்பனை செய்கிறார். தயாரிப்பு உதவிக்காக மூன்று பேர் சம்பளத்துக்கு இவரிடம் வேலை செய்கிறார்கள். சோப் தயாரிப்பதை விட விற்பனை செய்வதில் தான் திறமை இருக்கிறது என்கிறார் இவர்.

கலவை என்று சொல்கிறார். இந்தக் கைமிஷினில் ஒரு கலவை போட்டால் ஒன்றரை மணிநேரம் ஆகுமாம். ஒரு கலவைக்கு 144 கட்டிகள் கிடைக்கும். ''கைமிஷினாக உள்ளவரை இது குடிசைத் தொழில்தான். வரித் தொந்தரவுகள் எதுவும் கிடையாது'' என்கிறார் இவர்.

''சென்னையில் இப்படி ஆயிரம் பேராவது இந்தத் தொழிலில் இருக்கிறோம். அவ்வளவு பேருக்கும் வியாபாரம் ஆகிறது'' என்கிற கலைச்செல்வனுக்குள்ள ஆசை 'நம்மால் ஒரு பத்துப்பேர் வேலை கற்றுப் பிழைக்க வேண்டும்' என்பதுதான்.



''நம்மால் பத்துபேர் பிழைக்க வேண்டும்''

# கிரைண்டர் வைக்கலாம்... சம்பாதிக்கலாம்

'சுயவேலை வாய்ப்பின் கீழ் உள்ள பெரிய லிஸ்ட்டில் நிச்சயம் இடம்பெறுகிற ஒன்று, 'வெட் கிரைண்டர்' வைத்து இட்லி மாவு போன்றவை அரைத்துக் கொடுத்துப் பணம் சம்பாதிப்பது.

கஷ்டமான காரியம் இல்லை. ஆண்களானாலும் பெண்களானாலும் தாராளமாய்ச் செய்யலாம்; சம்பாதிக்கலாம்.

வீட்டிலேயே 'வெட் கிரைண்டர்' வைத்துக் கொண்டு மாவு அரைத்துக் கொடுத்துக் கொண்டிருக்கும் திருமதி. துரைசாமி தம் அனுபவத்திலிருந்து பல விஷயங்களைச் சொன்னார்:

– இன்றைய நிலவரப்படி, வெட் கிரைண்டர்களில் பல அளவுகள் (ஒரு லிட்டர், 2 லிட்டர், 3 லிட்டர், 5 லிட்டர் என) உள்ளன. பொதுவாக மாவு அரைவை நிலையம் வைக்கத் தனி இடம் தேவையில்லை; வீட்டிலேயே ஒரு பகுதியில் நடத்திவிட முடியும். வசதி இருந்தால் ஒரு தனி இடம் பார்த்துக் கொள்ளலாம்.

முதலில் ஒரு வெட் கிரைண்டருடன் ஆரம்பிக்கலாம். அதுவே 3 லிட், 2 லிட்டர் அளவுள்ள இரட்டை இணைந்ததாய் இருந்தால் ரொம்ப சவுகரியம். ஒரே சமயத்தில் அரிசி உளுந்து இரண்டையும் அரைத்துத் தந்து விடலாம். பிஸினஸ் அதிகமாக அதிகமாக தேவைக்கேற்ப கிரைண்டர்களின் எண்ணிக்கையை அதிகரித்துக் கொள்ளலாம். தேவையான முதலீடு சுமார் மூவாயிரம்.

வீட்டில் கிரைண்டர் வைத்துக்கொண்டால் கூட, இது வியாபார ரீதியான உபயோகம்' என்பதால் தனி மின்சார மீட்டர் வைக்கப்பட வேண்டும். கார்ப்பரேஷன் முனிசிபாலிடி போன்ற அதாரிட்டிகளிடமிருந்து பர்மிஷன் வாங்க வேண்டியதும் அவசியம்.

சராசரியாக ஒரு நாளைக்கு நான்கு மணி நேரம் ஓடினால் சுமாராக மின் கட்டணம் பதினைந்து ரூபாய் ஆகலாம்.

வெட் கிரைண்டரின் கல் உரல் பகுதியைக் கொத்தி விட யாராவது ஒருவரை ஏற்பாடு செய்து விட்டால் அவர் வந்து இரண்டு மாதங்களுக்கு ஒரு முறை கொத்தி விட்டு விட்டுப் போய் விடுவார். ஷாக் அடித்துக் கொள்ளாமல் ஜாக்கிரதையாகக் கையாள வேண்டும் என்பது தவிர பிரச்னை ஏதும் கிடையாது.

இப்போது பொதுவாக ஒரு கிலோ மாவரைக்க எழுபத்தைந்து பைசா போல வாங்குகிறார்கள்.

கல்யாண சீசன்களில் பிஸினஸ் சவுண்டாக இருக்கும். கவலைப்படவே வேண்டாம்.

✖ இரட்டை கிரைண்டரில் அரிசியும் உளுந்தும் ஒரே சமயத்தில் அரைக்கலாம்



எல்லா வீடுகளிலும் — அலுவலகங்களிலும் கூட — தினமும் உபயோகிக்கப்படுகின்ற ஒன்று ஊதுவத்தி.

சென்னை பாண்டிபஜாரில், வெற்றிலை பாக்கு இத்யாதிகள் விற்பனை செய்கிறவர் (என் பேரெல்லாம், போட்டோவெல்லாம் எதுக்குங்க?) ஊதுவத்தி தயாரிப்பு பற்றிய விவரங்களை விளக்கமாய்ச் சொன்னார்.

''இது அதிக அளவில் முதலீடு தேவைப்படாத ஒரு விஷயம் என்றுதான் சொல்ல வேண்டும். ஊதுவத்தி தயாரிப்பதற்குத் தேவையான பொருட்களின் லிஸ்ட்.

(அ) மூங்கில் குச்சிகள்,
(ஆ) பிசுக்கு என்ற மெழுகு போன்ற பொருள்.
(இ) டஸ்ட் என்ற பொடி.
(ஈ) கரித்தூள்.
(உ) வாசனை திரவியம் (தேவையான மணங்களில்.)

என்ன இதெல்லாம் வாங்கியாகி விட்டதா?

எப்படி ஊதுவத்தி தயாரிப்பது என்று பார்க்கலாமா?

முதலில் இந்தப் பிசுக்கு, டஸ்ட், கரித்தூள் மூன்றையும் ஒன்றாய்க் கலந்து (கலப்பு விகிதம் வியாபார ரகசியமாம். இது ஆளுக்கு ஆள் வேறுபடக் கூடியதாம்.) நன்றாய்ப் பிசைந்து வைத்துக் கொள்ள வேண்டும்.

மூங்கில் பட்டைகளை, ஊதுவத்தி செய்வதற்கேற்ப, எட்டு அங்குலம், பத்து



✕ ரவிஸ் அகர்பத்தி தயாரிக்கப்படுகிறது

# ஊதுவத்தி செய்வது எப்படி?

அங்குலம், பதினாறு அங்குலம் என பல் வேறு அளவுகளிலும், மெல்லிய குச்சிகளாய்த் துண்டுகள் செய்து கொள்ளவேண்டும்.

குச்சிகளில், தயாரித்து வைத்திருக்கும், மெழுகு போன்ற கலவையை உருட்டி எடுக்க வேண்டும். இதற்குக் கொஞ்சம் பயிற்சி வேண்டும். நூறு, இருநூறு குச்சிகள் உருட்டினால் போதும் ஊதுவத்தி உருட்டலில் பெரிய ஆள் ஆகிவிடலாம்.

இது கொஞ்சம் ஈரமாக இருக்கும். எனவே இவற்றை எல்லாம் காய வைக்க வேண்டும். நன்றாய்க் காய்ந்ததும் வாசனை யூட்ட வேண்டும்.

வாசனையூட்டுவது எப்படி?

கடைகளில் மல்லிகை, தாழம்பூ, மகிழம்பூ, செண்பகப்பூ, கஸ்தூரி என்று பல்வேறு விதமான மணம் பரப்பும் வாசனைப் பொருட்கள்கிடைக்கும். இதைத்திரவமாக்கிக் கொண்டு உலர்ந்த ஊதுவத்திக் குச்சிகளை அதில் மூக்கி எடுத்து விட வேண்டியதுதான். இதுவும் சில நிமிடங்களில் உலர்ந்து விடும். பிராப்ளமே இல்லை.

இப்போது மணம் வீசும் ஊதுவத்திகள் ரெடி.

அடுத்து என்ன செய்ய வேண்டியது?

டஜன் டஜனாகவோ இல்லையெனில் நூறு இருநூறு என்று எண்ணிக்கையிலோ தனித்தனியே மெல்லிய கண்ணாடித்தாளில் சுருட்டி மேலே நூலால் சுட்டிவைத்து விட வேண்டியதுதான்.

காகித உறைகள் அல்லது அட்டையாலான குழாய்களில் ஊதுவத்திக் கட்டுகள் ஒவ்வொன்றையும் போட்டு மூடி விற்பனைக்கு அனுப்ப வேண்டியதுதான்.

காகித உறைகளின் மேல் உங்கள் 'பிராண்ட்'டின் பெயரை அச்சிட்டுக் கொள்ளலாம். குழாய்களின் மேல் பெயர் அச்சிட்ட தாள்களை ஒட்டிவிடலாம்.

சுமார் நூறு ரூபாய் முதல் நூற்று ஐம்பது ரூபாய் வரை கட்டுரையின் ஆரம்பத்தில் தரப்பட்டிருக்கும் லிஸ்ட்படிப் பொருட்கள் பாக்கிங்கிற்கான உறைகள் டியூப்கள் ஆகியவற்றுக்காகச் செலவிட்டால் இவற்றைக் கொண்டு சுமார் 2500 முதல் 3000 ஊதுவத்திக் குச்சிகள்வரை தயாரிக்கலாம். கணிசமான வருமானம் கிடைக்கும்.

''இன்னொரு விஷயம். ஊதுவத்தி தயாரிப்பில் பெண்களும் ஈடுபடலாம். வீட்டில் இருந்தபடியே வத்திகள் செய்யலாம். விற்பனைக்கு மட்டும் ஏதாவது ஏற்பாடு செய்ய வேண்டும்.''

குடும்பம் முழுவதும் சேர்ந்து ஒன்றாய் ஈடுபட இந்தத் தொழில் மிகவும் ஏற்றது.

உங்கள் வாழ்க்கை வளமாயும் மற்றவர்கள் வாழ்க்கை மணமாயும் அமையும்.

# ஊறுகாய் தயாரிப்பு



* சுத்தம் உடம்போடு இருக்க வேண்டும்

"ஊறுகாயினைத் தயாரிக்க முதலில் சுத்தம் உடம்போடு பிறக்க வேண்டும்" என்கிறார் திரு. பாலசுந்தரம்.

இதில் அதிக லாபம் எதிர்பார்க்க முடியாவிட்டாலும், சாதாரண வாழ்க்கைக்குத் தேவையான அளவுக்கு வியாபாரம் செய்ய முடியுமாம்.

100 மாங்காய்களைக் கொண்டு 50 பாட்டில்கள் ஊறுகாய் தயாரிக்க முடியும். இதோ, 25 பாட்டில்கள் ஊறுகாய்க்கான தயாரிப்புக் கணக்குத் தருகிறார்:

மாங்காய் — 50,
மிளகாய்ப் பொடி — 1 கிலோ,
கடுகு — கால் கிலோ,
பெருங்காயம் — 100 கிராம்,
வெள்ளை எள்ளிலிருந்து
எடுத்த எண்ணெய் — 2 கிலோ.

இதுவே நூறு எலுமிச்சம்பழமாக இருந்தால், 25 பாட்டில் ஊறுகாய் தயாரிக்க முடியும். ஆனால் இதற்குக் கடுகு குறைவாக இருக்க வேண்டும்.

இதையே குடிசைத் தொழில் முறையில், ஒரு நாளைக்கு 50 பாட்டில்களுக்கு மேல் தயாரிக்க நினைக்கிறீர்கள் என்று வைத்துக்கொள்வோம், கவனிக்க வேண்டிய கெடுபிடிகள் சில:

1. மொத்தம் 250 சதுர அடி பரப்புள்ள சுத்தமான இடம் இருக்க வேண்டும்.
2. அறையின் உயரம் பத்தடிக்குக் குறையாமல் இருக்க வேண்டும்.
3. தயாரிப்புக்கான சாதனங்களை வைத்திருக்கும் அறை 8' × 10' இருக்கவேண்டும்.
4. தயார் செய்தவற்றை வைக்க 10' × 15' அறை இருக்க வேண்டும்.
5. தண்ணீருக்கும் ஊறுகாய்த் தயாரிப்புக்கும் என்ன சம்பந்தம் என்று கேட்கலாம். ஆனாலும் நீங்கள் உபயோகிக்கும் தண்ணீரை, கிண்டி கிங் இன்ஸ்டிடியூட்டில் கொடுத்துப் பரிசோதனை செய்து நீர் நல்லது தான் என்று சான்றிதழ் பெற வேண்டும்.
6. சாஸ்திரி பவனில் இருக்கும் Food & Nutrition Dept.—ல் நூறு ரூபாய் லைசென்ஸ் கட்டணம் செலுத்த வேண்டும்.

அதிகமாக விற்பனை ஆவது மாங்காய், எலுமிச்சை ஊறுகாய்கள்தாம்.

இந்த விற்பனைப் பத்திரம் கொஞ்சம் அவசரம்...''

''ஏங்க இந்த கொடேஷனை கொஞ்சம் அடித்துக் கொடுத்து விடுகிறீர்களா?''

''நாளைக்கு கோர்ட்ல இந்த அபிடவிட்டைத் தாக்கல் செய்யணும். இன்னிக்கு ராத்திரியே கொடுக்க முடியுமா?'' இதற்கு நடுவில் 'போனில் வேறு வேலைக்கான ஆர்டர்கள் வருகின்றன. இதையெல்லாம் புன்னகையுடன் ஏற்று, அவர்கள் சொன்ன நேரத்தில், டைப் அடித்துக் கொடுக்கிறார் திருமதி மங்களம். 1965-ல் ஒரு மிஷினுடன் ஜாப் டைப்பிங் ஆரம்பித்த மங்களம் இன்று நான்கு மிஷின்கள் வைத்து இருக்கிறார். அதில் தமிழ் இரண்டு.

''டைப்ரைட்டிங் பாஸ் செய்த பிறகு ஏலத்தில் கிடைத்த மிஷினை வைத்துத் தொழிலை ஆரம்பித்தேன். என்னுடைய கஸ்டமர்கள் பெரும்பாலும் வக்கீல்கள், ரியல் எஸ்டேட், நடத்துபவர்கள்தான். சில குறிப்பிட்ட மாதங்களில் மனை வாங்குவது, வீடு வாங்குவது போன்றவை இருக்காது. அப்போது வருமானம் சற்றுக் குறையும். ஆனால் இப்போது இரவு முழுவதும் கண்விழித்துச் செய்யும் அளவுக்கு வேலை இருக்கிறது. வீட்டுக்கு வெளியே ஜாப் டைப்பிங் என்று போர்டு போட்டால் மட்டும் போதாது. முதலில் நாமே நேரில் சென்று கஸ்டமர்களைப் பிடிக்க வேண்டும். பிறகு அவர்கள் நம் வேலையில் திருப்தி அடைந்து நிறைய பேர்களை அனுப்புவார்கள். சராசரியாகத் தினமும் எனக்கு 20 ரூபாய் வருமானம் கிடைக்கிறது. பத்திரங்கள் அடிப்பதற்கு பக்கத்திற்கு இரண்டு ரூபாய் வாங்குகிறேன். பேப்பர், கார்பன் போன்றவற்றின் விலை எக்கச்சக்கமாக ஏறியிருப்பதால் காப்பி ஒவ்வொன்றுக்கும் 50 பைசா வாங்குவேன். மற்றபடி, அப்ளிகேஷன் லெட்டர் போன்றவற்றுக்குப் பக்கத்திற்கு ஒரு ரூபாய் வாங்குகிறேன். கணித வேலைகள் அதிகம் கொண்ட ரிப்போர்ட்கள் பல அவ்வப்போது வருவதுண்டு. அதற்கு அதிகமாக சார்ஜ் செய்வேன். வெறுமனே ஜாப்டைபிங் வைத்துக் கொண்டிருந்தால் மட்டும் போதாது. கூடவே 'ஜெராக்ஸ்' வைத்திருந்தால் மிகவும் நல்லது. டைப்ரைட்டர், ஜெராக்ஸ் ஆகியவைகளை வாங்குவதற்கு வங்கிகள் கடன் கொடுக்கின்றன.

வீட்டின் ஒரு பகுதியில் ஜாப் டைப்பிங் நடத்தினாலும், இதை ஒரு தொழிலாகப் பாவித்து, அதிக மின் கட்டணம் வசூலிக்கிறார்களாம் மின்சார இலாகாவினர். இரண்டாயிரம் ரூபாய் கையிலிருந்தால், நல்லதொரு செகண்ட் - ஹாண்ட் டைப்ரைட்டரை வாங்கி இந்தத் தொழிலை ஆரம்பிக்கலாம்.

✖ ''முதலில் நாமே சென்று கஸ்டமர்களைப் பிடிக்கவேண்டும்'' — திருமதி மங்களம்



# ரப்பர் ஸ்டாம்ப செய்தல்



ரப்பர் ஸ்டாம்புகள் தயாராகின்றன

சென்னை ஆயிரம் விளக்குப் பகுதியில் அடக்கமான சின்னஞ்சிறிய கடை. குமார் அண்ட் கோ, ரப்பர் ஸ்டாம்பு செய்பவர்கள்.

இது ஒரு தொழிலா? என்று மூக்கில் விரல் வைக்க வேண்டாம். தட்சிணாமூர்த்தியும் அவருடைய குழந்தைகளும் சேர்ந்து குடும்பமாகப் பாடுபடுகிறார்கள்.

எட்டாவது வகுப்பு வரை மட்டுமே படித்த இவருக்குக் கடந்த ஐந்து ஆண்டுகளாக இது ஒன்று தான் தொழில். போதுமான வருமானம் கிடைக்கிறதா என்று கேட்டால், 'உழைப்புக்குத் தகுந்த பலன் இருக்கிறது'' என்று உற்சாகமாகப் பதில் கிடைக்கிறது.

ஒரு ரப்பர் ஸ்டாம்பு, உபயோகிப்பவரை பொறுத்துப் பத்துப் பதினைந்து வருஷம் கூட வரும். அதேபோல் ஒரே வருஷத்தில் தேய்ந்து போகிறதும் உண்டு.

மூன்று அங்குல நீள வரிக்கு மூன்று ரூபாய் வீதம் விலை வைக்கிறார்கள். நீளம் அதிகமானால், நாலு ரூபாய், நாலரை ரூபாய் ஆகும்.

பிளாஸ்டர் ஆஃப் பாரீஸ், சாக் பவுடர், கோந்துப் பவுடர் மூன்றையும் கலந்து கெட்டியான மாவு ஆக்கிக்கொள்கிறார்கள். அச்சகங்களில் பயன்படுகிற எழுத்துக்களைப் பயன்படுத்தி, தேவையான அளவில் எழுத்துக்களைக் கம்போஸ் செய்து கொள்கிறார்கள். மாவுக் கலவையில் எழுத்துக்களை வைத்து நன்றாக அழுத்துகிற போது ரப்பர் ஸ்டாம்புக்கான மோல்ட் தயாராகி விடுகிறது.

இதற்காக உள்ள ஒரு ரப்பர் ஷீட்டை மோல்டின் மீது வைத்து வெப்பம் கொடுத்து அழுத்துகிற போது ரப்பர் ஸ்டாம்ப் உருவாகி விடுகிறது. ஒரு பிரேமில் சுமாராக முப்பது ஸ்டாம்புகளுக்குரிய எழுத்துக்களை கம்போஸ் பண்ணி ரப்பர் ஸ்டாம்ப் செய்ய முடியும். அப்புறம் தேவையான அச்சுப் பகுதியை நறுக்கிக் கைப்பிடிக் கட்டைகளில் பொருத்தி விடுவார்கள்.

ரப்பர் ஸ்டாம்புக்கான கைப்பிடிக் கட்டைகள், குஷனாக வைக்கப்படும் ரப்பர்கள், இருப்புப்பட்டை எல்லாமே பெங்களூரிலிருந்து வருகின்றன என்கிறார் இவர்.

ஒரு மூன்றங்குல வரிக்கு செலவு போக ஒன்றரை ரூபாய் கிடைக்கும். எவ்வளவுக்கு எவ்வளவு வேலை செய்கிறோமோ அவ்வளவு லாபம் கிடைக்கிறது.

சிலர் ரப்பர் ஸ்டாம்புக்கான ஆர்டர்களை வாங்கி இதுபோன்ற தயாரிப்பாளர்களிடம் தருவது உண்டு. இது ஏஜென்ஸிமுறை... ஆர்டர் பிடித்துத் தருகிறவருக்கும் ஒரு முத்திரைக்கு மூன்று நான்கு ரூபாய்கள் கிடைக்கும். தயாரிப்பாளருக்குக் கிடைக்கிற லாபம் அந்த அளவுக்குக் குறைந்து விடும்.

ஆனால் தட்சிணாமூர்த்தி, அந்த மாதிரி ஏஜென்ஸி எதையும் ஏற்பதில்லை. வங்கிகள், அலுவலகங்கள் என்று இவரே தினமும் அலைந்து ஆர்டர்கள் பெற்று முத்திரைகள் செய்து தருகிறார்.

எட்டு ஒன்பது பேர் உள்ள குடும்பம். மாதம் ஆயிரம் — ஆயிரத்து ஐநூறு ரூபாய் வரும் என்கிறார். சம்பளத்துக்கு ஒரு ஆளும் வைத்துக் கொண்டிருக்கிறார். குடும்பம் நடத்தி எல்லாச் செலவும் போக நூறு இருநூறு நிற்கும் என்கிறார் இவர்.

ஜூன் ஜூலை சீசன்களில் கொஞ்சம் கூடுதலாக ஆர்டர்கள் கிடைக்கும். மற்றபடி எப்போதுமே கைகொடுக்கிற தொழில் இது.

ஐம்பது வருடங்களுக்கு முன்னரே சம்கி வேலையில் சிறந்தவராகக் கருதப்பட்டவர், சூனா நானா துரைசாமி. அவரது வீட்டில், வீட்டு வேலைகளைச் செய்து கொண்டு, இரண்டு வருடங்களில் அந்த வேலையைக் கற்றுக் கொண்டார் உசைன்கான். திருவல்லிக்கேணியில் கடந்த 12 வருடங்களாக சம்கி வேலைகளைச் செய்து வரும் உசைன்கான் தமது அனுபவங்களைச் சொல்கிறார்:

''இந்தத் தொழிலுக்கு முக்கியத் தேவை நல்ல பயிற்சி பெற்று இருப்பதும் நல்ல கற்பனைத் திறனும் இருக்க வேண்டும். வாடிக்கையாளர்கள் 'இது மாதிரி இருக்க வேண்டும்; அது மாதிரி வேண்டும்' என்று சொல்வார்களே தவிர சரியாக விவரிக்கத் தெரியாது. நான் படம் போட்டுக் காண்பித்தால் 'ஆமாம் இதுதான் சார்' என்பார்கள்.''

''சேலையில் எப்படி பூ வேலைகளைச் செய்கிறீர்கள்?''

''சம்கி கட்டில் என்று ஒன்று இருக்கிறது. சேலையை அந்தக் கட்டிலில் இழுத்து வைத்து முடுக்கி விடுவோம். பிறகு பட்டர் பேப்பரில் போட்டிருக்க டிசைனை எடுத்து சேலையின் அடியில் வைத்து ஜின் பவுடர் என்ற பவுடரைச் சேலையின் மேல் தடவுவோம். சேலையில் நாம் செய்ய வேண்டிய பூவேலை அச்சாக விழுந்திருக்கும். பிறகு ஊசியில் நூலைக் கோத்துக்கொண்டு அந்தக் கோடுகளின் மேல் தைத்தால் பூ உருவாகி விடும். இதில் பட்டர் பேப்பரில் டிசைன் போடுவது தான் முக்கியம். பூ வேலைகளை பட்டர் பேப்பரில் பென்சிலால் வரைந்து விட்டு, பிறகு அதன் மேல் குண்டூசியால் குத்தி விடுவார்கள். அப்போது தான் சேலையின் அடியில் வைத்து மேலே பவுடர் பூசும்போது பூவின் வடிவம் அப்படியே சேலையில் விழும்.''

''சம்கி வேலை செய்வதற்கு என்னென்ன பொருட்கள் தேவை?''

''முக்கியமாக 'சீக்வான்ஸ்' என்று சொல்லப்படும் சம்கி. பிறகு முத்து, பட்டு நூல், வெள்ளி, தங்க ஜரிகை போன்றவை தேவை. சீக்வான்ஸ், நூல், முத்து போன்றவைகள் எல்லா நிறத்திலும் கிடைக்கிறது.''

''எந்தெந்த துணிகளில் சம்கி வேலை செய்ய முடியும்?''

''எந்தத் துணியென்றாலும் எங்களுக்குக் கவலையில்லை. வாடிக்கையாளர் ஒரு கோணியை எடுத்துக் கொண்டு வந்து இதில் வேலை செய்யுங்கள் என்றால் அதிலும் செய்வோம்.''

''ஒரு சேலைக்கு சம்கி வேலை செய்ய எவ்வளவு வாங்குகிறீர்கள்?''

''அது வேலையைப் பொறுத்து இருக்கிறது. ஐம்பது ரூபாயிலிருந்து 400 ரூபாய் வரை நான் வாங்கியிருக்கிறேன்.''

''இந்தத் தொழிலைத் துவங்குவதற்கு எவ்வளவு முதலீடு தேவை? கற்றுக் கொள்ள எவ்வளவு நாட்கள் ஆகும்?''

''சம்கி கட்டில் செய்வதற்கு 300 ரூபாய் ஆகும். பிறகு ஆரி ஊசி என்று சொல்லப்படும் சம்கி ஊசிகள் வாங்க வேண்டும். எல்லாம் சேர்த்து 500 ரூபாய் வரை ஆகும். தைக்கும் வேலையைச் சீக்கிரத்தில் கற்றுக் கொண்டு விடலாம். ஆனால் டிசைன்கள் கற்றுக் கொள்வது இருக்கிறதே. இதற்கு ஒரு எல்லையே கிடையாது. அனுபவம் வர, வர, உங்கள் கற்பனைத் திறன் வளர, வளர, புது டிசைனை நீங்கள் உருவாக்க முடியும்.''

முஸ்லிம்கள், மார்வாடிகள், பஞ்சாபிகள், சம்கி வேலை செய்த துணிகளை அணிவதில் மிகவும் ஆர்வம் காட்டுகிறார்களாம். உசைன்கானிடம் தற்போது எட்டு பேர்கள் பணி புரிகிறார்கள்.

○ சம்கிவேலை செய்யும் எத்தனையோ கலைஞர்களுள் ஒருவர்...





# கடிகார ரிப்பேர்

கடிகாரம் 'மக்கார்' பண்ண காலநேரம் இடையாது!

சுப்பிரமணியன் (வெங்கடேசுவரா வாட்ச் கம்பெனி, அசோக்நகர்.)

பயிற்சி எங்கே பெறுவது?

அரசாங்கம் நடத்துகிற இண்டஸ்டிரியல் டிரெயினிங் இன்ஸ்டிடியூட்களில் (ஐ.டி.ஐ.) கடிகார மெகானிஸம் பற்றி ஒரு கோர்ஸ் உள்ளது. அதில் சேர்ந்து பயிற்சி பெறலாம். (அட்மிஷன் முறைகளுக்கு — பார்க்க: எதிர்காலம் உங்கள் கையில் தொடர்.)

ஏ. சுரைக்காய் க. உதவாது என்பது போல, இந்தப் படிப்பைப் படித்தாலும், படிக்கா விட்டாலும், கடிகார ரிப்பேர் ஷாப் ஒன்றில் சில மாதங்கள் பயிற்சி பெற வேண்டியது அவசியம். அப்போது தான் கடிகாரம் பற்றி முழுமையாய்த் தெரிந்து கொள்ள முடியும். என்னென்ன தகராறுகள் வரும்? அவற்றை எப்படிச் சரி செய்வது என்றெல்லாம் 'கிரிஸ்டல் கிளியராக'த் தெரிந்து கொள்ள இப்பயிற்சி கைகொடுக்கும்.

ஒரு வருத்தம் தரக் கூடிய விஷயம்: ரிப்பேர் கடையில் வேலைக்குச் சேருவது என்பது அவ்வளவு சுலபமான காரியம் இல்லை. யாரும் இருகரம்நீட்டி மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொள்வதில்லை. கடைக்காரருக்குத் தெரிந்தவர் யார் மூலமாகவாவது 'டிரை' பண்ணலாம்.

சேருவதில் ஏன் இந்தக் கஷ்டம்?

புதிதாய் வருகிற இளைஞனைச் சேர்த்துக் கொண்டால், கடிகாரத்தை அக்குவேறு ஆணி வேறாகப் பிரித்து, — ஏ-டு-இஸட் வரை விளக்கிக் கொண்டிருக்க வேண்டும். இதற்கு நேரம் வீணாகிறது என்று கடைக்காரர் நினைப்பார். அந்த நேரத்தில் விஷயம் தெரிந்தவரை வைத்திருந்தால் காசு பண்ணிடலாமே. அதுதான்.

ஆனாலும், இளைஞர்களுக்குப் பயிற்சி தர முன்வருகிற கடைக்காரர்களும் இருக்கவே செய்கிறார்கள்.

பயிற்சி பெற்ற பின்பு?

எப்படியோ ஆயிரம் ரூபாய் தயார் பண்ணி விடுங்கள். உங்களிடம் இல்லாவிட்டால் — கவலையை விடுங்கள். ஜனார்தன் பூஜாரி தருவார். அமர்க்களமாய் உங்கள் பெயரிலேயே வாட்ச் ரிப்பேர் கடை. ஆரம்பிக்க வேண்டியதுதான்.

அதற்கு முன் — சில கேள்விகள்:

எந்த ரிப்பேரானாலும் சரி செய்து விட முடியும் என்ற தன்னம்பிக்கை இருக்கிறதா? வெரிகுட்.

கடைக்கு வேண்டிய சாமான்கள் இத்யாதிகள் ரெடி பண்ணி விட்டீர்களா?

ஃபைன் நைஸ்!

இடம் தயாரா?

கடிகார ரிப்பேர் கடைக்கு, ஏதோ பெரிய ரூம் அது இதெல்லாம் அவசியமே இல்லை. சின்ன இடம். டேபிள், சேர் போட்டு, வேலையைக் கவனிக்கலாம். வீட்டிலே கூட வைத்துக் கொள்ளலாம்.

சரி, கடை திறப்பு விழாவுக்கு ஏற்பாடு செய்யுங்கள்.

ஆல் தி பெஸ்ட்!

எந்தப் பிரச்னையையும் சமாளிக்கிற தன்னம்பிக்கை இல்லாவிட்டால் வேலை தெரிந்த இன்னொருவரை பகுதி நேர வேலைக்கு வைத்துக் கொள்ளலாம். ஆனால் உங்களுக்கே விஷய ஞானம் பெருமளவு இருந்தால் தான் அவரை உம்மால் சமாளிக்க முடியும். இல்லையேல் ஏமாற நேரலாம். உஷார்.

பிஸினஸ் எப்படி இருக்கும்?

நம் நாட்டில் கடிகாரம் 'மக்கார்' பண்ண கால நேரம் இடையாது. 365 நாளும் பிஸினஸ் கிடைக்கும். மழை காலங்களில் சூடு பிடிக்க சான்ஸ் உண்டு.

ஒரு விஷயம். இங்கே பொதுவாக கடிகாரம் என்று குறிப்பிட்டிருந்தாலும், அதில் கைக்கடிகாரம், அலாரம் டைம்பீஸ், சுவர்க் கடிகாரம் மற்றும் டிஜிட்டல் கடிகாரங்கள் என அத்தனையும் இதில் அடங்கும்.

பற்களின் மீதான
தம்முடைய பிடிமானம்
தளர்ச்சி அடைய
உங்கள் ஈறுகளுக்கு
இடமளிக்காதீர்!

ஈறுகளை பலப்படுத்துவதற்கான விசேட
அஸ்ட்ரிஞ்ஜெண்ட் அடங்கியிருப்பது ஃபோர்ஹென்ஸ் ஒன்றில்தான்.
உங்கள் ஈறுகள் உறுதியோடிருக்கும் போது உங்கள்
பற்கள் நீடித்த ஆயுளைப் பெறுகின்றன.

சிறந்த அமெரிக்கப் பல் டாக்டர் ஆர். ஜே.
ஃபோர்ஹென், தன்னுடைய டூத் பேஸ்ட்டில் விசேட
அஸ்ட்ரிஞ்ஜெண்ட் ஒன்றைச் சேர்த்தார்! அது.
ஈறுகளில் நேரடியாக செயல்பட்டு உண்மையிலேயே
அவற்றை பலப்படுத்துகிறது. அது, ஈறுகளைப்
உறுதிப்படுத்துவதால் பற்கள் சிறந்த
பிடிமானத்தைப் பெறுகின்றன. ஆகவே பற்களுக்கு
உறுதியான அடித்தளமும் நீடித்த ஆயுளும்
கிடைக்கின்றன.

Forhan's for the GUMS
The toothpaste created by a dentist

**ஃபோர்ஹென்ஸ் – பல் டாக்டரால் உருவாக்கப்பட்ட டூத்பேஸ்ட்**

339F 203 TAM



சின்னஞ்சிறு காயத்தில்கூட அழுக்குப் புகுந்துவிடும்
இதனால் காயம் பெரிதாகும், கஷ்டம் உருவாகும்.

# உடனடியாக பாண்ட்-எய்ட் உபயோகியுங்கள்

உலகில் உள்ள தாய்மார்கள் நம்புவது பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்குகள்—அது, காயங்களில் அழுக்குப் புகாமலும், தொற்றிலிருந்தும் காயங்களைப் பாதுகாக்கிறது.

ஆகவேதான் பாண்ட்-எய்ட் முழுப் பாதுகாப்பானதாகும். பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்கில் உள்ள நிருபணமான ஆன்டிஸெப்டிக், காயத்தை ஆற்றுவதற்கு உதவுகிறது. அதிலுள்ள நுண்துளைகள் காயங்களை விரைந்தாற்றிட உதவுகின்றன. ஒட்டிக்கொள்ளாத வசதிமிக்க ஒப்பற்ற அடுக்கு.

காயங்களின் வெவ்வேறு வடிவம் மற்றும் அளவுகளுக்கு ஏற்ப வருகின்றன பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்குகள். பெரிய புண்கள், சிறிய வெட்டுக் காயங்கள், கட்டுப்போட முடியாத இடங்கள், கொப்புளம் மற்றும் சிராய்ப்புகளுக்கு எப்போதும் உங்கள் கைவசமிருக்கட்டும் பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்குகள்.




**கைவசம் வைத்திருங்கள் பாண்ட்-எய்ட்**
**ஏனென்றால், காயங்கள் எங்கும் எந்நேரமும் ஏற்படலாம்.**

OBM/2514/TM

Johnson & Johnson





வென்டில்சேர்த்துக்கொள்ளத்தயங்கினார்கள். நான் மூன்றே வருடங்களில் பட்டம்வாங்குவதாக உறுதியளித்தேன். பெண்ணுக்கு இடம் கிடைத்தது. இன்று மகள் பி.காம். படிக்கிறாள். நான் எம். காம். பட்டதாரி.

**அ. ஞானம்பாள், போடிநாய்க்கனூர்**

''சாரி சார்... இடமில்லை'' என்று தலைமை ஆசிரியை உறுதியாகச் சொல்லக் கேட்ட என் நான்கு வயது மகள் ''ஏம்பா இடம் இல்லாட்டி நெருக்கி நெருக்கி உட்காரலாமே'' என்று கூறி எல்லோரையும் (தலைமை ஆசிரியை உட்பட) வாயடைத்துப் போகச் செய்தாள். பிறகு இடம் கிடைத்தது என்று சொல்லத் தேவையில்லை.

**ஜூ. நைட்டிங்கேல் கிறிஸ்டி, சென்னை-3**

அப்பா ஊரில் இல்லாத சமயம் என் தங்கையை ஒரு பிரபல கான்வென்டில் சேர்க்க அழைத்துப் போனாள் அம்மா. 'தந்தை ஏன் வரவில்லை' என்று சற்றுக் கடுமையாகவே விசாரித்திருக்கிறார் தலைமை ஆசிரியை. இதைக் கவனித்த தங்கை அம்மாவிடம் ''நான்தானே படிக்கப் போறேன், அப்பா இல்லையே?'' என்று சொல்லச் சிரித்து விட்டார், தலைமை ஆசிரியை.

**ஆர் ஸ்ரீநிவாசன், சென்னை-17**

என் பெண் சுதாவுக்கு அட்மிஷன் கிடைத்து விட்டது என்ற சந்தோஷத்தில் பணம் கட்டப் போனால், ஏற்கெனவே அந்த இடத்தை மற்றொரு சுதாவுக்கு (அவள் தந்தை பெயரும் ஆர். ஸ்ரீனிவாசன்) கொடுத்திருப்பது தெரிந்தது. அட்மிஷன் நோட்டீஸ் போர்டைப் பார்த்து அவர்கள் முந்திக் கொண்டு விட்டார்கள். நிலைமையை விளக்கியதும் இரண்டு சுதாக்களுக்கும் இடம் தந்தார்கள்.

**வி. மஹாலக்ஷ்மி, சேலம்-2**

ஸ்கூல் ப்யூன் ஒருவன் என் பிள்ளைக்கு இடம் வாங்கித் தருவதாகக் கூறி ஐநூறு ரூபாய் வரை கறந்துவிட்டுத் தலைமறைவாகி விட்டான். விசாரித்த போதுதான் தெரிந்தது அவனுக்குத்தற்காலிகமானவேலை என்று. அந்தப் பள்ளியில் இடம் கிடைக்காமல் பணமும் நஷ்டமாயிற்று.

**எல். முத்துலக்ஷ்மி, சென்னை-14**

காயத்ரியை எல். கே. ஜி.யில் சேர்க்க ஒரு வயதிலேயே விண்ணப்பித்தேன். அவளுக்கு மூன்று வயதானதும் விசாரித்தேன். ஸீனியாரிட்டி படி தான் இடம் தருவோம் அடுத்த வருடம் வாருங்கள் என்றார்கள். மறுவருடம் போன போது நான்கு வயது ஆகிவிட்டதே மூன்று வயதிலேயே சேர்த்திருக்கணும் என்றார்கள். கடைசியில் அலையாய் அலைந்து, லஞ்சம் கொடுத்துத்தான் சீட் வாங்க முடிந்தது.

## வாசகர் பங்கு





**உமா, சென்னை-83**

ஒரு பிரபல பள்ளியில் அட்மிஷன் ஃபாரம் வாங்க பிப்ரவரி 17 அன்று காலை டோக்கன் தருவதாகச் சொன்னார்கள். பிப்ரவரி 16 மாலை உதேச்சையாய் அந்த வழியே போன போது டோக்கனுக்குப் பெரிய கியூ நிற்பதைப் பார்த்தோம். உடனே என் கணவர் வீட்டிலிருந்து தலை காணி எடுத்துக் கொண்டு கியூவில் நிற்கப் போய்விட்டார். மறுநாள் காலை பத்து மணிக்கு 105—ஆம் நம்பர் டோக்கன் கிடைத்தது!

**வி. பஞ்சாபகேசன், திருச்சி-20**

பள்ளிக்குப் போக மாட்டேன் என்று அடம் பிடித்த மகனைக் கட்டாயப்படுத்தி வகுப்பில் அமர்த்திவிட்டு, பணம் கட்டி விட்டு, ஆய்ந்து, ஓய்ந்து வீடு வந்து பார்த்தால் அவன் எனக்கு முன்னே வீட்டுக்கு வந்து நிற்கிறான்!

**என். நாகலட்சுமி, கும்பகோணம்**

பிள்ளையை ஆறும் வகுப்பில் சேர்க்க அப்ளிகேஷன் கொடுத்த போது பள்ளி அலுவலர் ''பையன் வயது ரொம்ப அதிகம், சேர்த்துக்க முடியாது'' என்றார் சிரித்தபடி. ஃபாரத்தை வாங்கிப் பார்த்த போது தெரிந்தது என் கணவர் தம் பிறந்த தேதியைத் தவறுதலாக எழுதியிருந்தார் என்று.

**சந்திரிகா என். பம்பாய்-19**

என் நான்கு வயது வாயாடிப்பெண்ணிடம் 'அதிகம் பேசினால் ஸ்கூலில் சேர்த்துக் கொள்ள மாட்டார்கள்' என்று சொல்லி வைத்திருந்தேன். அட்மிஷனுக்காகச் சென்ற போது குழந்தை வாய்மீது வைத்திருந்த விரலை எடுக்கவே இல்லை. டீச்சர் கேட்டவுடன் ''நான் பேசினால் வாயாடி என்று சொல்லி எனக்கு இடம் தர மாட்டீர்கள்'' என்று வெடுக்கென்று பதில் சொன்னாள் அவள்.

**விஜயா ஈசுவரன், ஆறுமுகநேரி**

கல்கத்தா பள்ளி ஒன்றில் என் தங்கையைச் சேர்க்க முயன்றபோது இன்முகத்தோடு வரவேற்று, உபசரித்து மரியாதையுடன் ஸீட் கொடுத்தார்கள். பிறகுதான் புரிந்தது மர்மம் — என் தங்கைதான் புதிதாக ஆரம்பிக்கப்பட்ட எட்டாம் வகுப்புக்கு முதல் மாணவி.

**கே. சாவித்திரி, மதுரை-9**

எதிர்பாராமல் என் மாமியார் இறந்துவிட நுழைவுத் தேர்வை எழுத முடியவில்லை என் மகனால். பள்ளிக்குப் போய்க் கெஞ்சி மற்றொரு தேதி கேட்டு வாங்கினேன். அன்று மகன் வழுக்கி விழுந்து வலது கையை ஒடித்துக் கொண்டான். நல்லவேளையாகத் தலைமையாசிரியர் கேள்விகளுக்கு 'ஓரல்' ஆகவே பதில் பெற்றுக்கொண்டு அவனைச் சேர்த்துக் கொண்டார்.

---

**ராகமாலிகா அளிக்கும் பட்டுப் புடவையை இலவசமாகக் குலுக்கல் முறையில் பெறுபவர்:**

**பி. இளவரசி,**
**24, வீவர்ஸ் காலனி, முதல் தெரு,**
**தர்மபுரி-636 701**

---

முட்டாள் தனக்குத் தேவையான ஒரு ரூபாய் பொருளுக்கு இரண்டு ரூபாய் கொடுப்பான்.

மடையன் தனக்குத் தேவையில்லாத இரண்டு ரூபாய் பொருளுக்கு ஒரு ரூபாய் கொடுப்பான்.

—எம். அசோக்ராஜா.





இன்ஸ்பெக்டர்: ''இந்த நபர் பெண் வேஷம் போட்ட ஆண் என எப்படிக் கண்டுபிடித்தாய்?''

கான்ஸ்டபிள்: ''பெரிய பெரிய புடவைக் கடை எல்லாம் தாண்டிப் போனவன் ஒரு தடவை கூட அந்தக் கடைகளை நிமிர்ந்து பார்க்கவில்லை.''

—எஸ். சித்ரா.




# ராகமாலிகா பட்டு சேலைகள்

சுகன் ஆர்கேட்,

நெ. 12பி, நாகேஸ்வரராவ் ரோடு, பனகல் பார்க் எதிரில்

தியாகராய நகர், சென்னை-600 017

(ஞாயிறு கடை உண்டு)

ராஜா இல்லாதது — தாராவுக்குக் கையொடிந்தாற் போலத்தான் இருக்கிறது.

அவனுக்கு ஒத்தாசை செய்வது ஒருபக்கம் இருக்கட்டும். எத்தனை பெரிய துணையாய், பக்கபலமாய் இருந்தான் அவன்.

அவன் இருந்த சமயங்களில் — பாபுவை அவனே ஏதாவது செய்து விடுவானோ என்கிற மடத்தனமான சந்தேகங்கள் எல்லாம் அவளுக்கும் தோன்றினதான் என்றாலும்... அதெல்லாம் மனித மனசின் பலவீனங்கள்தானே...

என்றைக்கு அவன் விஜியின் இறப்பைப் பற்றி அவளிடம் ஓடி வந்து சொன்னானோ.. அதுதான் அவனைக் கடைசியாய்ப் பார்த்ததும் கூட...

அப்புறம்?

அப்புறம் அவன் எங்கே போனான்... யாரிடம் புகலிடம் கேட்டிருப்பான்...?

சந்தர்ப்பங்களும், சூழ்நிலைகளும், அவனை மேலும் மேலும் குற்றம் செய்யத் தூண்டுகின்றனவே...

சங்கிலித் தொடராய்...

கௌதமின் கொலையை அடுத்து, அவன் தலை மறைவானது. வளைகாப்பு நடந்த வீட்டிற்குள் திருட்டுத்தனமாய்ப் புகுந்தது. பிரசவ ஆஸ்பத்திரியில் புகுந்து கலாட்டா செய்தது மட்டுமில்லாமல் ஆஸ்பத்திரி ஊழியரை வாயில் துணியடைத்து, கட்டிப் போட்டது. பரந்தாமன் வீட்டுப் பிறந்த நாள் விழாவில் புகுந்து விளக்கை அணைத்துப் பரபரப்பை உண்டு பண்ணியது. எல்லாவற்றுக்கும் சிகரம் வைத்தாற்போல — இறுதிச் சடங்குக்காகக் கிடத்தப்பட்டிருந்த சடலத்தைக் கடத்திக் கொண்டு போய் எரித்தது..

இதற்கெல்லாம் — இவன் பிடிபட்டால் எத்தனை வருஷத்துக்குக் குறையாமல் இட்டுவார்கள்... வருஷங்களா — இல்லை, நேரடியாகத் தூக்குமேடையா...

விஜியின் சடலம் காணாமல் போனது — எல்லோரையுமே ஒரு கலக்கு கலக்கி விட்டது எனலாம்...

'இத்தனை அக்கிரமங்களையும் செய்து கொண்டு ஒருவன் தலைமறைவாய் இருக்கிறான் — அவனை போலீஸாரால் கண்டுபிடிக்க முடியவில்லை என்றால் — ஒன்று நமது காவல் துறையினருக்குச் சாமர்த்தியம் போதாமல் இருக்க வேண்டும், இல்லாவிட்டால் கடமையையே கண்ணாகக் கருத வேண்டிய போலீஸ் அதிகாரி, தம் மகனுக்காக — தம் பாதையிலிருந்து விலகியிருக்க வேண்டும். இரண்டில் எது நிஜம் என்பதை விரைவில் தெளிவுபடுத்துங்கள்...'

—இப்படியொரு அனாமதேயக் கடிதம் வேறு, காவல் துறைக்குப் பத்துப் பதினைந்து நாட்களுக்கு ஒருமுறை...

இத்தனை விஷயங்களையும் ஒன்று விடாமல் பத்திரிகைகளில் படிக்கிறாள் தாரா.

இவன் எங்கே போய்த் தொலைந்தான்.

ராஜா போலீசுக்குப் பயந்து, பசி தூக்கமில்லாமல் ஓடுவதைக் கற்பனை செய்து பார்க்கக் கூட முடியவில்லை தாராவினால்.

அழுகை பொங்குகிறது.

அவன் யாரோ... அவள் யாரோ...

ரத்த சம்பந்தம் கூட இல்லை.

ஒருவனின் மரணத்தினால் பிறந்த சிநேகம் உறவு, இது...

அது என்னவோ—

இத்தனை நாளும், தன் காலைச் சுற்றி வளைய வந்த — அந்த வீட்டிலேயே தன்னைத் தவிரப் பேசி நடமாடும் ஒரு ஜீவனாக இருந்தவன் — திடீரென மறைந்ததால்... பூமி இயக்கமே 'திக்'கென நின்று விட்டாற் போல இருக்கிறது அவளுக்கு...

பழகிவிட்ட பாசம்தான் என்றாலும் அத்தனை சுலபமாக மறந்து விட முடியுமா...?

இவனது இத்தனை அவலங்களுக்கும்— ஏன் — விஜியின் மரணத்துக்குக் கூட தான் தானே காரணம் என்பதை நினைக்க நினைக்க— தாராவுக்குத் தன் மீதே ஆத்திரம்!

'அப்படியாவது உன் மான அவமானம் பெரிதாய்ப் போய் விட்டதா...?'

நெஞ்சம் இப்படிக் கேட்காமல் இல்லை..

'இப்போதே போய் — எனக்காக, என்னைக் காப்பாற்ற ராஜா, கௌதமோட மோதினதில்தான் இந்தக் கொலையே நிகழ்ந்ததுன்னு சொல்லிட்டா... என்ன...?'

'சொல்லிடலாம்... கோர்ட்டுன்னும், கேஸுன்னும் உன்னை ஆயிரம் இடத்துக்கு இழுத்தடிப்பாங்க. நடந்த கொலையை மறைக்க முயற்சி செஞ்ச குற்றத்துக்காக உனக்கும் தண்டனை கிடைக்கும்...'

'கிடைக்கட்டுமே... இதோ, இப்ப இந்தச் சிறையில அந்தமான் தீவை விடவும் மோசமான அத்துவானக் காட்டுல நான் அவதிப்படறதை விட — ஜெயில் வாசம் மோசமா இருக்கப் போறதில்லே...'

'எல்லாம் சரிதான், பாபு? இவரை என்ன செய்வே? எங்கே விட்டுட்டுப் போவே? பிறந்த குழந்தையைப் பால் கொடுக்கற தாய் விட்டுட்டுப் போறதை விடவும் கொடுமை இல்லையா இது? குழந்தையாவது பசிச்சா

அனுராதா ரமணன்

அழும். தன்னோட சின்ன வயித்துக்கு ஒரு சங்குப் பால் அவசியம் தேவைங்கறதைச் சொல்லாமச் சொல்லும். இவர் அப்படி யில்லையே... யாராவது பார்த்துப் பால் ஊத்தினா ஊத்தினது. இல்லேன்னா இல்லே... இவரை எங்கேம்மா விடுவே?'

'அப்பா சொன்ன மாதிரி ஆஸ்பத்திரி யிலே சேர்த்துட்டு... நேரே போலீஸ் ஸ்டேஷனுக்குப் போயிட்டா என்ன...?'

அவள் பாபுவின் முகத்தைப் பார்க்கிறாள். முகம் முழுக்கத் தாடிப் புதராய்...

ராஜா இருந்திருந்தால் இப்படி விட் டிருக்க மாட்டான். எது நடக்கிறதோ இல்லையோ இதெல்லாம் ஒழுங்காக நடந்து விடும்.

பாபுவைத் துடைத்துப் பவுடர் போடுவதி லிருந்து, தலைமுடி, தாடியைக் கத்தரித்து ஒழுங்கு பண்ணுவது வரை... எத்தனை காரியங்களை அவனாக இழுத்துப் போட்டுக் கொண்டு செய்திருக்கிறான்...

இப்பொழுது கவனிக்க ஆளின்றி.... தாராவிற்குச் சத்தமாக இதற்கெல்லாம்



நேரம் இல்லே...ஆபீசுக்குப்போய்த் திரும்பும் வரையில்...

ராஜாவின் மறைவுக்குப பிறகு — பாபு பட்டினிதான் கிடக்கிறான்...

மாலையில் வீடு திரும்பியவுடனேயே ஓடிவந்து அவனது மூச்சு இன்னமும் இருக் கிறதா என்றுதான் பார்ப்பாள் தாரா.

அப்படியாவது இந்த உத்தியோகம் தேவையா என்கிற அலுப்பு எழும்பொழு தெல்லாம் — முதல் தேதியில், கையில் கிடைக் கிற சில நூறு ரூபாய்த் தாள்களும், அந்தத் தாள்களுக்காகவே காத்திருக்கிற வயிற்றுப் பிரச்னைகளும் முக்கியமாக பாபு வைப் பராமரிக்கும் பிரச்னையும் கண்முன் விஸ்வரூபமெடுத்து நிற்கும்.

இப்படி இவனைப் பாதி நாள் பட்டினி போடுவதற்கு ஏதாவது அரசாங்க ஆஸ்பத் திரியில் சேர்த்து விடலாம் தான்....

மனசு வரவில்லையே...

பழைய பாபுவிடம் இவளுக்கு எவ்வள வுக்கு எவ்வளவு பயம் இருந்ததோ — அந்த அளவுக்குத் துளியும் குறையாமல் இந்தப் பாபு விடம் பாசம் விழுந்து விட்டதே...

அது எப்படி இனிமேல் விலக முடியும்? விலகக முடியும்?

இத்தனைக்கும் நடுவில் ஒற்றைப் புள்ளி யாய் ஒரு நம்பிக்கை, மினுக்கிக் கொண்டு தான் இருக்கிறது...

'நான் கோர்ட்லே போய் சாட்சி சொல்லு வேன்... இத்தனை நாளும் இல்லாம — நான் சாட்சி சொல்லி முடிச்சதுக்கு அப்புறம் இவர் கண்ணைத் திறந்து பார்ப்பார். ஏன்... புனர்ஜென்மம் எடுத்தாப்பல —மறு படியும் இவரோட அதட்டல் உருட்டலான வாழ்க்கை ஆரம்பமானாலும் ஆகிடும்... சொல்றதுக்கில்லே...'

ஆனால்—

பரிதாபத்துக்குரிய தாராவின் அறிவுக்கு— எட்டாத வண்ணம், பாபுவின் நிலைமை மோசமாகிக் கொண்டுதான் போகிறது...

வெளிப்பார்வைக்கு எப்பொழுதும் போல நீண்ட தூக்கமாய்த் துயில்பவனின் உள் உறுப்புக்கள் கொஞ்சம் கொஞ்சமாய்த் தங்கள் வேலையை நிறுத்தி முரண்டு செய்யத் தொடங்கி விட்டது. அவளுக்குத் தெரி யாது...

அவளும்தான் எத்தனை நாட்களாக... நாட்களா? — தப்பு. தப்பு... — வருடங்களாக எமனுடன் போராடிக் கொண்டிருக்கிறாள்.

கூட்டிக் கழித்துப் பார்க்கப்போனால்— தாராவின் பதினொரு வருட இல்வாழ்க்கை யில் ஆறு வருடங்கள் அடிதடியும் ஆரவார மும் மிகுந்ததென்றால் — மீதி ஐந்து வருடங்கள்...

ஐந்து வருடங்களா...?

அடேயப்பா.

ஒரு மனிதனின் மௌன யுத்தம் —கண் ணுக்குத் தெரியாத கால தேவனுடன், ஐந்து வருடங்களாகவா தொடர்கிறது...?

ஏன், ராஜா விஜியின் மரணச் செய்தி கேட்டு ஓடியே மூன்று வருடங்களாகி விட்டதே...

தாரா, ஆபீசுக்குப் போகும்பொழுது, பஸ்ஸின் ஜன்னலோர ஸீட்டில் அமர்ந்த படி, தெருவில் போவோர் வருவோ ரில் அவனைத் தேடுவது வழக்கமாகிவிட்டது.

எங்கேயாவது கண்ணில்பட மாட்டானா..?

''இங்கே, எனக்கு யாருமே இல்லே ராஜா... தன்னந்தனியா, உயிரற்ற சடலத் தோட குடித்தனம் பண்ணற மாதிரி —இவ ரோட வாழ்ந்திட்டிருக்கேன்... திடீர்னு இவருக்கு ஏதாவது ஆயிட்டா — எங்கே போறது, யார் கிட்ட சொல்றது... எதுவுமே தெரியாது எனக்கு... எங்கேயிருந் தாலும் வந்து விடு ராஜா...''

இது மானஸீகமான பிரார்த்தனை... தினமும் இவளால் துதிக்கப்படும் மந்திரம்...

அன்று கூட—

ராஜாவைப் போல எவனையோ பார்த்த வுடன் அந்தப் பரபரப்பில், பஸ்ஸிலிருந்து இறங்கி விட்டாள்...

கண்டக்டரின் வசவுகளை அலட்சியமாய் ஒதுக்கிவிட்டு, சென்ட்ரல் ஸ்டேஷனிலிருந்து பூக்கடை போலீஸ் ஸ்டேஷன் வரையில் ஓட்டமும் நடையுமாய்ப் போனது தான் மிச்சம்.

## டி. வி.யில் தெரிகிறது குணதிசயம்



உங்கள் டி.வி.யில் கலர் அட்ஜஸ்ட்மென்ட் செய்கிறபோது சிவப்பு வண்ணத்தை அதிகப்படுத்துவீர்களா? அப்படியானால் நீங்கள் சுறுசுறுப்பானவர்; தன்னம்பிக்கையுடையவர்; தீரச் செயல்களில் நாட்டமுடையவர் என்கிறார் ஸ்விட்சர்லாந்தின் பிரபல மனோதத்துவ நிபுணர் மாக்ஸ் லூஷர்.

மஞ்சள் நிறம் அதிகம் வெளிப்படும்படி வைப்பவர் திறந்த மனம் கொண்டவர்; நம்பிக்கைவாதி; சந்திக்கிற எல்லாருடனும் தொடர்பு கொண்டு பழக விரும்புபவர். நீலநிறம் - அமைதியானவர்; திருப்தியுடையவர்; இவருடன் வாழ்வது எளிது. டி. வி. யில் கருநீலத்தை விரும்புகிறவரோ, உலகுக்கும் தங்களுக்கும் இடையே இருக்கும் கதவைச்சாத்திக் கொண்டு தியானத்தில் ஈடுபட விரும்புபவர்.

நண்பர்கள் வீட்டுக்குப் போகும்போது டி. வி. யில் தூக்கலாகத் தெரியும் கலரிலிருந்தே அவரது குணதிசயத்தைக் கணித்து விடலாம். போங்கள்!

—'சைகாலஜி டுடே'யிலிருந்து, லட்சுமி மோகன்.

---

ஒரு பெட்டிக்கடையில் சிகரெட்டை வாங்கிக் கொளுத்தியபடி அவள் திரும்பியதும் — 'ச்சே, இதற்காகவா, இப்படி ஓடி வந்தோம்' என்று வெறுத்துப் போய் விட்டாள்...

இந்த வீண் அலைச்சலினால் — இரவு வீடு வந்து சேர ஒன்பது மணி.

அநாவசிய நடையும், அவள் 'ராஜாவோ, ராஜாவோ' என்கிற பதற்றமும் ஒன்று சேர்ந்து — அவளை ஏகமாய்ச் சோர்வுறச் செய்ய...

பூட்டைத் திறந்தவள் — கைப்பையைத் தூக்கி விட்டெறிந்து விட்டு, சற்று நேரம் தரையிலேயே கவிழ்ந்து படுக்கிறாள்...

சமையலறையில் பூனை, பாத்திரத்தை உருட்டும் சத்தம் கேட்டு எழுந்தவள்—

வழக்கமாய் வந்தவுடன் பாபுவுக்கு, பாலை குழாய் வழியே ஊற்றும் தான், இன்று எப்படி மறந்தோம் எனத் தனக்குள் சபித்துக் கொண்டே —

பாலை எடுத்து வந்து குழாயில் ஊற்றுகிறாள்... கைதான் தன் பாட்டுக்கு இயங்கியதே தவிர, மனசு அங்கேயே இல்லை...

திடீரென, குழாயில் ஊற்றிய பால், உட்செல்லாமல் எதிர்த்து, குழாய் நிரம்பி வெளியே வழியத் தொடங்கிய போதுதான் தன்னுணர்வு பெறுகிறாள் அவள்...

'என்னது? பால் உள்ளே ஏன் போகல்லே..'

அவள் பதற்றத்துடன், பாபுவின் கையைத் தொட்டுப் பார்க்க —

அது எப்பொழுதோ குளிர்ந்து விட்டிருந்தது...

(தொடரும்)

அம்மாவைப் பார்த்தபோது மெல்ல அதிர்ந்தேன்...

முகமெல்லாம் புருபுருவெனச் சிவந்து, கண்கள் கலங்கி, உதடு துடிக்க நிற்கும் அம்மா...

ஒரே வாரத்தில் இளைத்துத் துரும்பாய் நிற்கும் அம்மா...

கெஞ்சும் கண்களால் என்னிடம் எதையோ சொல்ல நினைக்கும் அம்மா...

''என்னம்மா ஆச்சு?''

கேள்விக்குக் காத்திருந்தது போல...

அழத் தொடங்கினாள்...

அவளை முடிஞ்சு வச்சிருக்காடா அந்த நீலி. நீயே சொல்லுடா முரளி, உன்னம்மா யாருக்கு என்ன துரோகம் செஞ்சிருக்கேன்?'' அம்மா புலம்பிக் கொண்டேபோக,

எனக்கு 'நறுக்'கென்று இன்னியதுபோல இருந்தது...

''இதைச் சும்மா விடக் கூடாது.... ரெண்டுல ஒண்ணு கேட்கணும்... வரட்டும்.. பார்க்கலாம்.''

அண்ணு உள்ளே நுழைகிறான்.

# உனக்கென்று ஒருத்தி வரும்போது....

தேவிபாலா



''சீக்கிரம் போயிடணும்டா முரளி...''

''ஏம்மா?''

''நம்மைப் பிடிக்காத உலகத்துல இருந்து யாருக்குப் பிரயோஜனம், சொல்லு?''

''புரியும்படியாச் சொல்லும்மா... நீ எனக்கு வேணும்... எப்பவும் வேணும்... இப்பச் சொல்லு...''

''இது அவனுக்குத் தோணலியே.... உன்னை மாதிரித்தானே உங்கண்ணனையும் பெத்தேன்... பொத்திப் பொத்தி வளர்த்த பின்னை அவன்... இப்ப... இப்ப...''

''ஏம்மா, ஏதாவது சொன்னானா?..''

''சொன்னாக் கூடத் தேவலேடா.... பக்கத்துல நின்னு ஒரு வார்த்தை பேச மாட்டேங்கறான்டா... மூத்தாளுக்குள்ள

''வா... ராம், என்ன இன்னிக்கு லேட் டாயிடுத்து... கையை, காலை அலம்பிண்டு வா... சாதம் போடறேன்.''

''காயத்ரி எங்கே?''

''குளிக்கறா...''

''அவ வரட்டும்... சாப்பிட்டுக்கலாம்.''

அம்மா முகம் சிறுத்துப் போனது.... எனக்குள் சுருசுருவெனக் கிளம்பியது.

''அதான் அம்மா போடறேன்னு சொல்றாளே... உட்கார்ந்து சாப்பட வேண்டியது தானே...''

மெதுவாக என்னைத் திரும்பி ஒரு முறை தீர்க்கமாகப் பார்த்தான் அண்ணா...

'சாப்பிடப் போறது நான்... போடப் போறது காயத்ரி... இடையில் நீ என்ன..' என்பது போல அழுத்தமாக இருந்தது அந்தப் பார்வை...

பதில் பேசாமல் நகர்ந்தான்...

''கொஞ்சம் நில்லு... வயசானவ ஒருத்தியை நீ கலங்க வைக்கிறே... உன்னோட செய்கைகளோட வலி தாங்காம அவ துடிக்கிறா... அவளுக்காக நியாயம் கேட்க வந்திருக்கேன்...''

''அம்மாவை நான் எதுவும் சொல்லலே.''

''அதான் என்னோட கவலே... எதுவுமே பேசாம 'இக்னோர்' பண்ற அளவுக்கு நீ தயார்ப் படுத்தப்பட்டிருக்கே...''

''பேச்சு உங்களோட நிக்கட்டும்..., என்னே இதுல இழுக்க வேணாம்னு சொல்லுங்க...'' சுரத்தோடு மன்னி வெளிப்பட்டாள்.

''உன்னே யாரும் ஒண்ணும் சொல்லலே காயத்ரி... நீ போய்ப் புடவையை மாத்திக்கோ...'' பதறினான் அண்ணா...

நான் மெல்லச் சிரித்தேன்...

மன்னி அடிபட்ட பார்வையில் நிமிர்ந்தாள்... ''வரவர இந்த ஆத்துல மரியாதை குறைஞ்சு போச்சு...''

''அதைப் பேசத்தான் இன்னிக்கு நானும் வந்திருக்கேன்...''

''முரளி நீ சொல்ல வந்தது என்ன...''

''அம்மா மனசு கோணாம நடந்துக்கணும்...''

''மன்னிக்கணும்... யார் மனசு எப்பக் கோணும்னு பார்த்துண்டு உட்கார்றது என் வேலே இல்லே... வயசானவங்களும் கொஞ்சம் அனுசரிச்சு நடந்துக்கறதுல தப்பு இல்லே.''

''என்னது வயசானவ அனுசரிக்கணுமா! அம்மா எந்த விதத்துல ஒத்துப்போகலே?''

''ஏன், எல்லா விதத்துலேயும்... பிள்ளைக்குக் கல்யாணம் முடிஞ்சா ஓரளவுக்கு விட்டுக் கொடுக்கப் பழகிக்கணும்... அவனே நம்பி வந்த ஒரு பொண்ணுக்கு லைஃப் வேணாமா?''

''டேய் ராம், நான் கொஞ்சம் பேசலாமா? நான் எந்த விதத்துலடா உனக்குக் குறுக்கே வந்தேன். உன் சந்தோஷத்தைப் பெரிசா நினைச்சு எல்லாத்தையுமே விட்டுக் குடுத்தேனடா... உன்னேயே விட்டுக் குடுத்தப்புறமா வேறென்னடா பாக்கி இருக்கு? வரவர எங்கிட்ட பேச்சைக் கூடக் குறைச்சுண்டு, என்னைக் கொஞ்சம் கூட சட்டை செய்யாம, நான் நிக்கற இடத்துல நிக்காம... எப்படிடா மனசு பொறுக்கும்?''



''அம்மாவோட மரியாதையை யாரும் இங்கக் குறைக்கலே...'' மன்னி.

''குற்றமுள்ள நெஞ்சு குத்திறு சரி...''

''கேட்டுண்டு சும்மா இருக்கேளே.... உங்க தம்பி என்ன பேசுறார்னு பாருங்கோ.''

''முரளி ஸ்டாப் இட் இது அதிகம்...''

''அண்ணா ப்ளீஸ்... இப்ப பேசறது நானும் மன்னியும்... நீ இதுல வராத்தே... உனக்குச் சொந்தக் குரல் எப்பவுமே கிடையாது... டப்பிங், மன்னியோடது... லோ... கேட்டு வச்சுண்டு அப்புறமாப் பேச வா...''

அண்ணா மன்னியைப் பார்த்தான்...

அவளது உஷ்ணமான பார்வை என்ன சொல்லியதோ தெரியவில்லை...

''நான் காரணமில்லே'' - சீறிக் கொண்டு வந்தாள் மன்னி.

''காயத்ரி நீ பேசாம இரு... நான் பார்த்துக்கறேன்...'' — அண்ணா.

''இனிமே எதைப் பாக்கப் போறேன்? இங்க இருந்தா என் மரியாதை கெடும்... உங்க அம்மா, தம்பியோட சௌக்கியமா இருங்கோ... நான் எங்கேயாவது போறேன். நான் நேத்திக்கு வந்தவ... எனக்கென்ன உரிமை இருக்கு இந்த வீட்டுலே... நான் இப்பவே போறேன்...''

''நில்லு காயத்ரி... போக வேண்டியது நீதாணா... இல்லே...'' நிறுத்தி நிதானமாக என்னைப் பார்த்தான் அண்ணா...

பகீரென்றது எனக்கு...
மறுபடியும் மன்னிக்குத்தான் வெற்றி...
நாங்கள்தான் போக வேண்டும்...
இனிமேல் மரியாதை கெடும்...

'வெளியே போ...' என்பதை ஏறத்தாழப் பார்வையால் ஸ்பஷ்டமாகச் சொல்லி விட்டான் அண்ணா...

''அம்மா ரெடி பண்ணிக்கோ...''

அம்மா ஓசைப்படாமல் அழுதாள்...

''ஏன் அழறே...? உனக்கு விடுதலை... நிம்மதியா நீ எங்கூட இருக்கலாம்.... புறப்படு... முதுகெலும்பு இல்லாம, உன் பாவாடைல ஒளிஞ்சிருக்கிற ஆம்பளையோட மூஞ்சியில நீ முழிக்கிறதே பாவம்... உன் கருநிக்கு அது ஒப்புக்காது... வா போகலாம்...''

என் பேச்சோ...

அம்மாவின் கலங்கிய கண்களோ...

அண்ணாவைக் கரைக்கவில்லை...

அவன் கொஞ்சமும் வருத்தப்பட்டதாகத் தெரியவில்லை.

நாங்கள் புறப்பட முடிவெடுத்த சமயம்...

மன்னியின் உதட்டோரத்தில் ஒரு அரைச் சிரிப்பு தெரிந்தது...

''பார்த்தாயா?'' என்பது போலச் சவால் விடும் சிரிப்பு...

அம்மா பழையபடி தனது 'சென்டிமென்டல்' புலம்பல்களையெல்லாம் கொட்டி விட்டு வாசலில் இறங்கும் போது நான் தெருக்கோடியில் இருந்தேன்...

''சாதிச்சுட்டா பார்த்தியாடா முரளி... பொம்மனாட்டிக்குக் கண்ணீர் பெரிய அஸ்திரம்டா...''

''அப்ப நீயும் பொம்மனாட்டிதானேயம்மா... அதே அஸ்திரத்தை அண்ணாகிட்ட நீயேனம்மா உபயோகிக்கக்கூடாது?''

''நடக்காது முரளி... என் கண்ணீருக்கு அவன் ஒருவேளை கரைஞ்சா... அதைவிடப் பெரிய விஷயம் அவகிட்ட இருக்கு....அதை அவன்கிட்ட அவளால மட்டுந்தான் உபயோகிக்க முடியும்... 'அதுல' மயங்கின ஆண்கள் செயலிழந்து நிக்கறதால தான் பல குடும்பங்கள் சிரிப்பாச் சிரிக்கறதுடா முரளி...''

''புரியலேம்மா ''

''உனக்குன்னு ஒருத்தி வர்றச்சே புரியும்...''

''எனக்குன்னு யார் வந்தாலும் நீதாம்மா முதல்லே...''

''அதை அப்புறமாச் சொல்லு...''

''ஏம்மா என் மேலே உனக்கு நம்பிக்கை இல்லையா?''

''இருக்குடா ராஜா... ஆனா நீயும் ஆண் பிள்ளைதானே?''

''அதனால?''

''சரி வா... அப்ப அதைப் பார்த்துக்கலாம்... ''



## அருள்வாக்கு

தன் வேலையை இன்னொருத்தனிடம் விட்டுவிட்டு, 'தான் ஊராருக்குத் தொண்டு செய்கிறேன்' என்று போனால் அது பரிஹாசந்தான். Fraud (மோசடி) தான். தாயார், தகப்பனார், சகோதரர், பத்தினி, புத்திரர் இருந்தால் அவர்கள் ஆகியவர்களுக்குச் செய்ய வேண்டிய ட்யூட்டிகளைச் செய்யாமல் லோகத்துக்கு உபகாரம் செய்கிறேன் என்றால் அது 'ஹிபாக்ரிஸி' (போலி வேஷம்) தான். இப்படியெல்லாம் பண்ணி, வீட்டு மனுஷ்யாள் எடுத்துக் காட்டினால் கோபம் வருகிறது, எரிச்சல் வருகிறது என்றால் பரோபகாரத்தால் இவனுக்கு எந்த அபிவிருத்தியும் ஏற்படவில்லை என்றுதான் அர்த்தம். 'எல்லோரிடமும் அன்பாயிருக்கணும், மதுரமாய்ப் பழகணும்' என்பதுதான் தொண்டு செய்கிறவனுக்கு லக்ஷணம். பொதுத் தொண்டு என்பதற்காகவே வீட்டு மனுஷ்யர்களிடம் அன்பு போய், எரிந்து விழுந்து கொண்டிருக்கிறானென்றால் இவன் தொண்டு செய்து என்ன புண்ணியம்? இவனுக்கு என்ன சித்த சுத்தி ஏற்பட முடியும்? குளிக்கப் போய்ச் சேற்றைப் பூசிக் கொள்கிற மாதிரி பண்ணிக் கொள்ளக் கூடாது.

தன் லிமிடேஷனை எவனும் எப்போதும் உணர வேண்டும். மனுஷ்யராகப் பிறந்து விட்டோம். அதனால் நாம் பல இழுவில் கட்டுப்பட்டுத்தான் இருக்கிறோம். ஆசைகள், அவஸ்தைகள் பெரிசாய் இருக்கலாம். அவை நல்லதாகவும் இருக்கலாம். லோகத்துக்கு நல்லது பண்ணணும் என்றே ஆர்வமிருந்தாலும் நமக்கும் நம் குடும்பத்துக்கும் செய்தேயாக வேண்டும் என்ற நிர்ப்பந்தம் இருப்பதை உணர்ந்து இந்த ட்யூட்டிக்கு ஹானியில்லாமல் தான் லோக சேவை செய்ய வேண்டும்.

-ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராசார்ய சுவாமிகள்

# வேங்கை வனம்

முன்கதை சுருக்கம்:

மூன்றும் சங்க காலம்.

கானப்பேரெயில் (காளையார் கோயில்) எனும் வலிமை வாய்ந்த கோட்டையின் வேந்தன் வேங்கைமார்பன். அவன் தனது பெயருக்கேற்ப இரு வேங்கைகளை வளர்க்கிறான். அந்நாளைய தமிழகத்தின் மாவீரன். அவன் பாண்டிய மாமன்னர் உக்ரேப் பெருவழுதியின் புதல்வியான திருமேனியென்பாளின் அழகைக் கேள்விப்பட்டு அவளை மணக்க ஆசை கொள்கிறான்.

அதே அரண்மனையில் முறைப்பெண்ணான தியாகவல்லி வாழ்கிறாள். பேரழகியான அவள் தனது அத்தான் பாண்டியன் மகனை விரும்புவது கண்டு தனது ஒருதலைக் காதலைத் தியாகம் செய்துவிடுகிறாள்.

திருமேனியை மணம் பேசத் தூதுக்குழுவுடன் தானே புறப்படுகிறான் வேங்கைமார்பன். நேரில் அவளது அழகைக்காண வேண்டும் என்கிற துடிப்பு.

மதுரையை அடைந்த வேங்கைமார்பன், அரண்மனைக்குச் செல்லாது அப்போது நடைபெற்றுக் கொண்டிருந்த வைகைத் திருவிழாவைக் காணச் செல்ல, அங்கே ஓர் அழகியை முதலை வாயிலிருந்து காப்பாற்ற, அந்த அழகி இவனைக் காதலிக்க, வேங்கைமார்பனோ ''வேறு ஒருத்திக்கு இடம் தந்தாய் விட்டது, சகோதரி!'' என்கிறான். அவள் வேறு யாருமல்ல; வேங்கைமார்பன் வீரத்தைக் காதலித்து வந்த பாண்டிய குமாரி திருமேனிதான். வேறு ஒருத்தி என்ற சொல், 'தியாகவல்லி' தான் என்பதாகப் புரிந்து கொண்ட திருமேனி, ''நல்லது சகோதரா!'' என்று கூறிவிடுகிறாள். அவள் தான் பாண்டிய குமாரி என்பது வேங்கைமார்பனுக்குத் தெரியாது. விதி இப்படிக் குறுக்கிட்டு விடவே திருமணத் தூது முறிந்து விடுகிறது. திருமேனி, வேங்கைமார்பனை மணக்க மறுத்து விடுகிறாள்.

இதே கவலையால் வேங்கைமார்பன், திருமேனியைப் போலப் பொன்னால் சிலை செய்து மாலையிடத் தீர்மானிக்கிறான். தீர்மானத்தை நிறைவேற்றத் தியாகவல்லியே பாண்டிய நாடு நோக்கிப் புறப்பட்டு வருகிறாள். அவளுடன் அவளது அண்ணன் சேனாபதி காளிங்கனும் வருகிறான். காளிங்கனது எண்ணம் கானப்பேரான வேங்கைவனத்தைக் கவிழ்த்து விட வேண்டும் என்பது. காரணம் தங்கையை அரியணையில் அமர்த்த முடியாமல் போன கோபம்.

பாண்டிய நாடு வந்த இருவரும் பொற்சிலை செய்து ரகசியமாக அனுப்புகிறார்கள். திருமேனியும் தியாகவல்லியும் நட்புகொண்டு விடுகிறார்கள். சந்தர்ப்பம் கிடைக்கிற போதெல்லாம் தியாகவல்லி, வேங்கைமார்பன் புகழ்பாடித் திருமேனியை வழிக்குக் கொண்டுவர நினைக்கிறபோது, திருமேனிச்சிலைக்கு மாலையணிவித்து மனைவியாக்கிக் கொண்ட செய்தி மதுரையையடையவே, திருமேனிமேலும் சினம் கொண்டு, இப்போது வேங்கை மார்பனைப் பழிவாங்க வேண்டும் என்று தந்தையான பாண்டிய மாமன்னரைத் தூண்டுகிறாள்.

இந்நிலையில் வேங்கைமார்பன் திருமேனி யைக் கடத்திச் செல்வது என்று முடிவுசெய்து செயல்படுகிறான்.

இதே நேரத்தில், வேங்கை வனத்தில் வேங்கை மார்பன் மாலையணிவித்த





பொதி சிலையைக் கடத்தி வருமாறு காளிங்கனையும் வேறு வீரர்களையும் ஏவுகிறார் பாண்டிய மாமன்னர் உக்கிரப் பெருவழுதி.

## அத்தியாயம் 15

## விதியின் விசித்திரக் கதை

**ஐ**ந்து நாழிகைப் போதுக்குள் வேங்கை வனமாம் காரைப்பேரெயிலை நோக்கி ஒரு குட்டிச் சைன்னியமே போன்று பாண்டிய வீரர்கள் புறப்பட்டனர்.

மாமன்னர் உக்கிரபெருவழுதிப் பாண்டியர் உத்தரவுப்படி, ஏறுதி காளிங்கனே அந்தச் சின்னஞ்சிறு சைன்னியத்துக்குத் தலைமை பூண்டான். உடன் சென்ற புரவிப் படைத்தளபதி இளங்கோவேளானுக்கு இட்டிருந்த பணி...

காளிங்கன் தலை. அதன் மீது இளங்கோவேளான் கவனம் வேலியிட்டிருக்க வேண்டும். ஒன்று, திருமேனிச் சிலை; அல்லது காளிங்கன் தலை.

ஓ... பயங்கரம்...

காளிங்கனுக்கும் இளங்கோவேளானுக்கும் கடுமையான எச்சரிக்கைகள் நிறைந்த ஆணைகளைப் பணித்து விட்டு அரண்மனையுள் பிரவேசித்தார் மாமன்னர் உக்கிரப் பெருவழுதிப் பாண்டியர்.

மேலே இரண்டாம் மாடத்தில் நின்ற வண்ணம் பாண்டி மாதேவியும், திருமேனியும் தியாகவல்லியும் பார்வையிட்ட வண்ணம் இருந்தனர்.

அந்தப் பெரிய ராஜபாதையில் புழுதியைக் கிளப்பிக் கொண்டு செல்லும் சின்ன சைன்னியத்தைக் கண்டு மருண்டுபோன தியாகவல்லியின் நெஞ்சில், புழுதி மண்டிவிட்டது.

இந்நேரம் வேங்கைமார்பன், மதுரையுள் பிரவேசித்துக் கொண்டிருக்க வேண்டும்; அல்லது மதுரையை அடைந்து எங்கேனும் ஓய்வு கண்டிருக்க வேண்டும்.

**கோவி. மணிசேகரன்**

விதியின் இந்தத் திசைத் திருப்பம் எந்தத் தலையைப் பதம் பார்க்கப் போகிறதோ?

அன்னையின் தலை...

மீனாட்சி! அங்கயற்கண்ணி! அன்னையின் தலை சாமான்யமானது...

எனது மன்னனின் தலை சரித்திரத்துக்குரியது: அதனைக் காப்பாற்று!

பாண்டிமாதேவி அந்தப்புரம் நாடிச் சென்று விட்டாள்.

''நான் வீட்டுக்குப் போகிறேன் இளவரசி.''

''அங்கே போய் என்ன செய்யப் போகிறாய்? அண்ணனும் இல்லை; என்னுடனேயே இருக்கலாமே!''

திருமேனி இவ்வாறு கூறியதும்....

பொருள் நிறைந்த புன்னகையுடன் கன்னத்தைத் தடவி விட்டுக் கொள்கிறாள் தியாகவல்லி.

அன்று, 'பளார்' என்றறைந்த ஓசை, திருமேனியின் செவிகளில் சன்னமாய்ப் பாய்ந்து நினைவுபடுத்துகிறது.

அந்தப் பிரம்மாண்டமான அரண்மனையும், அதனுள் பாய்ந்த கதிரொளியால் பிரகாசம் கண்ட சிற்பச் சித்திரங்களும் கலகலவென்று சிரிப்பன போல ஒரு பிரமை....

''உணர்ச்சிவயப்பட்டு விட்டேன் தியாகவல்லி!''

''இனியும் உணர்ச்சிவயப்படக் கூடாதே என்பதற்காகத்தான் நான் வீடு நோக்கிச் செல்ல விழைவது.''

திருமேனியின் தித்திக்கும் கண்கள் திருத்தம் புரியாத் திணறலுடன் அலமருகின்றன.

''நிலாமரபின் நிவேதனமே! வேங்கைமார்பன் செய்தது ராஜ நியாயப்படி தவறுதான். தண்டனைக்குரியதுதான்; மறைக்கவில்லை; மறுக்கவில்லை. ஆனாலும் மீண்டும் நிவேதிப்பேன். ஔவைபிராட்டியார் உங்கள் நெஞ்சில் எழுதிய ஔஷதம் போன்ற வரிகளை அடிக்கடி நினைவுபடுத்துவீர்கள் அது: *'எவ்வழி நல்லவர் ஆடவர் அவ்வழி நல்லை வாழிய நிலனே' — இந்த வரிகள் எங்கள் வேங்கைவனத்துக்கும் பொருந்துவதாகும்.''

''தியாகவல்லி...''

''கோபம் வேண்டாம் இளவரசி எனது இன்னொரு கன்னம் தாங்காது. நான் வருகிறேன்.''

தியாகவல்லி வேகமாகப் புறப்பட....

என்ன நினைத்தாளோ திருமேனி, ''தியாகவல்லி உனது நிலப்பற்றையும், தலைவன் பற்றையும் கண்டு வியந்து உன்னைப் பொறுத்தருளுகிறேன். மாலை வீட்டில் தானே இருப்பாய்?'' என்றாள்.

ஐயய்யோ! மாலையிலா?

வேங்கைமார்பனைச் சந்திக்க ஏற்பாடு செய்ய வேண்டுமே...

எண்ணிப் பார்க்கிறாள் தியாகவல்லி.

''ஏன் தயக்கம் தியாகவல்லி! உன்னை என்றால் புரிந்து கொள்ளவே முடியவில்லை. உன்னிடம் நிறைய பேச வேண்டும். இரவு பூத்து ஒரு நாழிகை கழித்து வருகிறேன். இன்றைய நடுநிசி பூஜைக்கு நாம் மீனாட்சியம்மன் ஆலயத்துக்குச் செல்லுகிறோம். வழிபடுகிறோம்.''

தியாகவல்லி ஆணையை ஏற்றுக் கொண்டு விடைபெற்றாள்.

நிலவுக்கு ஏணியமைக்க முடியாவிட்டாலும் நிலத்துக்கு வெளிச்சம் பரப்பி, இரவுக்குத் தாலாட்டுப் பாட எங்களால் முடியும் என்பது போல, மணிவிளக்குகள் கண்விழித்து, மலர்களில் மகரந்தக்கன்னைத எழுதி, மன்மதனை ஆராதிக்கின்றன.

இரவு வந்து விட்டதாம்.

வெள்ளைப் பூக்களுக்குத் தான் எத்தனை தூயதான ஆனந்தம்?

தனது வீட்டின் வாசற்படியில் அமர்ந்து மதுரைத் தலைநகரையும் வானில் மதுரமாகப் பவனி வரும் நிலவையும் கவனிக்கிறாள் தியாகவல்லி.

நேரம், நாழிகைகளைப் பிழியப் பிழிய, அவளது நேத்திரங்கள் வேங்கைமார்பனைக் காணாது தோத்திரங்கள் இசைக்கின்றன.

உடன் அண்ணன் ஞாபகமும் அவளுள் மோதுகிறது...

இந்நேரம்...

வேங்கைவனத்துப் பாதையின் மூன்றில் ஒரு பங்கைக் கடந்திருப்பார்...

எப்போர்ப்பட்ட கோட்டை காணப் பேரெயில் சூழ்ந்த கோட்டை! தமது சிந்தனை பலத்துக்கு யவனர் துணைகொண்டு விசித்திரப் பொறிகளையும் வியத்தரு மதில்களையும் விளங்கிக் கொள்ள முடியாத சுரங்கங்களையும் கொண்டதாயிற்றே வேங்கைவனம். அதிலிருந்து திருமேனிச் சிலையைக் கடத்துவதாவது?

சிலை தப்புமோ? தலை தப்புமோ?

எங்கோ பலவீனமான குளம்படி ஓசை கேட்கிறது...

ஆவலை அடிவயிற்றிலிருந்து இளப்பிக் கவனிக்கிறாள் தியாகவல்லி.

யாரோ குதிரை மீது மெல்ல வருகிறார்கள். ஏதோ துன்பியலைத் தெரிவிக்க வருகிற குதிரை மாதிரி தெரிகிறதே!

வேங்கைமார்பன் போலத் தெரியவில்லையே...

எழுந்து உள்ளே சென்று மறைந்து கவனிக்கிறாள்.

வாசலுக்கு வந்து நின்ற குதிரையிலிருந்து பசுபதி இறங்கினான்.

---

* நாடா கொன்றோ காடா கொன்றோ
அவலா கொன்றோ மிசையா கொன்றோ
எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே!

ஔவை பெருமாட்டி பாடியதன் பொருள்:
ஏ, நிலமே நீ நிலமானாலும் காடானாலும் மேடானாலும் பள்ளமானாலும் எவ்வாறாயினும், எந்த இடத்தில் ஆண்மக்கள் கற்புடையவர்களாக இருக்கிறார்களோ அந்த இடமே—நிலமே வாழ்ந்து தந்திருகிறது. (புறநானூறு—187)

இவள் முதல் அவ்வை. ஏனைய அவ்வைகளைப் பற்றிய ஆராய்ச்சி இங்கு தேவையில்லை.

குதிரையை மரங்களடர்ந்த பகுதிக்குத் தட்டியனுப்பி விட்டு உள்ளே நுழைந்தான் பசுபதி.

''என்ன பசுபதி? ஏதோ சோகத்தைத் தெரிவிப்பது போலக் குதிரையில் மெல்ல வந்தாய்? என்ன நடந்தது? எங்கே வேங்கை வேந்தர்?''

நெஞ்சுத் துடிப்பால் சொற்கள் தாறு மாறாக இடிபடுகின்றன.

''வீதியை விழிக்கச் செய்யக் கூடாது என்று மெல்ல வந்தேன் இளவரசி!''

''சரி, வேந்தர் எங்கே?''

''பத்திரமாக இருக்கிறார்.''

''அவரைப் பத்திரப்படுத்த நீ யார்? நான் யார்? எங்கே அவர்?''

''இதோ இருக்கிறேன்.''

—ஓர் அன்மை நிரம்பிய கம்பீரக் குரல். வீட்டினுள்ளிருந்து ஒலிக்கக்கேட்டு, பிரமித்துத் திரும்பிய தியாகவல்லி, அதிர்ச்சியில் புரண்டு ஆச்சரியத்தில் நிமிர்ந்து நின்றாள்.

உள்ளே...

தாடி மீசையுடன் ஒரு வறிய ஏழைக் குடிமகன் போல நின்றிருந்தான் வேங்கை மார்பன். காதலைப் பொறுத்தமட்டில் அவன் வறிஞனாகி விட்டவன்தானே?

''தியாகவல்லி! நேர்வழி பலவற்றுக்குப் பயன்படுவதில்லை. பல வீதிகளைக் கால் நடையாகக் கடந்து, நாய்க் குரைப்புக்கு ஆளாகி, உனது வீட்டுத் தோட்டத்து மதிலைக் கடக்க வேண்டியதாய் விட்டது. பெருமதில் கண்ட இந்த வேங்கைக்கு இச்சிறுமதில் பூந்தோட்டத்து வேலிபோல. போய்க் கதவை மூடித் தாழிடு.''

தியாகவல்லி; மனத்தின் பாதி பாகம் நிறைக்க மகிழ்வுடன் ஓடிச் சென்று கதவை மூடித் தாழிட்டாள்.

---

## 44 ஆண்டுகளாக பென்ஷன்!

44 ஆண்டுகளாக ஒருவர் ஓய்வூதியம் (Pension) பெற்று வருகிறார். அவர் யார் தெரியுமா? திரு. எம். ராஜுகோபாலய்யர்.

கடந்த 30.6.84 அம் தேதியன்று அகில இந்திய பென்ஷனர் சங்கச் சார்பில் இவருக்குப் பொன்னாடை போர்த்தப்பட்டது.

தகவல்:
— அரக்கோணம் சங்கரபாண்டியன்.''




''பசுபதி! நீ இந்தச் சாளரத்து ஒதுக்கில் நின்றே கவனிக்கிறாய். யார் வந்தாலும் கதவைத் திறவாதே! என்னிடம் வந்து சொல்.''

பசுபதி உத்தரவை ஏற்றான்.

சில விளக்குகள் ஓய்வு பெற, கண்களை மூடிக் கொண்டன.

புழக்கடைத் தனியறை சென்ற இருவரும் தரையிலேயே அமர்ந்து கொண்டனர்.

காதல், தரையில் நுரையிட்டுத்தானே கோபுரத்தில் பொங்கி வழிகிறது...

சிலர் கோபுரத்துக்குப் பாலாபிஷேகம் செய்கிறார்கள்; பலர் இடிபட்டுப் புதைந்து போகிறார்கள்....

தியாகவல்லியைப் பொறுத்தமட்டில், இரண்டாம் வரிக்குச் சொந்தக்காரியாகி விட்டவள். எனவேதான் அவள் முதலில் தரையில் அமர்ந்தாள்.

''வல்லி! நிரம்பவும் இளைத்து விட்டாய்'' என்றான் வேங்கை மார்பன்.

அவள் குளியமாய்ச் சிரிக்கிறாள்.

''வேங்கை மட்டும் எப்படி இருக்கிறதாம்?''

''அதன் காரணம் வேறு!''

''இதன் காரணமும் வேறு. போகட்டும் வேங்கைகள் நலமா?''

''இன்னும் 'தியாகவல்லி' என்றுதான் அவை உறுமிக் கொண்டிருக்கின்றன. இப்போது சொரூபத்தில் ஒரு புதிய' முகம் பிரத்யட்சமாகி விடவே அதனுடன் பரிச்சயம் கொண்டு சுற்றிச் சுற்றி வருகின்றன. நல்லது; நடந்தது குறித்துப் பேசுவோம். விளக்கமாகச் சொல்.''

''இப்போது எதையும் பேச நேரமில்லை. பிறகு பேசிக் கொள்ளலாம். இன்னும் சற்று நேரத்தில் திருமேனி இங்கே வருவாள். மீனாட்சியம்மன் கோவிலுக்குச் சென்று நடுநிசி வழிபாடு செய்யப் போகிறாள் இளவரசி.''

''நடுநிசி வழிபாடா?''

''அந்த நேரத்தில் கேட்ட வரம் பலிக்குமாம்.''

''என்ன வரம்?''

''வேங்கை வரம்''

''ஓ... என்னை அவ்வளவுக்கு அவள் நேசிக்கிறாளா?''

''இல்லை; அவ்வளவுக்கு தூஷிக்கிறாள். உங்களை உயிருடன் பிடித்து வந்து பழி வாங்க வரம் கேட்கப் போகிறாள்.''

''தியாகவல்லி...''

''அதிர்ச்சியடைய வேண்டாம். எல்லாம் விதியின் திருப்பம். அந்தக் கதையை வேங்கைவனத்தில் சொல்வேன். இப்போது கேட்க வேண்டிய அதிமுக்கியமான கதை, அன்னூர் காளிங்கனும் புரவித் தளபதி இளங்கோவேளாளும் ஒரு குட்டிச் சைன்னியத்துடன் வேங்கைவனம் நோக்கிச் சென்றிருக்கிறார்கள். அங்கிருக்கும் திருமேனிச் சிலையைக் கடத்தி வர வேண்டும் என்பது பாண்டிய மாமன்னரின் கடுமையான ஆணை.''

துடித்தெழுந்து நின்றான் வேங்கை மார்பன். அவனது நெஞ்சு உறுமிக்கொண்டிருந்தது.

# வைட்டமின்கள்



திடம்பும்
உடல்
ஆரோக்கியமும்
பெற
சில துளிகளே
தேவை



சிலையைக் கடத்தி வரச் சைன்னியமா?

இயாகவல்லியும் எழுந்து நின்றாள்.

எதற்காகவோ பனித்த அவளது கண்ணீரை அதற்காகவே இருந்த முந்தானையால் துடைத்துக் கொள்கிறாள்.

''பிரபோ நேரமாகிறது. எந்த நேரத்திலும் இளவரசி வந்து விடுவாள். முடிவைச் சொல்லுங்கள்.''

வெறிகொண்ட வேங்கை போல் தலையை ஒருக்களித்துக் கவனிக்கிறான் வேங்கை மார்பன்.

அந்த அறையில் ஒளியுமிழ்ந்து கொண்டிருந்த ஒற்றை விளக்கு, அவனது சிவந்த கண்களில் இரட்டையாகி மேலும் சிவப்பாக்கியது.

''என்ன முடிவு? திருமேனியைக் கடத்த வந்த முடிவில் எந்த வித மாற்றமும் இடையாது. மேலும் இப்போது அவளே இங்கு வந்து அகப்பட்டுக் கொள்ளப் போகிறாள். இதுவும் விதி எழுதும் விசித்திரக் கதைதான்!''

''அது சரி சிலையைக் கடத்தச் சென்றிருக்கிறார்களே!''

அலட்சியமாகச் சிரித்துக் கொள்கிறான் வேங்கைமார்பன்.

''முடிகிற காரியமா இயாகவல்லி? பிரம்மப்பிரயத்தனம். அறுபது நாழிகையும் வேங்கைகள் காவல் புரிகின்றன.''

''இரண்டு அம்புகளுக்குத் தாங்குமா?''

''அம்பைத் தொடுவதற்குள், தொடுபவனின் முதுகுக் கம்பு முறிந்து விடும். வேங்கைவனமா? இல்லை பாண்டியனின் வேடிக்கைவனமா? அதுகுறித்துக் கவலை வேண்டாம். திருமேனியைக் கடத்துவது குறித்து நீ எவ்வாறு ஆலோசித்து வைத்து இருக்கிறாய்? அதை முதலில் சொல்.''

''இன்றே கடத்த வேண்டுமா, பிரபோ?''

இது ஒரு கேள்வியா என்பது போல நோக்குகிறான் வேங்கைமார்பன்.

வீறுகொண்ட கம்பீரத்துள் விநயமான புன்முறுவலைப் புதைத்து, பேறு கொண்ட பேரெயில் மார்பன் பிறை நகை புரிகிறான்.

''இயாகவல்லி சீக்கிரம் ஆலோசித்து ஒரு முடிவைச் சொல். விடிவதற்குள் நாம் வேங்கை வனத்தில் இருக்க வேண்டும். சிலையைக் கடத்த வந்தவர்களுடன் சித்து விளையாட வேண்டும்.''

''இப்போது நாம் முக்கியமாகச் செய்ய வேண்டியது...''

இயாகவல்லி பேச்சை ஆரம்பித்ததுமே வாசலில் பல்லக்கு வந்து நின்ற ஆரவம் கேட்டது.

தொடர்ந்து பகபதி, வியர்த்து வெலவெலத்து ஓடிவந்து சொன்ன செய்தி:

''பாண்டிய இளவரசியார் வந்திருக்கிறார்கள்.''

வேங்கைமாச்பன் தோளங்களில் சிறகுகள் முளைத்தன.

ஆனால், இயாகவல்லியின் கை,கால்களோ விறகுகளாயின.

(தொடரும்)



ஜனவரி — 20 — 1982

ஹனிமூனுக்கு அப்பா பெங்களூரைச் சிபாரிசு செய்து டிக்கெட் வாங்கிக் கொடுத்து அனுப்பி விட்டார்.

ராஜாராமன் நேராய் ஹோட்டலுக்கு ஆட்டோவை விடச் சொன்னான். அறையில் நுழைந்ததும் சிகரெட் பற்றவைத்தான். சிகரெட் பிடித்துக் கொண்டே பல் தேய்த்தான். மணி அடித்து ரூம் சர்வீஸைக் கூப்பிட்டு டிஃபனுக்கு ஆர்டர் பண்ணினான்.

அவளுக்குத் தோசையில் மசாலா வைத்தால் பிடிக்காது. இருந்தாலும் சொன்னால் அவன் திட்டுவான் என்ற பயம் இருந்தது.

ஐந்து நாட்களில் அவன் நிறையத் திட்டியிருந்தான்.

நிறைய கதைகளில் படித்து நிறையகனவுகளைக் கண்டு நிறைய தூக்கங்களை விரயம் செய்தது அநாவசியம் என்று தோன்றியது.

''இப்படிக் குதிரை மாதிரி தலையை திமிர்த்திக்கிட்டு நடக்காதேன்னு சொல்லியிருக்கேன்ல? பொம்பிளைக்கான பயமோ, அடக்கமோ ஒங்கிட்ட இல்லியே...''

அதனாலேயே அவனை முன் நடக்கவிட்டு இரண்டடி தள்ளி நடக்க வேண்டியிருந்தது. அவனுடைய உயரத்திற்கும், இடத்திற்கும் முன்னால் அவள் மரப்பாச்சி மாதிரி தோன்றினால் அதற்கு அவள் என்ன செய்ய முடியும்? குள்ளமாய்க் கறுப்பாய் இருந்தாள். 'மாப்பிள்ளை அப்படியே கிருஷ்ண விக்கிரகம் மாதிரிடி நாராயணி!''-அம்மா சிலாகித்துக் கொண்டதை நினைத்தாள். வேதனைப் புன்னகை படர்ந்தது.

அவளுக்கு அவன் பார்வையைப் பார்த்தாலே பயமாய் இருந்தது. உருவி விடுகிற பார்வை. அவன் பார்வை போன இடங்களைப் பற்றிச் சென்று பார்த்தால் அருவெறுப்பாக இருந்தது. இப்படிக் கூட ஒருத்தருக்குப் பார்வை அமையுமா என்ன?

டிஃபன் சாப்பிட்டு விட்டு ஜன்னல் கதவுகளை எல்லாம் சாத்தினான். தட்டுகளை எடுத்துப் போக வந்த காக்கிச் சட்டை ரூம் பாய் முகத்தில் ஏளனம் இருந்தது. நாராயணி படுக்கையிலேயே முருங்கைக் கம்பளி மாதிரி சுருட்டிக் கொண்டாள்.

''எங்கேயும் வெளிய போக வேண்டாமா?'' என்று சன்னமாகக் கேட்டாள்.

''எதுக்கு வெளியே போகணும்?'' என்று கேட்டுவிட்டு ராஜாராமன் நாராயணியின் அருகே நெருங்கினான். புலி எதிர்ப்பட்ட மானின் மிரட்சி அவள் கண்களில்.

அம்மா 'பயப்படாதே, பயப்படாதே' என்று மந்திரம் சொன்ன போதும் கூட அந்த பயம் இருந்தது. அவனது மூர்க்கத்தனத்தில் அவளுக்கு உடம்பெங்கும் வலித்தது. எழுந்து உட்கார நிறைய க்ளுகோஸ் சாப்பிட வேண்டும் போல இருந்தது.

''எழுந்துட்டியா?''

நாராயணி திடுக்கிட்டாள். அவள் முகத்தருகில் ஃபானை மறைத்துக் கொண்டு



ராதா வசுமித்திரன்

## அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி

## ரூ.1000/- முதல் பரிசு பெறும் சிறுகதை

ராஜாராமனின் முகம், 'அந்த 'எமூர்துட்டியா'வின் ஒவ்வொரு எழுத்திலும் வெறி தடவியிருந்தது.

''வேண்டாங்க... ஐயோ வேண்டாங்க.''

''என்னடி வேண்டாம்!'' கேட்டுவிட்டு உக்கிரமாக அவன் தோள்பட்டையைப் பிடித்து நெறித்து அவன் குனிந்தான்.

**ஜனவரி 22 — 1982**

**நா**ராயணி கண்களைத் திறந்த போது வாசலில் அழுத்தப்பட்ட பஸ்ஸர் சத்தம் சுவர்க்கோழி மாதிரி விடாமல் க்ரீச்சிட்டுக் கொண்டிருந்தது.

எழுந்தாள். துவண்ட நடையுடன் சென்று திறந்தாள்.

சூம் பாய்!

''காப்பி கொண்டாரவா?'' என்றான் இளித்துக் கொண்டு. தமிழில் கன்னடம் வீசிற்று.

ராஜாராமனை எதற்கும் ஒரு வார்த்தை கேட்கலாம் என்று திரும்பினாள். கட்டிலின் வெறுமை தாக்கிற்று. பாத்ரூம் கதவைப் பார்த்தாள். அலிபாபா குகை வாசல்மாதிரி ஆவென்று திறந்திருந்தது.

சிகரெட் வாங்கப் போயிருப்பான்.

''கொண்டா...'' என்றாள் சூம்பாயிடம். கதவைச் சார்த்தி விட்டுக் கட்டிலுக்கு வந்தாள்.

காஃபி வந்தது. ராஜாராமன் வரவில்லை.

சர்க்கரை அதிகமாயிருந்த போதும், இரண்டு காப்பிசளையும் குடித்தாள். கதவைத் தாள் போட்டுக் கொண்டு நிர்ப்பயமாய் நின்று கொண்டு குடித்தாள். கட்டுவிரல் பருமனுக்குத் தாலிக்கயிறு கழுத்தை நெருடியது. அதன் முனையில் ஊசலாடிய மாங்கல்யம் மார்பின் ஓரத்தில் பட்டது. காயம் வலித்தது.

ராஜாராமன் வராமலேயே ராத்திரி வந்தது. நிறைய கவலைப்பட்டாள். கல்யாணத்திற்கு முன்னால் கவலைப்படத் தெரியாமல் இருந்தது தப்பு என்று புரிந்தது.

மறுபடியும் பஸ்ஸரின் சுவர்க்கோழி க்ரீச்.

''ஹி... ஹி... ''எதுவும் வேணும்!''

''அவர் இல்லே...?''

நாராயணி கதவை அறைந்து சாத்தினாள். ராஜாராமன் வந்து விடுவான் என்ற நம்பிக்கையோடு அசதியாய்த் தூங்கிப் போனாள்.

ராஜாராமன் வரவேயில்லை.

**ஜனவரி—23—1982**

**ரா**ஜாராமனுக்கு என்னாயிற்று? குழந்

தையா என்ன, வழியைத் தொலைத்துவிட்டு விழித்துக் கொண்டு நிற்பதற்கு?

கண்களின் ஏரிகள் திறந்து கொண்டன. பஸ்ஸர் அடித்தால் பயமாய் இருந்தது.

''அவர் வரலேம்மா...?''

''வேற யாரையாவது எதிர்பார்க்கறீங்களாம்மா...?''

''சாப்பாடு கொண்டாரவா...?''

குளிக்காமலேயே உடம்பு நனைந்து போகிற வரைக்கும் அழுதாள். மறுபடி அழுதாள். மறுபடி மறுபடி அழுதாள்.

**ஜனவரி—24—1982**

'வீட்டை விட்டு ஓடிக்கிடி வந்துட்டியா?'

'புருஷன்னு சொல்றே... ஆளு எங்கம்மா?'

'ஹோட்டல் கணக்கை செட்டில் பண்ணலை துட்டு இல்லியா... நகையெல்லாம் புருஷன்காரனே எடுத்துப் போயிட்டானா... நான் போலீஸுக்குத் தான் போக வேண்டியிருக்கும்... ஆமா...'

'அட... எனக்கு உன் தாலி கீலெல்லாம் வேண்டாம்மா... அப்பாவா... தந்தியா... திருக்காட்டுப்பள்ளியா...? அது வேற, தண்டச் செலவா... ம்... குடுக்கறேன்... என் தலையெழுத்து...'

**ஜனவரி—26—1982**

அப்பா மார்பில் விழுந்து அந்தப் பரந்த மார்பைக் குத்திக் குத்தி நாராயணி நீண்ட நேரம் அழுததை அந்த ஹோட்டல் ரிசப்ஷனில் இருந்த அத்தனை பேரும் ஒரு சினிமா ஷூட்டிங்கைப் பார்க்கிற ஆர்வத்தோடு பார்த்தார்கள்.

/ **ஏப்ரல்—18—1983**

வீடு அமர்க்களப்பட்டது. நாராயணி மட்டும் பயந்திருந்தாள். ஒரு பதினைந்து மாதம் இடையில் கிடைத்த சுதந்திரம் பறி போகப் போகிறதே என்ற பயம்.

---

''எங்கப்பா மாதிரியே நானும் ஒரு எழுத்தாளராகணும்னு ஆசைப்படறேன்!''

''உங்கப்பா ஒரு எழுத்தாளரா?''

''ம்ஹூம்... எழுத்தாளர் ஆக ஆசைப்படுகிறவர்!''

—எம். அசோக்ராஜா.



ராஜாராமனிடமிருந்து கடிதம் வந்திருந்தது. அன்று மாலை வந்து நாராயணியை அழைத்துப் போவதாக.

நாராயணி வெருண்டு போய், ''என்ன எழவுக்குன்னு இப்ப இவ்வளவு அமர்க்களம் பண்றே...'' என்று கேட்டதை அம்மா பொருட்படுத்தவில்லை. மணக்க மணக்கக் காப்பி டிகாக்ஷனை இறக்கினாள். கடலை மாவைக் கரைத்தாள். வில்லை வில்லையாக மலபார் வெங்காயத்தை அரிந்தாள். முன் ஜாக்கிரதையாக வாழைக்காயை நீளவாக்கில் வெட்டி வெட்டித் தண்ணீரில் கழுவி அப்பாவின் பழைய மல்வேட்டியில் போட்டு உலர வைத்தாள். ரவையைப் பொன்போல வறுத்துக் கொண்டாள். கேசரிக்கு என்றாள்.

''ஓம் மாப்பிள்ளை ரொம்ப உத்தம சிகாமணி... பதினைஞ்சு மாசம் முன்னாலே பெங்களூர்ல காணாமப் போனவர்... வரா ராம் திரும்பி... அதுக்கு இத்தனை ஆர்ப்பாட்டம்... வெக்கமாயில்லேம்மா உங்களுக்கெல்லாம்...'' நாராயணிக்குக் கோபத்தில் மூச்சிரைத்தது.

''இந்த வாய் தாண்டி உன்னை இப்படிக் கொண்டு வந்து நிறுத்தியிருக்கு... ஆம்பிளைங்களுக்கு ஆயிரம் கஷ்டம் இருக்கும்... நாம தான் பொறுத்துப் போகணும்...''

வெளியில் திடீரென்று இரைச்சலாயிற்று.

''அக்கா... அக்கா... அத்திம்பேர்... அத்திம்பேர் வந்தாச்சு'' என்று மூச்சிரைக்க எதிரில் வந்து நின்றான் கோபு.

அம்மாவும், அப்பாவும் கஷ்டப்பட்டு மாப்பிள்ளைக்கு என்று ரேழி அறையை ஒழித்துக் கொடுத்திருந்தார்கள். சிம்னி விளக்கு 'புகக்' 'புகக்' என்று தீ நாக்கை நீட்டி நீட்டி எரித்துக் கொண்டிருந்தது.

''இங்கே வாடி...'' என்றான் ராஜாராமன் அதட்டலாக.

''வெளிய யாரும் தூங்கலை...'' என்றாள் நாராயணி, முனகலாய்.

''யாரு தூங்கினா என்ன, முழிச்சிட்டிருந்தா என்ன? வாடின்னா வரணும்...''

மறுத்தால் உதைப்பானோ என்று பயம் வந்தது.

''என்ன...?'' என்றாள் பக்கத்தில் நெருங்கி.

''மெத்தை மாத்திரம் இருந்தால் போதுமா... கட்டில் வாங்கிப் போடறதுக்கென்னக் கேடாம்...?'' என்று கேட்டுக் கொண்டே அவள் கைகளைப்பற்றி இழுத்தான்

''வேண்டாங்க... அசிங்கமா இருக்கு...''

''எதுடி அசிங்கம்... நீ என்ன யார் கிட்டேயோவா படுத்திருக்கே? புருஷன் கிட்டதானே...?'' என்று மூர்க்கத்தனமாய் அணுகினான் அவன் பிடிவாதமாய் மறுக்க, சிகரெட் பற்ற வைத்தான். ஒரு எறும்பு, இரண்டு எறும்பு என்று ஆயிரம் எறும்புகள் ஒரே சமயத்தில் ஒரே இடத்தில் வாய் கவ்விய மாதிரி எரிச்சல் உண்டாக 'ஹம்மா' என்று முனகினாள்.

''கத்தாதேடி...'' என்று நறநறத்தான். அணைந்து போன சிகரெட்டை மறுபடி பற்ற வைத்து மறுபடி சுட்டான். ''இனிமே பிகு பண்ணிக்க மாட்டியே...''

ஏப்ரல்—19—1983

அப்பா அதிகாலையில் எழுந்து கந்தர் சஷ்டிக் கவசம் சொல்லிக் கொண்டிருந்தார். தூங்காமல் விழித்திருந்த நாராயணிக்குக் கேட்டது. ராஜாராமனின் நீளமான குறட்டை ஒலிகளைக் கலைக்கப் பயந்து கொண்டு மெதுவாகக் கதவைத் திறந்து வெளியே வந்தாள்.

"ரொம்ப சீக்கிரமா எழுந்துட்டே?" என்றார் அப்பா.

"ஆமாம்ப்பா..."

"இப்ப எங்க கிளம்பிட்டே?"

"குளிக்கப் போறேன்... ஆத்துக்கு..."

"பாத்துப் போம்மா..."

நாராயணி வீடு திரும்பும் பொழுது, அப்பா முகத்தில் நிறைய அசட்டுக் களையுடன் சிரித்துக் கொண்டிருந்தார். ராஜாராமன் எதிரில் கால்மேல் கால் போட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்தான்.

"ஆமாம் சார்... எனக்கும் என் மொதலாளிக்கும் சண்டை... என் புத்திசாலித்தனத்துக்கு அவன் கீழே வேலை செய்ய மனசு ஒப்பலை... இந்த வேலை இல்லேன்னு போறது... சொந்தமா பிஸினஸ் பண்ணலாம்னு இருக்கேன். சிவில் இன்ஜினியராச்சே, சும்மாவா? ஒரு கன்ஸல்டன்ஸி ஆரம்பிச்சா ஓஹோன்னு வந்து பணம் கொட்டும்... ஒரு டென் தவுசண்ட் ஷார்ட்டா இருக்கு... நீங்க ஒண்ணும் கேஷாத் தர வேணாம்... ப்ராமிஸரி நோட்டுல கையெழுத்து போட்டுத்தரேன்."

சிகரெட் புகையை மெல்ல இழுத்துவிட்டான்.

"அதுக்கென்ன ஏற்பாடு பண்ணிட்டாப் போறது மாப்பிள்ளை... ஆனா கையோட நாராயணியைக் கூட்டிக்கிட்டுப் போயிட நீங்க இல்லையா...? பெங்களூர் விவகாரம் மாதிரி ஆயிடாதே...?"

"அவ ஒரு முட்டாள். பெங்களூர்ல அவகிட்ட சொல்லிட்டுத் தானே போனேன்? அந்த ஹோட்டல் ஓனர் என் ஃப்ரெண்டு... ஹாசன்ல எனக்குத் திடீர்னு ஒரு வேலை... டிரங்கால் வந்தது... இவகிட்ட பைசாகூட சேக்காதேன்னு சொல்லிட்டுக் கிளம்பிட்டேன்... அஞ்சாவது நாள் திரும்பி வந்து பார்த்தா கலாட்டா நடந்து போச்சுன்னு தெரிஞ்சுது... நாராயணி மேல கோபம் வருமா வராதா? அந்த வீம்பு தான் பதினஞ்சு மாசம் இந்தப் பக்கம் திரும்பிப் பார்க்க விடலை... இப்ப மனசு கேக்காமத் தான் பொறப்பட்டு வந்திருக்கேன்... நாராயணியைக் கையோட கூட்டிட்டுப் போகத் தான் போறேன்."

"நாராயணி... உனக்கு விடிவு காலம் பொறந்தாச்சம்மா... என்னையும் இனிமே இந்த ஊர்ப் பசங்க கண்ட கேள்வி கேக்க மாட்டான், பாரு..." என்றார் அப்பா.

மே—20—1983

"என்னடி...?" என்றாள் அம்மா வாசல் கதவைத் திறந்தவுடன்.

''வேதாளம் மறுபடி முருங்கை மரத்துல ஏறியாச்சம்மா...''

''அப்படின்னு...?''

''மொதல்ல உள்ள வரதுக்கு வழியை விடேன்... இஷ்டமில்லேன்னு சொல்லிடு... நான் இப்படியே போறேன்... காவிரிம்மா இருக்கா... அவளோட மடி அகலமாத்தான் இருக்கு...''

மாட்டு வண்டிக்காரன் சாக்குக்கு அடியில் வைக்கோலைத் தேடும் பாவனையில் இவர்கள் பேச்சைக் கேட்டதை அம்மா கவனித்தாள்.

''உள்ள வாடி...'' என்று, 'நக்''நக்' என்று மெட்டி ஒலிக்க உள்ளே போனுள்.

''பிஸினஸ், அது இதுன்னு சொன்ன தெல்லாம் டுப்பும்மா. மூணு சீட்டு.... டஞ்சகல்யாணி... ஃபாரின் தீர்த்தம்னு எவ்வளவு இருக்கு?''

''நீ சொல்றது எனக்கு எதுவுமே புரியலேடி...''

''புரிய வேண்டாம்மா... புரிஞ்சா எனக்கு அசிங்கம்... அவனுக்கு அவரைவிட நாலு வயசு ஜாஸ்தியே இருக்கும்... பாத்தா நொரங்குன்னு அசல் கொரங்கு தான்...''

''அடியே நாராயணி... என்னடி சொல்ற நீ? அடி வயித்தில நெருப்பை அள்ளி வச்ச மாதிரி இருக்கேடி...''

''நான் அதையும் அனுபவிச்சாச்சம்மா.''

நாராயணி மெல்ல அடிவயிற்றை வருடிக் கொண்டாள். ராஜா என்று பொட்டுப் பொட்டாய் இங்கிலீஷில் சிகரெட்டின் சிவப்பு முனைகள் பெயர் செதுக்கியிருந்தன.

## மே—21—1983... மே—26—1984

வசந்தமும், மாரியும் மாறிமாறிச் சுழன்ற இந்தக் கால கட்டத்தில் நாராயணி அனுபவித்த அவலங்களை, கண்ணீரைக் குழைத்துக் குழைத்து எண்பது பக்கங்களுக்கு எழுதலாம். 'புளுகுறடி' என்பார்கள்.

மறுபடியும் ஒரு ஐயாயிரத்துக்கு வேட்டு வைத்து விட்டு ராஜாராமன் அவளை அழைத்துப் போய் ஹதம் செய்ததைப் பின்னிப் பின்னிச் சொல்லலாம்.

---

''வன்முறையால் கட்டாயப்படுத்தி அடிமைப்படுத்தும் ஒரு தனி எந்திரம் அரசு.''

—லெனின்.

''ஒரு பலசாலிக்கு எது அனுகூல மாயிருக்கிறதோ அதுதானே நீதி?''

—பிளாட்டோ.

தொகுப்பு: ரவி.



'ஆம்பிளைன்னு ஆயிரம் தான் இருக்கும்... நீ எடுத்ததுக்கெல்லாம் ஓடி வரது நல்லால்லே...' என்று அவள் அம்மாவும், 'இங்க கேள்வி கேக்கறவனுக்கெல்லாம் நான் இல்ல பதில் சொல்ல வேண்டியிருக்கு?' என்று அப்பாவுமே பேசுகிற போது, அவள் புலம்பலைக் கேட்டு ஆறுதல் சொல்ல யாரும் தயாரில்லை. அழ முனைந்தாலும் கண்ணில் நீர் வராது என்கிற மாதிரி மனசு கெட்டித்துப் போனது. நட்பான சூழலோடு காவிரி மட்டும் தான் பாலத்தின் கீழ் சலசலத்தது.

நாராயணிக்கு அந்த ஆற்றுப் பாலத்தில் உட்காரப் பிடித்திருந்தது. சுவாசக் காற்றில் மகிழம்பூ மணக்கும். காற்று சிலு சிலுக்கும். பாலச் சுவரில் உட்கார்ந்து கீழே பார்த்தால் நிறைய மணற்பரப்பு தெரியும். ஓர் ஓரத்தில் கோவணம் மாதிரி தண்ணீர் நெளியும், ஆடி மாதம் வரை.

ஆடி மாதத்தில் ஏதோ சண்டைக்குக் கிளம்புகிற மாதிரி தண்ணீர் புரண்டு கொண்டு வரும். பாலத்தைத் தாங்கின யானை அகலத் தூண்களுக்குக் கீழே மணலை அரித்துக் கொண்டு, பளீர் பளீரென்று அறைந்து கொண்டே போகும்.

அம்மாவிடம் கூட சொல்லாத நிறைய விஷயங்களை அந்தத் தண்ணீர் பிம்பத்திடம் தான் சொல்வாள்.

பழைமையான, தனிமையான பெரிய வீட்டில் அவளை உள்ளே வைத்துப் பூட்டி விட்டு ராஜாராமன் சீட்டாடப் போனதைப் பற்றிச் சொல்வாள். ஒரு வக்கிரமான விஷபத்திற்கு உடன்பட மறுத்ததற்காக அவள் முகத்தில் அவன் அசிங்கப் படுத்தியதைப் பற்றிப் பகிர்ந்து கொள்வாள். வெறிநாயாய்த் துரத்துகிற நினைவுகளும், தூக்கம் கலைக்கிற துக்க சொப்பனங்களும், அந்த ஆற்றுப் பாலத்தின்மேல் உட்கார்ந்திருக்கிற போதுதான் ஆறுதலாய் விலகிக் கொண்டன.

## மே—27—1984... ஜூன்—2—1984

ராஜாராமனுக்கு உடம்பு சரியில்லை என்று தந்தி வந்தது. 'போடி, போடி' என்று அம்மாவும், அப்பாவுமாய்க் கிளப்பி விட்டார்கள். பேசாமல் அங்கேயே போய்ச் செத்தொழியலாம் என்கிற ஆத்திர ஆற்றாமையுடன் கிளம்பிப் போனுள்.

ராஜாராமனுடைய அப்போதையஜாகை ஒரு ஹோட்டல் அறையாய் இருந்தது. சாராயம், விஸ்கி, சீட்டுக்கட்டு, என்று இறைந்து கிடந்தது.

ராஜாராமன் ஹாவென்று கட்டிலில் மல்லாந்திருந்தான். முகம் முழுக்க கொப்புளம் கொப்புளமாய் இருந்தது. என்ன, எங்கே என்று சொல்லாமல் வெளியே வெளியே போய் வந்தான். திரும்புகிற போது சோர்ந்து போய் வந்தான்.

மேல் சட்டைப் பையில் ஒரு பத்து ரூபாய் நோட்டு துருத்திக் கொண்டிருந்தது. கூடவே மஞ்சளாய் ஒரு காகிதம். தவறி விடப்

போகிறது என்று உள்ளே செருக முனைந்தான். ஒரு ஓரத்தில் Doctor என்று எழுதியிருக்கவே அதை ஆவல் உந்துதலில் வெளியே எடுத்தான். ...that Mr Rajaraman has seriously been affected by sexually transmitted disease.

நாராயணிக்கு உடம்பு பதறியது. 'உவ்வா...' என்று குமட்டிற்று. அவளுக்கே அது வந்து விட்டது போல் தூக்கிப் போட்டது. அன்றைக்கு அறுத்துக்கொண்டு ஓடிவந்து விட்டாள்.

மறுபடியும் ஆற்றுப் பாலம் தான் தோழமை தந்தது.

**ஆகஸ்டு–2–1984**

ராத்திரி கச்சேரியைச் சுவர்க்கோழி ஆரம்பித்திருந்த ஒன்பது மணி. அப்பா வீட்டிற்குள் ஓடி வந்தார். அவர் வந்த வேகத்தைப் பார்த்து அம்மா பதறினாள்.

''மாப்பிள்ளே வந்திருக்கார்டி... மாப்பிள்ளே வந்திருக்கார்...''

''யாரு...?'' என்றாள் நாராயணி விட்டேற்றியாய்.

''உன் வீட்டுக்காரர்டி... உனக்குத் தான் சாமர்த்தியம் பத்தாது... அவர் என்னவோ உன்னே வச்சுக் குடித்தனம் பண்ண ரெடியாத்தான் இருக்கார்...''

''மாப்பிள்ளேயை உள்ளக் கூப்பிடுங்களேன்...'' என்று அம்மா பரபரத்தாள்.

''இந்த வீட்டுப் படியை எப்படி மிதிப்பார் சொல்லு... நாராயணி அவர் கால்ல விழுந்து மன்னிப்புக் கேட்க வேண்டாமோ?''

''போடி... இப்பவே போடி... எக்குத் தப்பா நடந்துக்காம குடித்தனம் பண்ணப் பழகிக்கோ...''

''நான் வரலே...''

''ஆத்துப் பாலத்தண்டை காத்துக்கிட்டிருக்கார், பாவம்... சீக்கிரம் கௌம்புடி''

''ஏதாவது பணத்துக்கு அடிபோடலாம்னு வந்திருப்பார்.''

''அந்த ஜௌகெமெல்லாம் உனக்கு எதுக்கு... கௌம்புடீன்னா...?''

கோபு தூங்கிப் போயிருந்தான். அவனுக்கு அடுத்த ரமாவும் தூங்கிப்போயிருந்தாள்.

நாராயணி அப்படியே கிளம்பினாள்.

ஆற்றுப்பாலத்தின் ஒரு பக்கச் சுவரில் ராஜாராமன் உட்கார்ந்திருந்தான். கால்கள் தரையை எட்டாமல் ஊசலாடிக் கொண்டிருந்தன. கண்கள் பளபளவென்று அவள் திசை நோக்கி ஒளிர்ந்து கொண்டிருந்தன. பத்தடி தூரத்தில் அப்பா நின்று விட்டார்.

''ஏம்ப்பா?''

''இல்லம்மா... நீயும் மாப்பிள்ளேயும் பேசிக்கறச்சே அங்க நான் எதுக்கு?''

'சரசமா ஆடப் போகிறோம்?' —நினைப்பில் சிரிப்பு வந்தது.

ஆடி மாதத்தின் புதுவெள்ளம் ஹோவென்று இரைந்து கொண்டிருந்ததில் மெட்டி சப்தம் அடங்கிப் போனது.

நாராயணி அவனே நெருங்கினாள்.



ஒருவர்: செகண்ட்ராபாத்திற்கு அடுத்த ஸ்டேஷன் எது?

மற்றவர்: தேர்ட்ராபாத் ஆக இருக்கலாம்.

முதல்வர்: (எரிச்சலுடன்) அப்படியா! நான் மினிட்ராபாத்துன்னுல்ல நினைச்சேன்!

—ஏ. கிறிஸ்டோஃபர்.

---

''வாடி என் ஓடுகாலி...''

காற்றில் கரகரத்துக் குரல் வந்தது. முகத்துக் கொப்புளங்கள் இன்னும் அதிகமாகிப் போயிருந்தன.

யாருக்கு ஓடுகால்? நாராயணிக்குப்புரியவில்லை. பாந்தமாகச் சிரித்தாள்.

''திமிராடி... செய்யறதைச் செஞ்சிட்டுச் சிரிப்பு வேற கேக்கறதா, சிறுக்கி?''

நாராயணிக்குச் சிரிப்பு மாறவில்லை.

''வீட்டுக்கு வா... இந்த ஒதட்டையே பொசுக்கிடறேன்...''

நாராயணிக்குச் சிரிப்புக் கூடிற்று.

''ஓடி வந்தது தப்புதான், மன்னிச்சு என்னே ஏத்துக்கோங்கோ'ன்னு கால்ல விழுடி...''

நாராயணியிடம் அப்போதும் அதே புன்னகை. ராஜாராமின் கண்கள் இடுங்கின. ஆத்திரத்தில் உதடுகள் மடிந்து கொண்டன.

''சொல்லுடி... 'மன்னிச்சுடுங்கோ'ன்னு சொல்லுடின்னா...''

அவனே அறையும் மூர்க்கத்துடன் அவன் கையை வீசிய நேரத்தில் அது நடந்தது.

உள்ளங்கை இரண்டையும் விரித்து அவனே அப்படியே பற்றித் தூக்கினாள் நாராயணி.

''என்னே மன்னிச்சிரு ராஜாராமா...'' என்று ஆங்காரமாய்ச் சொன்னாள். பாலத்து சுவருக்கு அந்தண்டை. விருட்டென்று வீசித் தள்ளினாள்.

நேரே ஒரு செருக்குதான் சுழலும். அந்த இடத்து நீர்ச்சுழிப்பு அப்படி. எப்பேர்க்கொத்த நீச்சல்காரனாய் இருந்தாலும் சரி.

'தொபுகடீர்' என்ற ஒலியைக் கேட்டு விட்டு அப்பா பதற்றமாகத் திரும்பிப் பார்த்து ஓடிவர ஆரம்பித்தபோது, நாராயணி பாலச் சுவரில் தனியே உட்கார்ந்து தரையில் காலே தேய்த்துக் கொண்டிருந்தாள்.

முகத்தில் அந்தச் சிரிப்பு மட்டும் இன்னும் மாறவில்லை.

## வட்டமேஜை



# அண்ணாவியை நிராகரித்தது ஏன்?

● திரு. எஸ். பி. முத்துராமன் தாம் இயக்கும் மசாலாப் படங்களில் க்ளைமாக்ஸை எப்படி விறுவிறுப்பாக அமைத்து ரஸிகர்களை நாற்காலியின் விளிம்பில் உட்கார வைக்கிறாரோ அம்மாதிரியே அவரிடம் கேள்வி கேட்ட போட்டியில் வெற்றி பெற்ற வாசகர்களின் பெயர்களை உடனடியாக வெளியிடாமல் சஸ்பென்சாக வைத்து வானொலியில் கேட்டுத் தெரிந்து கொள்ளுமாறு சொல்லி இருக்கிறீர்களே... பொருத்தமாகத்தான் இருக்கிறது.
சென்னை–35, சி. பூபால்சிங்

● உலகநாயகியும், விசுவநாதரும் தலைப்பில் ஆனந்தி எழுதிய கட்டுரை என் சொந்த மாவட்டத்தைச் சேர்ந்த தென்காசிக்கே அழைத்துச் சென்றது. கோயில் வானளாவும் கோபுரத்துடன் காட்சிதரப் போகும் நாளை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்.
கோவை-6 நெல்லை. ஏ.ஜி.கல்யாணசுந்தரம்.

● விருப்பு வெறுப்பின்றியும் கட்சி சார்பின்றியும் 'கல்கி' நடத்தப்பட்டு வருவதை மீண்டும் ஒரு முறை நிரூபித்து விட்டீர்கள். "கவர்னர் செய்தது சரியா?" தலையங்கத்தைத்தான் குறிப்பிடுகிறேன்.
சிவகாசி ஆனந்த்

● வீட்டு வசதி வாரியம் பற்றிய கட்டுரையைப் படித்தோம். (8.7.84) இதழ். கருணாநிதி நகரில் வாரியத்திற்கும் ஒப்பந்ததாரருக்கும் ஏற்பட்ட தாவாவில், ஒப்பந்ததாரர் வீடுகளைப் பூட்டிக் கொண்டு சென்று விட்டதாக ஒரு விவரம் காணப்பட்டது. அது சரியல்ல. ஆனாலும் 1981 மே 22–ல் வீடுகள் ஒதுக்கப்பட்ட நாங்கள், இன்றுவரை வீடுகளில் குடிபுக முடியாமல் அவதியுறுவது என்னவோ உண்மை. பண நஷ்டம், மனக் கஷ்டம் இவை சொல்லில் அடங்காது.
சென்னை–78, எஸ்.கிருஷ்ணன்.

(தற்போதைய கே.கே. நகர் அதிகாரிகள் முழு ஒத்துழைப்புத் தருவதாக எழுதும் திரு. கிருஷ்ணன் வாரியத்துக்கும் ஒப்பந்ததாரருக்கும் ஏற்பட்ட வழக்கு விவரங்களை விரிவாகத் தந்துள்ளார். இடமின்மையால் அவற்றைப் பிரசுரிக்க இயலவில்லை –ஆசிரியர்)

● ஆலயங்களின் அவல நிலை பற்றிய கட்டுரையைக் கண்டேன். ஏர் கண்டிஷன், வண்ண வண்ணக் குழல் விளக்குகள்போன்றவை கோவில்களில் அதிகமாகி பக்தியின் தன்மையைக் குறைத்து வருவது ஆஸ்திக அன்பர்களின் மனத்தைப் புண்படுத்தும் விஷயங்கள்.
திருநெல்வேலி நாரண சங்கர்.

● 'மனப்புண் ஆற்றுவோம்' கட்டுரை சீரிய சிந்தனையில் பிறந்த அற்புத எண்ணங்கள்.
சென்னை–84. பொடுசி.

● மந்திரி ஒருவர் திடீராகா மாற்றப்படுகிறார். காரணம் திறமையின்மை அல்ல. தனி ஒருவரின் புகழ் பாடாததே என்பது. நமது அரசு எதில் கவனம் செலுத்துகிறது என்பதையே காட்டுகிறது.
திருச்சிராப்பள்ளி–1, சக்திபாலன்.

● அகதிகள் படும் அவதி நெஞ்சை உருக்கியது. அவர்கள் இங்கிருக்கும் ஏமாற்றுக்காரர்களிடம் அவதிப்படுகிற நிலையை நினைக்கிறபோது 'புலியிடம் தப்பி வந்து புதைகுழிக்குள் விழுந்த' கதை தான் நினைவுக்கு வருகிறது.
நெல்லிக்குப்பம், ரா. ஜோதிராமன்.

● மாருதியின் மைனஸ் மற்றும் ப்ளஸ் பாயிண்டுகளைப் படிக்க வைத்துக் குறை நிறைகளை வெட்டவெளிச்சமாக்கி விட்டீர்கள்.
சென்னை–5, எஸ். சம்பத்குமார்.

● அண்ணாவியைப் பற்றிச் சில மாதங்களாக எழுதாத பத்திரிகைகளே கிடையாது. உயரம் தாண்டலில் புதிய இந்திய ரெக்கார்டை ஏற்படுத்தினார். ஒலிம்பிக் போட்டியில் அண்ணாவி கலந்து கொள்வதற்கு ஏற்பாடுகளாயின. பயிற்சிக்கு டெல்லி சென்றார். அப்போது எதிர்பார்த்த அளவு தாண்டவில்லை. ஆதலால், 'ஒலிம்பிக் போட்டிக்கு அனுப்புவதில்லை' என்று தேர்வுக்குழு முடிவு செய்துவிட்டது.

பத்தொன்பது வயதான அண்ணாவி ஒலிம்பிக்கில் ஒரு சாதனை நிகழ்த்துவாரா என்பது முக்கியமல்ல. ஆனால் கலந்து கொண்டிருக்க வேண்டும். ஆர்வமும் ஏற்படும், நல்ல அனுபவமும் கிடைத்திருக்கும். அவர் இன்னும் சாதனை புரியும் காலம் நிறைய உள்ளது. அதற்குள் ஒரு இளையதலைமுறை வீரரை நிராகரிப்பதா?
செந்தாரப்பட்டி, ஏ.எஸ்.பி. விசுவநாதன்.

(கடைசிக் கடிதம் பரிசு பெறுகிறது)

படம்: நன்றி: ஸ்போர்ட்ஸ்டார்

## ஸைலே...ன்ஸ்..



### சசிரேகா:

காயத்ரி படத்தில் பாடிய, 'வாழ்வே மாயமா?' பாடலின் மூலம் பிரபலமானவர் பின்னணிப் பாடகி சசிரேகா. இவரை, சினிமாவுக்காகச் சிபாரிசு செய்தவர் டி. எம். சௌந்தரராஜனும். இதுவரை முந்நூறு பாடல்களுக்கும் மேல் பாடி இருப்பதாகச் சொன்னார்.

சமீபகாலமாய் சினிமாவை ஆக்கிரமித்திருக்கும் முக்கல், முனகல் பாடல்களைப் பற்றிக் கேட்டதற்கு, ''அந்த மாதிரி பாடல்களைப் பாடும் போது 'ஷை'யாகத் தான் இருக்கிறது. என்ன செய்வது; வளர்ந்து விட்ட பாடகர்கள் வேண்டுமானால் மறுக்கலாம். என் போன்ற வளரும் பாடகர்கள் அப்படிப் பாட மறுத்தால், அப்புறம் வீட்டிலேயே இருக்க வேண்டியது தான்!'' என்றார்.

''சில சமயம் ரெகார்டிங் தியேட்டர்களில் எந்த இசையமைப்பாளரையாவது சந்திக்கும்போது 'என்னம்மா, ரொம்ப பிஸி போலிருக்கு. தேதி குறிப்பிட்டு கால்ஷீட் கேட்டதற்கு, நேரம் இல்லேன்னு சொல்லிட்டியாமே?' என்கிறார்கள். ஆனால் உண்மையில் அப்போது நான் வீட்டிலே தான் இருந்திருப்பேன். சம்பந்தப்பட்டவர்கள் யாரும் என்னுடன் தொடர்பு கொண்டிருக்கவும் மாட்டார்கள். விஷயம் என்னவென்றால், இசை அமைப்பாளர்களுக்கும் எனக்கும் இடையில் உள்ள சில இடைத்தரகர்கள் வருகிற சான்ஸை மற்றவர்களுக்கு வழங்கும் வேலையைச் செய்து விடுகிறார்கள். நானாகவும் யாரிடமும் போய் சான்ஸ் கேட்பதில்லை'' என்கிறார் சசிரேகா!

### எஸ். வி. சேகர்:

எஸ். வி. சேகர் மலையாளப் படம் ஒன்றிலும் நடித்திருக்கிறாராம். ''கமல், ரஜினியைப் போல் நான் தனித்துவம் பெருமைக்குக் காரணம் காமெடி ரோல்களில் நடிப்பது தான் என்கிறார்கள். ஏன், பாக்யராஜ் இல்லையா?'' என்றார்.

இவர் அப்பாவின் ஆபீஸில் உள்ளவர்களின் வற்புறுத்தலால் 'நரசுஸ் காபி' விளம்பரப் படத்தில் நடித்தாராம். ''அது போல் அடுத்தடுத்துச் சில விளம்பரப்படங்களில் நடிக்க அழைத்தார்கள். ஒப்புக் கொள்ளவில்லை. காரணம், ஏதாவதொரு படத்தில் கிளைமாக்ஸ் காட்சியில் உணர்ச்சிகரமாய் நடிக்கும்போது, நான் விளம்பரப் படத்தில் கொடுத்த குரலையே தியேட்டரில் யாராவது ஒருவர் சத்தமாகக் கத்தினால், என் பாத்திரம் பாதிப்படையுமே!'' என்றார்.

ஆவி, ஜோசியம், நியூமராலஜி போன்றவைகளில் அழுத்தமான நம்பிக்கை உடையவராம்.

சேகர் அடுத்ததாக ஒரு புதிய நாடகத்தை அரங்கேற்றப் போகிறார். நாடகத்தின் பெயர் 'பஞ்சு மிட்டாய் கட்சி; ஜவ்வு மிட்டாய் கட்சி!'

ஒரு அரசியல் விமர்சன நாடகம் என்று விளக்கம் வேறு!

### தேவநாராயணன்:

''தமிழில் ஆண்டுதோறும் சிறந்த டைரக்டர், நடிகர், இசை அமைப்பாளர், வசனகர்த்தா எல்லோருக்கும் அரசாங்கம் பரிசு வழங்குகிறது. ஆனால் இந்தப் பரிசுப் போட்டியில் டப்பிங் பட வசனகர்த்தாக்களைச் சேர்த்துக் கொள்வதில்லை. டப்பிங் படத்திற்கு வசனம் எழுதுபவன் என்றால் இளக்காரமா? அது எவ்வளவு கஷ்டமான வேலை! தமிழ் தெரியாத நடிகர்களையும், நடிகைகளையும் வைத்து இப்போது எடுக்கப் படுகிற எல்லாப் படங்களுமே ஒருவகையில் டப்பிங் படங்கள் தானே?...'' என்கிறார் டப்பிங் பட வசன கர்த்தா தேவநாராயணன்.

நியாயம்தானே...?

—சம்பத்ஜி



# எஸ்.வி.சேகர் நடிப்பில் தனித்துவம் இல்லையா!

# படிப்பதனால் பயன் உண்டோ?

## மாலினி சேஷாத்ரி



"ஆயிரம் ஆயிரமாக ஏற்றிக்கொண்டே போகிறார்கள்" என்றார் ராஜகோபாலன், ஒரே சோக மயமாக.

"எதைப்பற்றிப் பேசுகிறீர்கள்? மாருதி காரின் விலையைப் பற்றியா?" என்றாள் அஞ்சலி கிண்டலாக.

"கல்லூரியில் இடங்களைப் பற்றித்தான்" என்றார் ராஜகோபாலன், காட்டமாக. "தமிழ்நாட்டில் இந்த வருடம் கல்லூரிகளில் இரண்டாயிரம் ஸீட்டுகள் அதிகப்படுத்துகிறார்கள் என்று இந்தச் செய்தித்தாளில் போட்டிருக்கிறது!"

"நல்லது தானே?" என்றாள் அஞ்சலி. "எல்லோரும் இடத்துக்கு ஆலாய்ப் பறக்கிறார்களே?"

"எதற்கு?" என்றார் ராஜகோபாலன் குரலை உயர்த்தி. "இன்னும் நிறைய வேலையில்லாமல் பட்டதாரிகள் தோன்றி, இந்தச் சமூகத்துக்கு எதிராக உருவாகவா?"

"ஏன் இப்படி உணர்ச்சிவசப்படுகிறீர்கள் அப்பா?" என்றாள் ரஞ்சிதா. தொடர்ந்து, "விவேக் இன்னும் இரண்டு வருடங்களில் கல்லூரிக்குப் போக வேண்டும். அப்போது நிறைய இடம் இருக்குமானால் அவனுக்கும் ஒரு ஸீட் கிடைக்கிற வாய்ப்பு வரும் அல்லவா?" என்றாள்.

சம்பாஷணையின் சுவாரசியத்தில் மூழ்கியிருந்த விவேக், ரஞ்சிதாவின் காலை ஒரு மிதி மிதிக்கக் கூட மறந்து போனான். "அப்பா, இந்த மாநிலத்தில் மட்டும் ஒரு வருஷத்துக்கு, லட்சத்துக்கும் அதிகமான மாணவ — மாணவிகள் பள்ளிகளிலிருந்து தேர்வு எழுதி வெற்றி பெற்று வெளிவருகிறார்கள், தெரியுமா? கல்லூரிகளில் உள்ள இடங்களோ மிகவும் குறைவு. இடம் கிடைக்காத துரதிர்ஷ்டசாலிகள் பாவம் என்ன செய்வார்கள்?"

"என்ன செய்வார்கள், டிகிரியோடு வேலையில்லாமல் இருப்பதைப்' போல, டிகிரி இல்லாமலே வேலையுமில்லாமல் இருப்பார்கள், அவ்வளவுதான்" என்று சிரித்தாள் ரஞ்சிதா.

"இதில் சிரிப்பதற்கு என்ன இருக்கிறது?" என்றாள் அஞ்சலி. பிறகு கணவரைப் பார்த்து, "சமீபத்தில் சில மாற்றங்கள் கொண்டு வந்திருக்கிறார்களே, அவை நமது கல்வி முறைக்கு ஏதேனும் உருப்படியாய் உதவுமா?" என்றாள்.

"என்ன மாற்றங்கள்?" என்றார் ராஜகோபாலன், சவால் விடுவது மாதிரி. "அதிகபட்ச தொழில் முறைப் பாடத்திட்டங்கள்; வேலை வாய்ப்பு அளிக்கும் கல்விமுறை — எல்லாம் சரிதான். ஆனால்



# விவாத மேஜை



வேலையே இல்லை என்றால் இந்தத் தொழிற் கல்வி முறையில் என்ன பயன்? பள்ளியிலிருந்து நேரே வெளியே வரும் ஸ்டெனோக்களுக்கும், பாங்க் குமாஸ்தாக்களுக்கும், கம்ப்யூட்டர் புரோகிராமர்களுக்கும் யார் எடுத்த எடுப்பில் வேலை கொடுத்து விடுகிறார்கள்? பி. ஏ., பி. எஸ்ஸி போன்ற பட்டதாரிகள் பற்றியோ கேட்கவே வேண்டாம். தப்பித்தவறி இவர்களில் சிலருக்கு வேலை கிடைத்தாலும் இவர்கள் படிப்பின் தரம் போதவில்லை என்று வேலைக்கு வைப்பவர்கள் முணுமுணுக்கிறார்கள்.''

''ஏன், வேலை கிடைக்காத மாணவர்கள் மேற்கொண்டு தொடர்ந்து படிக்கலாமே?'' என்றாள் ரஞ்சிதா.

''எங்கே எப்படி?'' என்றார் ராஜகோபாலன். பள்ளிகளில் ''வேலைவாய்ப்புக்கான கல்விப் பயிற்சி பெற்று வந்தவர்கள் படிப்பைத் தொடர்வதற்கு ஏற்ப கல்லூரிகளில் பாடத் திட்டம் அமையவில்லை. இருக்கிற இடங்களும் வெகு குறைவு.''

''இந்த மாதிரி வருகிறவர்களுக்கென்று கல்லூரிகளில் ஒவ்வொரு கோர்ஸிலும் கொஞ்சம் இடங்களை ரிசர்வ் செய்து விட்டால் போயிற்று'' என்றான் விவேக்.

''இப்படியே போனால் கடைசியில் ரிசர்வ் செய்வதற்கே இடம் ஏதும் மிச்சம் இருக்காது'' என்றாள் அஞ்சலி கிண்டலாக.

''ஏதேனும் மாற்றம் நிகழ்ந்துதான் வேண்டும்'' என்றான் விவேக் உறுதியாக. ''என்னுடைய சரித்திரப் புத்தகத்தில் கூடப் படித்தேன். நாம் சுதந்திரம் அடைந்தவுடன், நமது கல்விமுறையை நம் தலைவர்கள் பலரும் கண்டனம் செய்தார்களாம்—பிரிட்டிஷ்காரர்கள் அளித்த இந்தக் கல்வி முறை குமாஸ்தாக்களை மட்டுமே உருவாக்கும் என்று.''

''குறைந்தபட்சம் அவர்களால் தப்புத் தவறு இல்லாமல் எழுதப் படிக்க முடிந்தது மட்டுமல்ல, அவர்களுக்குக் குமாஸ்தா வேலையும் கிடைத்தது என்பதைக் கவனிக்க வேண்டும்'' என்றார் ராஜகோபாலன். ''இந்தக் காலத்தில் எல்லோருக்கும் ஏதேனும் ஒரு டிகிரி வேண்டும். அப்புறம் அதற்குச் சம்பந்தமே இல்லாத வேலையில் தயக்கமே இல்லாமல் சேர்ந்து விடுவார்கள். கேட்டால், அந்த வேலை தான் கிடைத்தது என்பார்கள்!''

''ஆமாமாம்... ஒரு டாக்டர் கூட ஐ. ஏ. எஸ்ஸில் முதலாவதாக வந்தாராமே.''

''என் தோழியின் அண்ணா எம். எஸ்ஸி முடித்து விட்டு பாங்க் வேலையில் சேர்ந்து விட்டார்!''

''என்னவானாலும், இந்த நேர்காணல் முறையை விட நுழைவுத் தேர்வு எவ்வளவோ பரவாயில்லை'' என்றான் விவேக்.

''ஆமாம், ஏதேனும் செய்தாக வேண்டிய நிலைமை வந்து விட்டதே! இல்லையென்றால் மாணவர்கள் எல்லாம் விண்ணப்பங்களைக் கல்லூரிக்குப் பதில் கோர்ட்டுக்கே நேரடியாக அனுப்பக் கூடிய நிலைக்கு அல்லவா வந்து விட்டார்கள்'' என்றாள் அஞ்சலி.

ராஜகோபாலனுக்கு யாருடனும் எதனுடனும் ஒத்துப் போகும் மனநிலை இருக்கவில்லை. ''எப்போது பார்த்தாலும் தேர்வு, தேர்வு, தேர்வு! பாஸ் ஆவதற்கு ஒன்று. சேர்வதற்கு ஒன்று — என்று எதற்கு இரண்டு விதத் தகுதித் தேர்வுகள்? இன்னும் மூன்று, நான்கு வைத்துவிட்டுப் போகட்டுமே? கடைசியில் ஓட்ட வடிகட்டி எடுத்துவிடலாம்!'' என்றார் கிண்டலாக.

''வேதனை என்னவென்றால், படிப்பில் அக்கறை இருக்கிறதோ இல்லையோ, ஏதேனும் ஒரு கல்லூரியில் பட்டம் வாங்கி விடுவது தான் இன்றைய ஃபாஷன்!'' என்றாள் ரஞ்சிதா. ''அமெரிக்காவில் எல்லாம் பணக்காரப் பிள்ளைகள் கூட படிப்பில் நாட்டமில்லையானால் கல்லூரிக்குப் போகாமல், நேரடியாக ஏதேனும் வேலைக்குப் போய் விடுகிறார்கள்.''

''அமெரிக்கா பற்றி இங்கு பேசுவானேன்? இங்கே பள்ளிக்கூடத்திலிருந்து வெளியே வந்தால், உடனே வேலை காத்துக் கொண்டிருக்கிறதாக்கும்!'' என்றான் விவேக்.

''ஒரு டிகிரி கையிலிருப்பது மட்டுமே வேலைக்கு உத்தரவாதம் அல்ல. முட்டாள்தனமாக ஏதேனும் கல்லூரியில் சேர அவசரப்பட்டு ஓடாதே!'' என்றார் ராஜகோபாலன், மகனை நோக்கி.

''உங்கள் யோசனையை யார் கேட்பார்கள்?'' என்றாள் அஞ்சலி அலட்சியமாக. ''வரதட்சிணை சமாசாரம் மாதிரிதான். எல்லோரும் உபதேசம் செய்வார்கள்; யாரும் செயலில் மட்டும் காட்ட மாட்டார்கள்!''

''ஏ விவேக், நீ ஏன் இந்த வீட்டின் முதல் பட்டதாரியல்லாத — வேலையில்லாதவனாக இருக்கக் கூடாது?'' என்று சீண்டினாள் ரஞ்சிதா.

○ எம். வடிகநாதன், வேதாரண்யம்.

? பிந்தரன்வாலே இறக்கும் போது இந்திராவைப் பற்றி என்ன நினைத்திருப்பார்?

! அணைத்த கையே அடிக்கவும் கூடும் என்பதை எண்ணிப் பார்க்கவும் அவருக்கு நேரம் இருந்திருக்காதே!

○ ஏ. சுகுமார், காஞ்சிபுரம்.

? ''மாலை ஆறுமணிக்கு மேல் சாராயக்கடைகளை மூடவேண்டும் என்று உத்தரவிட்டு விட்டுத் தொடர்ந்து ஒரு மணி நேரத்தில் அதை ரத்து செய்தது ஞாபக மறதியால் ஏற்பட்டது'' என்று முதல்வர் கூறியிருப்பது பற்றி?

! 'கள், சாராயம் என்றாலே இப்படி தடுமாறித்தான் போகும் போலும்' என்று சமாதானப்படுத்திக் கொள்ள முடியாமல் வேறுபல விஷயங்களிலும் முதல்வரிடம் தடுமாற்றம் காணப்படுவதுதான் நம்மையும் அவரைப்பற்றிய

களாக அடையும்போது அண்டப் பெருவெளியின் அமைதி உள்ளத்துள்ளும் நிறைகிறது.

○ மா. வடிவேல், சிதம்பரம்.

? பொது நலம் என்றால் என்ன?

! அப்பாடா! உங்கள் ஒருவருக்காவது அதுபற்றி ஞாபகம் இருக்கிறதே. இப்படி கேள்வி கேட்டுக் கொள்வதே பொது நலன்தான்.

○ எஸ். வி. ராஜசேகர், சென்னை-5.

? ட. வி. யில் சிறப்பாக ஒளிபரப்பப்பட்ட விம்பிள்டன் ஆட்டம் எப்படி?

! சிறப்பான ஒளிபரப்புக்கு நன்றி பி.பி.ஸி. ஆட்டம்: மக்கன்ரோவின் திறமையை (குறிப்பாக அந்த டெட்லி ஸர்வீஸ்) ரசிக்க முடிந்ததென்றாலும் சமவலிமை

# கொ.ப.செ.கொட்டம் அடங்கியதைக் கவனித்தீரா?

உறுதியான அபிப்பிராயம் கொள்ள முடியாமல் தடுமாறச் செய்கிறது!

○ சு. எஸ். ரங்கநாதன், சிதம்பரம்.

? நீங்கள் வாக்கிங் போவது காலையிலா, மாலையிலா?

! இரவில். காரியாலயத்திலிருந்து திரும்ப வெகு நேரமாகி விட்டாலும் விடாப்பிடியாக நடக்கிறேன். சாலை ஓர அசுத்தங்களை மிதித்து விடுவோமோ பள்ளங்களில் காலை விட்டு ஒடித்துக்கொள்வோமோ என்று பயந்து அதிலேயே கவனமாய் நடக்கும் போது வேகம் தடைப்படுகிறது. இதனால் வீட்டு மொட்டைமாடியில் குறுக்கும் நெடுக்குமாக சுண்டுப் புலியாகிறேன். அரை மணி நடந்தால் ஒன்றரை மைல் கணக்கு. இரவு உணவு குறையும். கனவுகள் அற்ற ஆழ்ந்த தூக்கம்வரும். உடம்பு ஆரோக்கியமாய் இருக்கும். சந்திரனையும் நட்சத்திரங்களையும் நண்பர்



○ துணிச்சல் ○ புதுக்கட்டு

பெற்ற எதிரியை அவர் சந்திக்காததால் சப்.

○ ஆர். ராம்சங்கர், சென்னை.

? கொள்கை பரப்புச் செயலாளர் கொட்டம் அடங்கியுள்ளதைக் கவனித்தீரா?

! இல்லையே? கொட்டம் அடங்குகிறமாதிரி புரட்சித்தலைவரின் சொல்லோ செயலோ அமையவும் இல்லையே!

○ என். சம்பத்குமார், சென்னை-5.

? அரசியலில் ஈடுபடுவதால் என்ன லாபம்?

! அரசியலில் ஈடுபடுவது தியாகம் என்ற காலம் மலையேறி விட்டது. இன்று அரசியலில் ஈடுபடுவதில்தான் லாபம். இதோ வைரமுத்துவின் ஒரு கவிதை:

இந்திய மண்ணில்...<br>
வியாபாரஞ் செய்ய வந்தவர்கள்<br>
அரசியல் நடத்தினார்கள்!<br>
அரசியல் நடத்த வந்தவர்கள்

○ என்ன நினைத்தாரோ? ○ அடங்கிற்று?



# தராசு

வியாபாரஞ் செய்கிறார்கள்!
இரண்டிலும்
நட்டப்பட்டது மட்டும்
நாம்தானே இந்தியனே!
(''இருத்தி எழுதிய தீர்ப்புகள்'' நூல்)

○ க. சந்தானம், சேலம்.
? சமாதானத்துக்கு — வெள்ளை; பகைமைக்கு — பச்சை; அபாயத்துக்கு — சிவப்பு; துக்கதுக்கு— கறுப்பு; மகிழ்ச்சிக்கு — எது?
! மங்களகரமான மஞ்சள்.

○ என். விக்னேஷ், சிதம்பரம்.
? கவிஞர் கண்ணதாசன் இடத்தை நிரப்ப புதுமைப்பித்தன் தகுதியானவர்தானா?
! இடத்தை நிரப்பலாம்; தகுதியைப்பெற முடியாது.
பி.கு.: அவர் புதுமைப்பித்தன் அல்ல, புலமைப்பித்தன்.

○ வெற்றிவாகை?



○ நளின நகைச்சுவை



○ ராஜ. சௌந்திரன், ஈரோடு—10.
? மீண்டும் கறுப்பு வெளுப்பு படம் எடுக்கப் போகும் பாலசந்தரின் துணிச்சல் பற்றி...?
! வண்ண மயமான எதிர்பார்ப்புகளைத் தூண்டுகிறது.

○ ஆர். அப்துல்சலாம், திருச்சி.
? சென்னையில் இப்போது எதற்கெல்லாம் பஞ்சம்?
! எதற்குப் பஞ்சம் இல்லை என்று கூறுவது எளிது — லஞ்சம்.

○ அ. அன்பழகன், அந்தணப்பேட்டை.
? சுப்பிரமணியசுவாமி புதுக் கட்சி தொடங்கி விட்டாரே?
! யார் வேண்டுமானாலும் கட்சி ஆரம்பிக்கலாம். ஆனால் இப்படி ஒவ்வொருவரும் சொந்த பிராபல்ய மோகம் கொண்டு உதிரி உதிரியாகக் கட்சிகளை ஆரம்பிப்பதால் என்ன சாதிக்க முடியும்? நாட்டுக்கு என்ன லாபம்? என்று யோசிப்பது நலம்.

○ மு. சிவஞான முருகன், ஸ்ரீவைகுண்டம்.
? அமெரிக்காவில் ரீகன் மீண்டும் வெற்றி வாகை சூடுவாரா?
! ......வார்!

○ கே. ராஜகோபாலன், சென்னை.
? தராசு பெயரால் ஒரு மாவட்டம் அமைத்தால் என்ன?
! பேஷாக அமைக்கலாம். ஆனால் நான்



○ டெட்லி லாவிஸ்



○ இடம் நிரப்பலாம்

வாழ்கின்ற இடத்தை தராசு மாவட்டம் என அழைப்பதா அல்லது நான் பிறந்த ஊரைச் சுற்றி மாவட்டம் அமைப்பதா என்ற மாபெரும் பிரச்னைதலைவர்களின் மூளையைக் குழப்புமே என்றுதான் யோசிக்கிறேன்.

○ கே. கணேஷ், சென்னை—6.
? அதிர்ஷ்டத்தை நம்பலாமா?
! என்னைவிடத் திறமைசாலிகளும் என்னை விட உழைப்பாளிகளும் எள்ளளவு கூட முன்னேற முடியாதிருப்பதைப் பார்க்கும் போது அதிர்ஷ்டத்தில் நம்பிக்கை வைக்கத்தான் வேண்டியிருக்கிறது.
(உபயம்: எஸ். பி. முத்துராமன் —நேரம் நல்ல நேரம் நிகழ்ச்சியில்.)

○ பி. ஆர். பார்த்தசாரதி, மன்னார்குடி.
? தராசு ஸார், இத்தனை நாள் மௌனம் ஏன்? மன வாசமா? வனவாசமா?
! இரண்டுமில்லை, ஒரு ஞானவாசம்.

○ காழி. க. இளங்கோ, நந்தியநல்லூர்.
? அரசியல்வாதிகளுக்கும் சோதிடர்களுக்குமுள்ள ஒற்றுமைகள் யாவை? குறைந்த பட்சம் மூன்று கூறுங்களேன்?
! நாஞ்சில் மனோகரன்; நாஞ்சில்மனோகரன் நாஞ்சில் மனோகரன்.

○ லட்சுமி நடராஜன், திருப்பூர்—1.
? ஊருக்குப் பலன் சொல்லும் பல்லி, தானே விழுமாம் கழனிப்பானையிலே... என்.டி.ஆர். ஏழரை லட்சம் வருமானத்தை மறைத்ததாகக் கண்டுபிடிக்கப்பட்டுள்ளதாமே?
! என். டி. ஆர். பல்லி தானே விழுந்ததா? அல்லது வேண்டுமென்றே தள்ளிவிடப் பட்டிருக்கிறதா?

○ ஜெல்பெல், பம்பாய்—89.
? இளமையைப் பாழ்படுத்துவது எது?
! பலவீனமான மனம்.

○ எஸ். கே. ஸ்ரீரங்கம்.
? ரோஜர்மூர், ஷீன்கானரி — ஒப்பிடுக.
! ரோஜர்மூர் நடிப்பு ஜோர்தான். என்றாலும் ஷீன்கானரியின் நளினமான நகைச்சுவை கூடுதல் ஜோர்!

★ ரூ. 10 பரிசு பெறுபவர்:

ஏ. குமார்,
12—ஏ, தேசியானியம் தெரு,
காஞ்சீபுரம்—1.

## வெள்ளித்திரை

# 24 மணி நேரம்

அது என்ன 24 மணி நேரம்?

ஊரில் ஒரு பெரிய மனிதர். மனத்துக்குப் பிடித்த பெண்களை ஆள்கிறார். விஷயம் வெளியே தெரியாமல் இருக்க அந்தப் பெண்களை கத்தி, துப்பாக்கி, கயிறு போன்ற சமாச்சாரங்களால் மூச்சிழக்கச் செய்கிறார். இதைத் தட்டிக் கேட்கப் புறப்படும் நிருபரின் மனைவியும் அதே(ா) கதிக்கு ஆளாக, நிருபர் பொய்க் கொலைக் குற்றம் சாட்டப் பட்டு, சிறையில் அடைபட்டு, தப்பிவந்து பெரிய மனிதருக்கு ஃபோன் செய்கிறார்.

'இருபத்து நான்கு மணி நேரத்தில் உன்னைக் கொலை செய்கிறேன் பார்!' கொலை செய்கிறாரா, இல்லையா?

அது படத்தில் பார்க்க வேண்டிய விஷயம்.

கதை என்னவோ பழைய பஞ்சாங் கத்தைப் புரட்டிப் பார்த்து எழுதினதுதான் என்றாலும், சொல்லுகிற முறை இருக்கிற தல்லவா?

மணிவண்ணன் சொல்லியிருக்கிறார்.

நெஞ்சைப் படபடக்க வைக்கும்காட்சிகள் சில.

யோகன் சர்வர் வேடத்தில் ட்ரேயையும், ட்ரேக்கு அடியில் துப்பாக்கியையும் பிடித்துக் கொண்டு, குதிரையை இழுக்கத் தகுந்த நேரத்திற்காகக் காத்திருக்கையில் ஒரு கட்டிப் பெண் அந்தத் துப்பாக்கியைப் பார்த்து விட்டு 'மாமா, அந்தத் துப்பாக்கி யைக் காட்டுங்க மாமா' என்கிறதே, அத்தனை பேர் மத்தியிலும் — இது மாதிரிக்கு ஒரு காட்சி.

அபாரமான உயரமும், சாந்தமான முகமும், அரையே அரைக்கண்ணாடியும் வெளுத்த தலையும், ஜிப்பாவும், கம்பீர மான நடையும் — சத்யராஜ் பூனை பாலைக் குடிக்கவே போவதில்லை என்று நினைத்தது எவ்வளவு தப்பு? அடுத்த காட்சியிலேயே புள்ளி மானாய் உலவிய இளவரசியைச் சேதப் படுத்தும் நேரத்தில், அந்த 'வயதான' மனிதரின் கைகளில் தான் எவ்வளவுபரபர! முழுக்க முழுக்க சத்யராஜ் படம் என்று சொல்லும் அளவுக்கு மனிதர் கொளுத்து



# சபாஷ்

வினு சக்கரவர்த்தி, விஜய்காந்த், ராதாரவி, ராஜசுலோசனா, சசிகலா இராம நாராயணன் என்று எல்லோருமாய் சேர்ந்து சபாஷ் வாங்கப் பார்க்கிறார்கள். ஒரு கிராமம். கிராமத்திற்குப் பெண் தேடி வருகிற டோபாக் குடுமி வைத்த பட்டணத் தானும், அவனுடைய டோபாக் குடுமி வைத்த கிரிமினல் வக்கில் அப்பாவும்.



கதாநாயகியின் அண்ணா பெரியபண்ணை. பண்ணை என்றால் தில்லுமுல்லு. அந்தத் தில்லுமுல்லுவை சம்ஹாரம் பண்ணும் கதாநாயகன். பச்சாதாபத்தைப் பெறுவதற் காக நாயகனை ஒருதலைக் காதல் செய்து எச்சில் இலை கிடைக்காமல் ஏங்கிப் பின் பண்ணையால் கற்பழிக்கப்பட்டு, பண்ணையைச்

ஒர், 'என் காரக்டரையே புரிஞ்சிக்கலே யேடா' என்று மூச்சுக்கு மூச்சு பிரலாபிப் பவர், காரெக்டரை வெகுசரியாகப் புரிந்து கொண்டிருக்கிறார்.

இளவரசி, நளினி, சொப்னு என்று நடிகைகளைத் தூவியிருக்கிறார்கள். அவ ரவர்கள் அவரவர் பங்கைச் செய்திருக் கிறார்கள்.

இரண்டு பாடல்கள்.

முதல் பாடல் குளியலும் கிளுகிளுப்பு மாய் நழுவுகிறது.



இரண்டாவது பாடல் சண்டையும், சதையுமாய் (ஜோதிலக்ஷ்மி, ஜெயமாலினி, அனுராதா) ஓடுகிறது.

இளையராஜாவுக்கு ஸ்கோப் முழுக்க ரீ-ரெக்கார்டிங்கில்தான்.

ஜெயிலில் மோகன் முன் கதையை ஆரம் பிப்பதாகட்டும், வெளியே தப்பி ஓடிவருகிற ஸீன் ஆகட்டும், ஜெயிலர் ஜெய்சங்கர் துரத்திச் சண்டை போடுவதாகட்டும், சத்ய ராஜ் — மோகன் கண்ணாமூச்சி ஆகட்டும்— சம்பவங்கள் மேல் சம்பவங்களாய் விறுவிறு வென்றுதான் ஓட்டம் பிடிக்கிறது படம்!

திருஷ்டி என்று ஒன்று வேண்டாமா?

பெரிய ரிசப்ஷன் பார்ட்டியாம். அதில் நடுவில் சத்யராஜாம். சுற்றிவர போலீ ஸாம். மோகன் சுடுவாராம். எல்லோர் நடுவிலும் ஓடி ஓடிச் சுடுவாராம். இன்ஸ் பெக்டரிலிருந்து, கான்ஸ்டபிள் வரை மோக னுக்கு பந்தோபஸ்து அளிக்கிற மாதிரி பின்னாலேயே வருவார்களாம். என்ன மணிவண்ணன் ஸார் இது?

அப்புறம் அந்த வடிவுக்கரசி பாத்திரம்?

சத்யராஜைக் கொல்லப் போகிறேன் என்றதும் அவர் திகிலடைவதாய்க் காட்டு வதும், கடைசிக் காட்சியில் எல்லாவற்றிற் கும் சாட்சியாய் நிற்பதும் — அவர் வேறு ஏதோ முன்கதைச் சுருக்கம் வைத்திருக்கிறார் என்று நம்ப வைத்து — கடைசியில் வெடிக் காத யானைவெடி மாதிரி ஆகிவிட்டது அந்த காரெக்டர் — உண்டா இல்லையா?

ஃபியர் ஓவர் தி ஸிடியில் வருகிறமாதிரியே கூரையில் ஓடுகிற காட்சி இதிலும் வந்தாலும் கூட, படத்தை அலுப்புத் தட்டாமல் கொண்டு போயிருக்கிற விதம் இருக்கிறது பாருங்கள்—

அது போதும், படத்தை நிற்கவைக்க.

—ஜெயமன்மதன்



கட்டுத் தாலும் கட்டுக் கொண்டு உயிரை விடுகிற ஒரு பாத்திரம்.

கதையை நன்றாகத்தான் பண்ணக் கற்றுக் கொண்டு இருக்கிறார்கள்.

'மவனே, என்னுடா இந்த ஊர்ல எச்ச இலேக்கு இந்த அலே அலேயறாங்க' —வசனம் கேட்கக் கொஞ்சம் நாராசமாக இருந்தாலும் சிரிப்பை வரவழைப்பதென் னவோ வாஸ்தவம்தான்.

கொட்டாங்கச்சியில் காதல் கடிதத்தை வைத்து வாய்க்காலில் அனுப்ப, அதுகைமாறி வேறு இடத்திற்குப் போக — ஹீரோ தவிக்க, எவ்வளவோ படங்களில் இந்த மாதிரி பார்த்தாலும் அலுப்பதில்லை. இதிலும் அலுக்கவில்லை.

திண்ணையில் காலோடு கால் சேர்த்துவினு வும், சந்திரனும் படுத்திருக்க விஜய்காந்த் இன்னொரு மூலையில் சுருண்டிருக்க, வீட்டுக் குள்ளிருந்து சந்திரனின் மனைவி வந்து தட்டி எழுப்ப—

விஜய்காந்த் — சசிகலா ஒரு பக்கம்.

வினுசக்கரவர்த்தி. ராஜகலோசனு ஒரு பக்கம்.

சந்திரன் ஜோடி ஒரு பக்கம். பற்றும் பற்றுததற்கு எரிகிற தணலுக்குப் பக்கத்தில் உராய்கிற அரை நிர்வாண ஜோடி ஒரு பக்கம்.

விரசமான நகைச்சுவையே — உன் பெயர் தான் இராம நாராயணனே? இவ்வளவுக்கும் பின்னால் கோயிலில் திரை போட்டுக் கொண்டு அனுராதாவின் ஆட்டம் வேறு.

சங்கர்—கணேஷ் இசையில் 'மச்சமுள்ள பச்சைக்கிளி' பாட்டு ஒ. கே.

அங்கங்கே ரசிக்கிற மாதிரி இரண்டொரு காட்சிகள், பரந்த ஆகாயத்தில் மேகச் சிதறல் மாதிரி. அதற்காக இரண்டரை மணி நேரத்தைச் செலவழித்துக் கொண்டு உட்கார வேண்டுமா என்பது தான் யோசனை!

## அஞ்சலி

ராமநாதபுரம் மாவட்டத்தில் பத்தாண்டுகளுக்கு முன்னர் கடும் பஞ்சம் ஏற்பட்டது. ஆடு, மாடுகள் கூட சாப்பிடாத ஒரு வகையான கிழங்கு அந்தப் பகுதியில் விளைந்து கொண்டிருந்தது. வெய்யில் கொளுத்தினாலும், மழையடித்தாலும் இந்தக் கிழங்குச் செடிகள் வளரும். உணவுப் பற்றாக்குறை கடுமையாக இருக்கவே மக்கள் இந்தக் கிழங்கைச் சாப்பிடத் துவங்கினார்கள். எந்தவிதமான ருசியும் இல்லாமல் லேசான விஷத் தன்மையையும் கொண்ட இந்தக் கிழங்கை மக்கள் தின்பதை அறிந்த ராமசுப்பையர், உடனே நிருபரை அனுப்பி உண்மைதானா என்று கண்டறிந்தார். அதே சமயத்தில் புதுக்கோட்டையிலும் கடுமையான பஞ்சத்தில் பட்டினிச் சாவுகள் ஏற்பட்டன. இது சம்பந்தமாகவும் படத்துடன் தினமலரில் செய்திகள் வெளி வந்தன. இந்த விஷயங்கள் வெளியே வந்தால் மக்களிடம் பீதி ஏற்பட்டு அரசுக்குக் கெட்ட பெயர் வரும் என்று கருதி அன்றைய ஆட்சியாளர்கள் பல்வேறு வழிகளை உபயோகித்து அந்தச் செய்திகள் தினமலரில் வரக் கூடாது என்று தடுக்கப் பார்த்தார்கள். ஆனால் ராமசுப்பையர் மசியவில்லை. செய்திகள் உண்மையாக இருக்கும் பட்சத்தில் வெளியிட்டே தீருவேன் என்று தைரியமாக அச்செய்திகளைப்



# மிரட்டலுக்குப் பணியாதவர்

படத்துடன் வெளியிட்டார். அந்தச் செய்திகள் வெளிவந்த அதே இதழில் அந்தச் செய்திகளுக்கு மறுப்பு விடுத்திருந்த அன்றைய முதல்வரின் பேட்டியையும் போட்டார். ஆனால் அரசு அன்றைய தினமலர் மக்களிடம் போய்ச் சேரக் கூடாது என்று கங்கணம் கட்டிக் கொண்டு, தமிழகம் முழுவதும் விற்பனையாளர்களிடம் இருந்த தினமலர் பிரதிகளைப் பறிமுதல் செய்தது. இதற்கெல்லாம் கலங்கவில்லை ராமசுப்பையர். உண்மை என்று மனதில் பட்டதை, தைரியமாக எடுத்து உரைப்பதற்கு அவர் தயங்கியதேயில்லை.

திருவிதாங்கூர் பகுதி தமிழ்நாட்டுடன் இணைவதற்கு முன்பு, மார்த்தாண்டம் என்ற இடத்தில் தமிழர்கள் மீது துப்பாக்கி சூடு நடந்தது. அந்தச் செய்தியைத் தைரியமாக வெளியிட்டார்; இதைத் தடுக்க போலீஸ் மிகவும் முயன்றது. பத்திரிகை விற்பனைக்கு வந்தது. ஆனால் மக்கள் தினமலரை ரோடில் நின்று கொண்டு படிக்கவே பயப்பட்டார்கள். போலீஸ் பலமுறை தினமலர் அலுவலகத்தைச் சோதனை போட்டது. ராமசுப்பையருக்குப் பிடிவாரண்ட் போடப்பட்டது. இந்தத் துப்பாக்கிச் சூட்டைப் பற்றி விசாரிக்க சங்கரன் என்ற நீதிபதி நியமிக்கப்பட்டார். அவர் பல நாட்கள் ராமசுப்பையரைக் கூண்டிலேற்றி விசாரணை செய்தார். நல்லவேளையாக மொழிவாரி மாநிலங்கள் பிரிந்தவுடன் திருவிதாங்கூர் தமிழ்நாட்டுடன் இணைந்தது. இந்த வழக்கும் ஒரு முடிவுக்கு வராமல் நிறுத்தப்பட்டது.

ராமசுப்பையருக்கு ஞாபக சக்தி மிகவும் அதிகம். ஐம்பது வருடங்களுக்கு முன்பு நடந்த சிறு விஷயத்தைக் கூட மறக்க மாட்டார். கணக்கில் புலி. பலர் மணிக் கணக்காகப் போடும் கணக்குகளை மனக் கணக்கிலே சில நிமிடங்களில் போடுவார்.

திருநெல்வேலியில் தினமலர் அலுவலகத்துக்கு எதிரில் ஒரு பஸ் ஸ்டாண்ட் இருந்தது. 'தினமலர் பஸ் ஸ்டாண்ட்' என்று மக்களால் சொல்லப்பட்டது. அன்றைக்கு ஆட்சியிலிருந்த சிலரின் தூண்டுதலால் அந்த பஸ் நிலையம் வேறு இடத்துக்கு மாற்றப்பட்டது. இவ்வாறு செய்யப்பட்ட போது ராமசுப்பையர் தமது பத்திரிகையில் ''மக்கள் இனிமேல் இந்த பஸ் ஸ்டாண்டை வேறு பெயர் கொண்டு அழைப்பார்கள். ஆனால் தின-மலர் என்ற இரண்டு சொற்களும் தமிழ் அகராதியிலிருந்து ஒழிக்க முடியாதவையாயிற்றே!'' என்று ஒரு நையாண்டிக் கட்டுரை எழுதினார். தினமலரில் வேலை செய்பவர்கள் இன்னும் அந்தக் கட்டுரையை ஞாபகம் வைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

தகவல், தொகுப்பு: ப்ரியன்

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600032. (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani Editor: K. Rajendran

**புதிது** நாசிலிர்க்கும் ஆரஞ்சுச் சுவையுடன் தனிச்சிறந்த சக்தி பானம்!





விட்டமின்-ஸி செறிந்தது




புதிய க்ளுகோன்-ஸி, க்ளுகோஸ் அடங்கியது. உங்கள் குழந்தை சுறுசுறுப்புடன் துள்ளிவிளையாட, விரைந்து சக்திதரும் வசதியான உணவு.

மேலும், விட்டமின்-ஸி செறிந்தது. விட்டமின்-ஸி குழந்தைகளின் பற்கள், எலும்புகள், திசுக்கள் இவை வளர உதவுகிறது.

நான்கு தேக்கரண்டி க்ளுகோன்-ஸி எடுத்து, ஒரு டம்ப்ளர் ஐஸ் தண்ணீரில் இட்டுக் கரைக்கவும். புத்துணர்ச்சியூட்டும் பானம் தயார்—நாசிலிர்க்கும் ஆரஞ்சுச் சுவையுடன்; தினம் இருமுறை உங்கள் குழந்தைக்கு இதைக் கொடுங்கள்.



# க்ளுகோன்-ஸி

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

# "These clothes are designed to have fun in : and you'd love to be a Party to this!"

**Sharmila says....**
"After working hard, I love to relax with my friends. Someone brings the food, someone else brings recorded music and before we know it, we're in the middle of a marvellous party. If, however, you are invited to a more formal one, this is what you need to wear:

**Party to a suit :** This suit is a knockout for a really formal occasion, when you would like the spotlight firmly on you. The pin-tucked shirt



front is really elegant, but the scene-stealer is the sweeping shawl collar on the dinner-jacket, faced with matt satin.

**Cocktail chic and Party Politics :** For equally formal occasions, and for business entertaining, when you need to impress with your wit and your appearance, the three piece suit is infallible





SHARMILA ROY CHOWDHURY

This one, in deep navy blue, can see you through a day at the office to cocktails at seven. Another suit, in Kenya-coffee brown, single-breasted, with asymmetrical pockets, was made for the happy hour.

**The Indian National Party Spirit :** At Mehfils or wedding receptions, or whenever you want to dress with traditional flair, try an Achkan churidaar. This one was made for very dignified



occasions, indeed, with the Achkan in cream with gold buttons down the front and churidaars to match. If the function is important enough, let it go to your head - wear a turban!



For those quieter evenings spent with armchair philosophers, or for kavi sammelans, this is perfect: an art-silk kurta-churidaar and a shell coloured Nehru jacket buttoned over it. If you can, wear it with - what else? - one perfect rose.

Where do you start selecting the fabric for your party wear? Here's an invitation - consider Graviera. Graviera is crease-free, wash 'n wear and has polyrich fast colour. Graviera, with it's all weather durability was made for all the seasons of the year: summer, monsoon and winter. Graviera makes sense not only rationally but emotionally, too: when you reach for Graviera, you choose luxury suiting, famous all over India and well-known for it's high standards of excellence. It makes you look and feel your best. You can't go wrong with Graviera."



*Sharmila Roy Chowdhury*

**People who Really know textiles, choose Graviera.**

GRAVIERA SUITING GR®

MAPP-BTM-84-27 ENG